*Guhananda Mandali Series No. 8*



# SRI SUBRAHMANYA TATVAM

(Tamil)

With A Foreword By

Sri T. P. Meenakshisundaram M. A. B. L., M. O. L.





Author:—N. Subramania Iyer Avl.

மண்டலி வெளியீடு—8

॥ श्रीः ॥

॥ ब्रह्मविदाप्नोति परम् ॥

# ஸ்ரீஸுப்ரஹ்மண்ய தத்துவம்.

(தமிழ்)

ஆவரண பூஜாக்கிரமமும்
நிர்க்குண அஷ்டோத்தரசத நாமாவளியும்
(நாகரி)

ஸ்ரீபிரஹ்ம வித்யா விமர்சினீ ஸபையின்
அக்ராஸனர்
பிரஹ்மஸ்ரீ அருட்கவி ந. சுப்ரமணிய அய்யர்
அவர்களாலியற்றப்பட்டது



ஸ்ரீகுஹாநந்த பிரஹ்மவித்யா விமர்சினீ மண்டலி
சென்னை.

 1940 [விலை ரு. 2—8




# முன்னுரை



திருவாளர் சுப்ரமணிய ஐயர் அவர்கள் எழுதிய "சுப்ரமணிய தத்துவம்" என்ற திருநூலை ஒருமுறை முதலிலிருந்து முடிவுவரை ஓதும் பெரும் பேற்றைப் பெற்றேன். திரு ஐயர் அவர்கள் வேதாந்தக் கருத்துக்களை விளங்க உரைக்கும் திறமை வாய்ந்தவர். மெய்யுணர்வு பெற்ற மேலோர். அன்புகனிந்த அருளுள்ளம் படைத்தவர். அதனால் தந்த்ரங்களின் உண்மைப் பொருளை உள்ளவாறு எடுத்து உரைக்கும் புதுமையை இவரிடத்துக் காணலாம். அந்த நெறி இந்தநாளில் மங்கி மறைந்து கிடக்கின்றது. அதனைப் போற்றி வளர்க்கும் அருந்தொண்டில் இப்பெரியார் இப்போது ஈடுபட்டுள்ளார்கள்.

உண்மைப் பொருளை உள்ளபடியே கூறினால் கேட்பாரில்லை. இதனைப் பண்டைப் பெரியோர்கள் மிக நன்றாக அறிந்திருந்தார்கள். அதுபற்றியே அக்கருத்துக்களை அழகிய கதைகளில் அமைத்துச் சொல்லி வந்தார்கள். புராணங்கள் இவ்வழியில் எழுந்த நூல்களேயாம். அவற்றின் உட்கருத்தையறியாமல் சண்டையிடுவோராலே அவை இழிநிலையடைந்தன. புராணக்குப்பையெனப் பலரும் ஏசலாயினர். தத்துவார்த்தமென்னும் உண்மைப் பொருளையே உணரவேண்டுமெனப் பெரியோர் முன்னாளிலிருந்தே வற்புறுத்தியுள்ளார்கள்.

" அப்பணி செஞ்சடை ஆதி புராதனன்
முப்புர மெரித்தன னென்பர் மூடர்கள்
முப்புர மாவது மும்மல காரியம்
அப்புர மெரித்தமை யாரறி வாரே"

எனத் திருமூலர் இவ்வாறே கூறியுள்ளாரன்றோ? அத்தகைய உண்மைப் பொருளை விளக்குதற்கு நம் மையர் முன் வந்தது நம் நல்லகாலமே யாகும். இப்போது அவர் எடுத்துக்கொண்டது ஸுப்ரஹ்மண்யதத்துவம். முருகன் தமிழ்நாட்டுத் தனிப்பெருங்கடவுள். திருப்புகழ் இந்நாளில் எங்கும் பரவிவருகின்றது. அவனைப்பற்றிய கதையின் உண்மைப்பொருளை அறியவேண்டும் அன்றோ? ஆகவே இந்நூல் இக்காலத்திற்கு மிகப் பொருத்தமானதே யாகும்.

கதையில் வரும் ஒரு பகுதியையும் விடாமல் விளக்கி வைத்துள்ளார் இவ்வாசிரியர். இவை அனைத்தும் இவர் கட்டிவிட்டவைகள் அல்ல. பழைய நூல்களின் கருத்தின்படி மரபு வழுவாது நன்கு விளக்கிவைத்துள்ளார்கள். அனைத்தும் வேதாந்தக் கருத்தில் வந்துமுடியக் காண்கிறோம். பாம்பன் சுவாமிகள் சுப்பிரமணியம் என்ற வியாசத்தில் 'கந்தபுராணம் அண்டத்தில் நடந்தகதையைச் சொல்லுவதோடு பிண்டத்தில் என்றும் சுருக்கமாக நடக்கும் கதையையும் விளக்குவதென' விளக்கியுள்ளார்கள். அவர் முறை சைவசித்தாந்தக் கருத்தைத் தழுவியது. இவ்வாறு எக்கொள்கையினரும் தமதெனக் கொள்ளும் தகுதியோடு விளங்குகின்றது முருகப் பெருமானது

பெருந்திறன். முடிந்த முடிவில் வேறுபாடின்மையே இத் தகுதியெனலாம்.

திரு ஐயர் அவர்களுடைய நூல் நம்முடைய மனதில் எழும் ஐயமெல்லாம் நீங்க அறிவுத்தினவு கெடச் சொல் லும் ஓர் நூலாகும். இதனையறிய தமிழ்முருகனை அறிய லாம்; தமிழை யறியலாம்; தமிழின்பமாம் பேரின்பம் அடையலாம். "சேரவாரும் சகத்தீரே"

இங்ஙனம்

தே. மீனாக்ஷிசுந்தரன்.

## சிறப்புக் கவி

செய்யாறு தாலுக்கா, புன்னைப் புதுப்பாளையம்

சமரஸ சன்மார்க்க சங்கக் காரியதரிசி,

வித்வான் திரு. ப. மாசிலாமணி முதலியார் இயற்றியது.

---

1. சீரார்ந்த நங்கடம்பச் செல்வனெனத் தமிழ்நாடர்
சிறப்பித் தோதப்
பேரார்ந்த சுப்ரமண்யப் பெருமானின் தத்துவத்தைப்
பிறங்கச் சொற்றுன்
ஏரார்ந்த சென்னைவள ரெழில்தத்வ விமர்சினியா
மிருஞ் சபைக்கும்
நாரார்ந்த நஞ்சபைக்கும் நாயகனு யமைந்த பெரு
நாவல் லோனும்.

2. அருட்கவியாம் சுப்ரமண்ய ஐயரெனு
மபிதான னருமை யாக
பொருட்டெரிந்து மன்பதைகள் புந்திமகிழ்ந்
திதையேற்றுப் போற்று வாரேல்
இருட்செறிந்த வஞ்ஞான மிரிந்தோட
மெய்ஞ்ஞான மினிது நோக்குந்
திருட்டி பெற்றுச் செவ்வேளின் திருவருளா
லென்னலத்தும் சிறப்பர் மாதோ.

## முகவுரை.

ஸ்ரீ ஸுப்ரஹ்மண்ய தத்துவமெனு மிந்நூல் ஸ்ரீஸத்குரு நாதரது கருணு நோக்கத்தால் பரிபூர்த்தியாகி வெளிவருகின்றது. குஹக்கடவுளின் ஸம்பந்தமாய் இத்தகைய நூலொன்று வெளிவர வேண்டுமென்பது எனது நெடுநாளைய அவாவாகும்.

இதில் குஹக்கடவுளின் உண்மையான லக்ஷணமாகும் பிரஹ்மஸ்வரூபம் நன்கு விமர்சிக்கப்பட்டுள்ளது. இவ்வாராய்ச்சிக்கு ஆதாரமாய் அடியேன் எடுத்துக்கொண்டது ஸ்ரீஸ்காந்தபுராணம், சங்கரஸம்ஹிதையேயாகும். இச்சங்கிதையின் முதல் ஐந்து காண்டங்களிலுள்ள முக்கியமான வொவ்வொரு கதாபாகத்தையும் நன்கு விமர்சித்துத் தத்துவார்த்தம் நிரூபிக்கப்பட்டுள்ளதோடு அதற்குச் சான்றுயுள்ள திருப்புகழ், கந்தரலங்காரம், திருவகுப்பு முதலியவற்றையும், வடமொழி சங்கரஸம்ஹிதையையும் பிரமாணமாய் எடுத்தாளப்பட்டுள்ளது அறியத்தக்கது.

ஆதலின், இவ்விமர்சம் எனது ஸ்வகபோலகல்பிதமன்று. எனது நாத பரம்பரையில் உபதேசக்கிரமத்தில் வந்துகொண்டிருப்பதேயாகும். நாளடைவில் இது மங்கிப்போய்விடுமோ வெனுமச்சத்தால், அங்ஙனம் போகாவண்ணம் வெளியிடப்பட்டது.

இதையியற்றுங்கால் ஸ்ரீமத் பாம்பன்ஸ்வாமிகள் அவர்களியற்றிய "ஸுப்ரஹ்மண்ய வியாஸம்" எனக்குப் பேருபகாரியாயிருந்தது.

இதன் இறுதியில், ஸ்ரீ அகஸ்தியஸம்ஹிதையில் கூறப்பட்டுள்ளபடி ஸ்ரீஸுப்ரமண்ய பூஜாயந்த்ரமும், ஆவரண பூஜாக்கிரமமும், நிர்க்குண அஷ்டோத்தர சதநாமாவளியும் நாகரிலிபியில் சேர்க்கப்பட்டுள்ளன.

இதனை யச்சிடுங்கால் வெகு ஸாவதானத்தோடு பிழைகளைப் பரிசோதித்துச் சிறப்புறச்செய்த பிரஹ்மஸ்ரீ S. ராமஸ்வாமி சாஸ்திரிகள் அவர்கட்கும், தமது சொந்த பிரசுரம்போல் பாவித்துத் தேவையான எல்லாச்சிறப்புக்களும் நன்கமைய அச்சிட்டுத்தந்த சென்னை, மைலாப்பூர் ஸ்ரீ பாலமனோரமா அச்சியந்திரச்சாலைச் சொந்தக்காரரும், எனது பரம நண்பருமாகிய பிரஹ்மஸ்ரீ C. சங்கரராம சாஸ்திரிகளவர்கட்கும் யான் என்ஞான்றும் நன்றி பாராட்டக் கடமைப்பட்டுள்ளேன்.

மற்றும், இவ்வெளியீட்டின் ஸம்பந்தமாய் பலர் அடியேனைத் தூண்டியுற்சாகப்படுத்தியும், சரீர சிரமமெடுத்துக்கொண்டு முள்ளார்கள். அவர்கட்கு எல்லா நலங்களுமுண்டாமாறு குஹேசன் கருணை புரிவாராக.

அன்றியும், அடியேனது வேண்டுகோளுக்கிணங்கி இதற்கோர் முன்னுரையைத் தந்து இதனைச் சிறப்புறச் செய்த ஸ்ரீமான் T. P. மீனாக்ஷிசுந்தரன், M.A.B.L., M.O.L. etc. அவர்கட்குச் சரவணபவன் நோயற்ற நெடுவாழ்வும், குறையற்ற செல்வத்தோடு மற்றெல்லா நலன்களுமுண்டாமாறு கருணை புரிவாராக.

இதில் சாஸ்திர விருத்தமாகப் பலபிழைகள் இருக்கக் கூடும். அவற்றை முற்றறிவாளராகிய முதுஞானிகள் அடி

யேன் மீது அருள் புரிந்து அறிவிப்பாராயின், யான் அவற்றை வந்தன பூர்வகமாய் ஏற்றுக் கொண்டு மறுபதிப்பில் திருத்தி வெளியிடச் சித்தமாயிருக்கின்றேன்.

இவ்வரிய காரியத்தில் அடியேனையீடுபடும்படி தூண்டிய ஸத்குரு நாதரது திருவடிகள் நன்கு விளங்கட்டும்.

எந்த சரணுநுக்கிரகத்தால் "ஸ்ரீ பிரஹ்ம வித்யா விமர்ஶினீ" யென்னும் பெயரோடு ஒரு ஸபை ஸ்தாபிக்கப்பட்டு அதன் மூலமாய்ச் சென்ற மூன்று வருடங்களாய்ப் பல நூல்கள் வெளிவந்தனவோ அவையனைத்தையும், அந்த ஸபையையும் ஸ்ரீகுஹாநந்த பாதுகைகளுக்கே அர்ப்பணம் செய்கின்றேன்.

ஆதலின், இனி வெளிவரும் வெளியீடுகளுக்கு ஸ்ரீ குஹாநந்த மண்டலியின் வெளியீடென்றும், சபைக்கு ஸ்ரீ குஹாநந்த பிரஹ்ம வித்யா விமர்ஶினீ மண்டலி யென்றும் பெயர் வழங்குவதாக.

சிவம்.

குஹாநந்த மண்டலி
25—12—1940

இங்ஙனம், விதேயன்.
ந. சுப்ரமண்ய அய்யர்.
சென்னை.

॥ श्रीः ॥

विमलप्रकाशात्मानन्दचरणारविन्दाभ्यां नमः ।

# ग्रन्थसमर्पणम् ।

ஸ்ரீமத் பரமஹம்ஸபரிவ்ராஜகாசார்யவர்ய-அவதூத-அதிவர்ணாஸ்ரமிகளாயும், பதவாக்யப்ரமாண பாராவார துரீணராயும், ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரராயும், சுத்தாத்வைத வேதாந்தபாஸ்கரராயும், ஸ்ரீவித்யோபாஸ்தியாகும் திருப் பாற்கடலுக்குப் பூர்ணசந்த்ரராயும், ஸ்ரீபதரிகாஸ்ரமத்தில் வஸிப்பவராயும், ஸ்ரீவிமலாநந்தநாதர், பிரகாசாநந்தநாதர், ஆத்மாநந்தநாதர் இவர்களை முறையே, பரமேஷ்டிகுரு, பரமகுரு, ஸ்வகுருவாய்ப் பெற்றவராயுமுள்ள ஸ்ரீகுஹா நந்தநாதராகும் அடியேனது ஸத்குருநாதருடைய திருவடித் தாமரைகளில் ஸ்ரீஸுப்ரஹ்மண்யதத்துவமாகு மிந்நூலைத் திரிகரணத்தூய்மையுடன் ஸமர்ப்பணம் செய்கின்றேன்.

यत्ताम्रपर्णीतटिनीसुजातं
हिमाद्रिशृङ्गे परमाप वृद्धिम् ।
मन्मानसाह्लादकरं त्रिवेण्यां
भजे गुहानन्दपदाम्बुजं तत् ॥ १ ॥

स्वात्मारामसुपञ्जरे सुविमले लीनं प्रकाशात्मकं
स्वच्छोद्भासिविमर्शनेऽतिमहिते हेतुं वरात्माभिधम् ।
स्वाकारस्य निरूपणेऽतिगहने हेतुं गुहात्माह्वयं
वन्देऽस्मद्गुरुनाथमण्डलमहं ब्राह्मे बिले संस्थितम् ॥ २ ॥

यद्वेदागमशास्त्रसारमवदत्तत्त्वं शिवायै शिवो
यद्वेदान्तसुलक्ष्यमङ्गजरिपोर्जातं ललाटाम्बकात् ।
यद्ब्राह्मीसुरदीर्घिकातपनजासंगे मयासादितं
तद्ब्रह्मण्यसमाह्वयं गुहपदं ध्यायामि मोक्षप्रदम् ॥ ३ ॥

यत्पीताम्बुधिकुम्भजादिमुनिभिर्ध्यातं तु दह्राम्बरे
यत्पीताम्बरधारिणः सहभवानेत्रस्य मोदंकरम् ।
यच्छान्ताद्रिसुमध्यगं सुमहसां ज्योतिःप्रदं शाश्वतं
तद्ब्रह्मण्यसमाह्वयं गुहपदं ध्यायामि मोक्षप्रदम् ॥ ४ ॥

यच्छान्तं शिवमद्वयं त्विति विदुर्वेदान्तवाचः परं
यच्छान्तास्त्वकथासनाम्बुजगतं ध्यायन्ति चित्खे परे ।
यच्छ्वेतारुणभव्जरन्ध्रकमले संस्थं महानन्ददं
तद्ब्रह्मण्यसमाह्वयं गुहपदं ध्यायामि मोक्षप्रदम् ॥ ५ ॥

यत्पृथ्व्यादिशिवान्ततत्वमभवद्यत् षण्णवत्यात्मकं
यद्वर्गाष्टकमातृकाकृति परं नादात्मकं चाभवत् ।
यत्सृष्ट्यादिसुपञ्चकृत्यकरणे पञ्चात्मकं चाभवत्
तद्ब्रह्मण्यसमाह्वयं गुहपदं ध्यायामि मोक्षप्रदम् ॥ ६ ॥

यद्भासा ग्रहतारचन्द्रहुतभुङ्मित्राः सदा भान्ति खे
यद्रूपा विधिविष्णुविश्वपतयः सेन्द्रादिदिक्पालकाः ।
यन्नित्यं निगमान्तलक्ष्यमचलं त्वेकं सदाख्यं विदु-
स्तद्ब्रह्मण्यसमाह्वयं गुहपदं ध्यायामि मोक्षप्रदम् ॥ ७ ॥

यत्सत्यं सकलान्तरस्थपरचिद्रूपं पराख्यं विदु-
र्यत्सन्मात्रनिजस्वरूपविभवं त्वेकं शिवाख्यं विदुः ।
यत्स्वाकारसुधाब्धिमग्नसुधियो जानन्ति सच्चिद्घनं
तद्ब्रह्मण्यसमाह्वयं गुहपदं ध्यायामि मोक्षप्रदम् ॥ ८ ॥

अनन्तमहिमोपेतचिदानन्दरसप्रदे ।
अनन्तबोधदे श्रीमद्गुहानन्दपदेऽर्पितम् ॥ ९ ॥

இங்ஙனம், விதேயன்,
சிதாநந்த சுப்பிரமண்யன்.

ஸ்ரீ ஸுப்ரஹ்மண்ய தத்துவம்

விஷய ஸூசிகை

பக்கம்.



ஆஸுர காண்டம் (96-108)

२२९२

श्रीगुरुचरणारविन्दाभ्यां नमः ।

श्रीमहागणपतये नमः ।

ओं तत्सत्परब्रह्मणे नमः ।

# ॥ श्रीसुब्रह्मण्यतत्वम् ॥

## ஸ்ரீஸுப்ரஹ்மண்ய தத்துவம்.

—:o:—

सत्यं ज्ञानं निर्विकारं ध्यानधिषण्यमहत्परम् ।
अगोचरं महाक्षाणां तं गुहं गहनं भजे ॥

हृदयकमलमध्ये भाति यच्चित्स्वरूपं
निखिलविबुधमृग्यं संसृतिध्वान्तभानुः ।
प्रणवमयमवेद्यं प्राणिनां प्राणिसंस्थं
प्रकृतिविलयरूपं नौमि तत्षण्मुखाख्यम् ॥

पद्मासुरार्दनमशेषमुनीन्द्रपूज्यं
सर्वामरेन्द्रमकुटोल्लसदङ्घ्रियुग्मम् ।
सर्वागमेड्यपरतत्वममुं षडास्यं
त्वामेव सद्गुरुमहं सततं नमामि ॥

यः सर्वसंसृतिभयापह एक ईड्यः
सद्यो मुमुक्षुभिरखण्डनिजस्वरूपः ।
सच्चिन्मयः परमनित्यसुखात्मको यः
त्वामेव सद्गुरुमहं सततं नमामि ॥

यत्पादपङ्कजविलोकनजातहर्ष-
बाष्पाम्बुसिक्ततनवो बहवो विमुक्ताः ।
नाद्यापि मातुरुदरं क्वचिदाप्नुवन्ति
त्वामेव सद्गुरुमहं सततं नमामि ॥

संसारदुःखदवपावकदह्यमानः
शान्त्यादिसद्गुणविहीनमनाः सकामः ।
मूढोऽस्मि तद्भवविमोचनकाङ्क्षयाद्य
त्वामेव सद्गुरुमहं सततं नमामि ॥

कामादिभिः षडरिभिः प्रबलैर्विशङ्कः
संपीड्यमान इह षण्मुख तावकोऽपि ।
एषोऽस्म्यनन्यशरणः परमात्मबन्धो
त्वामेव सद्गुरुमहं सततं नमामि ॥

स्कन्द त्वदीयचरितान्यखिलामयघ्ना-
न्यत्रास्ति को नु भुवि वर्णयितुं समर्थः ।
भूम्यग्निदिव्यसरितो विदुरेव शक्तिं
त्वामेव सद्गुरुमहं सततं नमामि ॥

श्रीकार्तिकेयगुहषण्मुखशक्तिपाणे
वल्लीसमेत शिखिवाहन तारकारे ।
श्रीदाक्षिणाननसमुद्भव पाहि नित्यं
त्वामेव सद्गुरुमहं सततं नमामि ॥

षण्मुखं द्वादशभुजं त्रिषण्नयनपङ्कजम् ।
कुमारं सुकुमाराङ्गं केकिवाहनमाश्रये ॥

नत्वाहं श्रीगुहानन्दनाथपादाम्बुजद्वयम् ।
स्कन्दतत्वं प्रवक्ष्यामि शान्ताद्रीशप्रसादतः ॥

## உபோத்காதம்

ஸ்ரீ ஸுப்ரஹ்மண்ய தத்துவ மெனப் பெயர்பெறும் இந்நூல், பரமசிவன் புதல்வனென்றும், சரவணபவனென்றும், தேவஸேனாதிபதியென்றும், தாரகாரியென்றும், சூராந்தகனென்றும், வல்லீகாந்தனென்றும் பலபடியாய்த் தேச, கால, விவகாரங்களுக்குச் சம்பந்தப்படுத்திப் புராணாதிகளில் கூறப்படும் ஸ்ரீகுஹக்கடவுளின் உண்மைச் சொரூபத்தை நன்கு விளக்குவதொன்றாகும்.

உண்மைச் சொரூபத்தை விளக்கும் ஒன்றெனின் அக்குஹனுக்கு உண்மையல்லாத வடிவமும் ஒன்றிருப்பதாக நினைக்கக்கூடுமன்றோ? ஆம்; உண்மையல்லாத ஒரு ஸ்வரூபமும் அவருக்குண்டு. அதுதான் பெரும்பாலும் புராணாதிகளில் (தேசகால விவகாரங்களுக்குச் சம்பந்தப் படுத்திக்) கூறப்பட்டிருப்பது.

வேத, வேதாந்த, சாஸ்த்ர, புராண, இதிஹாஸ, நிகமாகம, தந்த்ராதிகளனைத்திற்கும் ஸச்சிதாநந்த பூர்ணாத்வைத அஸங்க அகண்ட நிர்க்குணப் பிரஹ்மத்தில் தான் தாத்பரியமென்பது பரமஸித்தாந்தமாகும். ஆகவே உண்மையாயுள்ளது ஒரேவஸ்து. அது பரமசிவனாகுக, குஹனாகுக, சித்சக்தியாகுக, மற்றும் கணேச ஸூர்யாதிகளாகுக. இங்ஙனமன்றி ஒன்றுக்கு மேற்பட்டதேவர்களைக் கூறும் விவகாரக்கூற்று பரமஸித்தாந்தமாகும் உண்மைக்கு மாறான கற்பனையே யாகும்.

என்றும் மாறாத உண்மைச் சொரூபத்தை ஸ்வரூப லக்ஷணமென்றும், தேசகாலவிவகாரவிவஸ்தைகளுக்குச் சம்பந்தப்படுத்திக் கூறப்படும் கற்பனாவடிவத்தைத் தடஸ்தலக்ஷணமென்றும் சாஸ்திரங் கூறும்.

வாக்குக்கும் மனத்திற்கும் எட்டாததும், ஸர்வதேச, ஸர்வகால, ஸர்வவியவஹார வியவஸ்தைகளுக்கு அதீதமாய் விளங்குவதுமான ஒன்று, கற்பனையாகும் தடஸ்த லக்ஷணத்தோடு ஏன் விளங்கவேண்டும்? சாஸ்திராகம புராண இதிஹாஸாதிகளும் ஏன் அங்ஙனம் கூறவேண்டும்? எனின்,

यतीनां मन्त्रिणां चैव ज्ञानिनां योगिनां तथा ।
ध्यानपूजानिमित्तं हि तनूं गृह्णाति लीलया ॥

என்னும் பிரமாணத்தின்படி யதிகள், மந்த்ரஜபம் செய்பவர்கள், ஞானிகள், யோகிகள் முதலியவர்கள் தியானிப்பதற்கும் பூஜிப்பதற்கும் அப் பரப்பிரஹ்மமானது விளையாட்டாக ஒரு சரீரத்தைக் கிரஹித்துக்கொண்டு விளங்குகின்றது என்றேற்படுகின்றது. அன்றியும்,

निर्विशेषं परं ब्रह्म साक्षात्कर्तुमनीश्वराः ।
ये मन्दास्तेऽनुकम्प्यन्ते सविशेषनिरूपणैः ॥

वशीकृते मनस्येवं सगुणब्रह्मसेवनात् ।
तदेवाविर्भवेत्साक्षादपेतोपाधिकल्पनम् ॥

தேசகால வியவகாராதி விசேஷணங்களோடு கூடிய தடஸ்தலக்ஷண ஸகுணப் பிரஹ்மோபாஸனையால்தான் ஸ்வரூபலக்ஷண நிர்க்குணப் பிரஹ்மத்தை யறியமுடியும்; ஆதலின், நிர்க்குணப் பிரஹ்மத்தை யறிவதற்கு ஆற்றலில்லாத மந்தமதியினர்களின் பொருட்டுத் தடஸ்த லக்ஷணமுடைய ஸகுணப்பிரஹ்மம் புராணாதிகளில் நிரூபிக்கப்பட்டிருக்கின்றது. ஆகவே குஹப்பிரஹ்மத்திற்குச் சிவகுமாரன், ஷண்முகன், சரவணபவன், தேவஸேனாதிபதி, தாரகாரி, கிரௌஞ்சபித், சூராந்தகன், வல்லீபதி யென்பனவாதி நாமங்களால் கூறப்படும் ஸ்வரூபம் (கற்பனை வடிவமாகும்) தடஸ்தலக்ஷணமேயாகுமென்றும், குமாரத்துவம், ஷண்முகத்துவம், சரவணம், தேவஸேனை, தாரகன், கிரௌஞ்சன், சூரபத்மன், வல்லீ யென்பனவற்றின் அத்யாத்மதத்துவம் முதலியவற்றின் விசாரபூர்வகமாய் நிர்க்குண குஹஸ்வரூபத்தை நிர்ணயம் செய்வதே தாத்விக ஸ்வரூபலக்ஷணமாகுமென்றும் இந்நூல் கூறும். தடஸ்த லக்ஷணத்தை வாச்சியார்த்தமென்றும், ஸ்வரூபலக்ஷணத்தை லக்ஷியார்த்தமென்றும் பெரியோர் கூறுவர்.

குஹப்பிரஹ்மத்தின் ஸ்வரூபலக்ஷணம்.

सत्यं ज्ञानमनन्तं ब्रह्म । यो वेद निहितं गुहायां परमे व्योमन् । सोऽश्नुते सर्वान्कामान् सह ॥ (தைத்-ஆந. வல்லி.)

(ஹ்ருதயகுஹையாகும் பரமாகாசத்தில் ஸச்சிதாநந்த பிரஹ்மஸ்வரூப குஹனை யெவன் அறிகின்ருனே அவன் ஸர்வகாமனைகளையும் அடைகின்ருன்).

गुहेति दहराकाशो वेदान्तेषु हि पठ्यते ।
तन्निष्ठोऽयं गुहः प्रोक्तः सर्वहृत्कमलासनः ॥

(வேத வேதாந்தங்களில், தஹராகாசமானது குஹை யென்று கூறப்பட்டுள்ளதன்ருே? ஆதலின், ஸகலபிராணிகளின் ஹ்ருதயகமலங்களில் வஸிப்பவன் குஹன் எனப்படுகின்றனன்).

மேலும் அக்குஹஸ்வரூபமானது,

காணெணுதது, உருவோடருவது,
பேசொணுதது, உரையேதருவது,
காணு நான் மறைமுடிவாய் நிறைவது, பஞ்சபூதக்
காயபாசமதனிலே யுறைவது,
மாயமாயுடலறியா வகையது,
காயமானவரெதிரே யவரென வந்துபேசிப்
பேணெணுதது, வெளியேய் ஒளியது,
மாயனுரயனறியாவகையது,
பேதபேதமொடுலகாய் வளர்வது, விந்துநாதப்
பேருமாய் கலையறிவாய் துரியவ
தீதமானது, வினையேன் முடிதவ
பேறுமாயருள் நிறைவாய் விளைவது—ஒன்று நீயே.

என்னும் பிரமாணத்தினுலும்,

வாசித்துக் காணெணுதது
பூசித்துக் கூடொணுதது
வாய்விட்டுப் பேசொணுதது— நெஞ்சினுலே

மாசர்க்குத் தோணுதது
நேசர்க்குப் பேரொணுதது
மாயைக்குச் சூழொணுதது— விந்துநாத
ஓசைக்குத் தூரமானது
* மாகத்துக் கீறதானது
லோகத்துக் காதியானது (ஒன்று நீயே).

என்னும் பிரமாணத்திஞலும்,

ஓலமறைகள் அறைகின்ற வொன்றது
மேலை வெளியில் ஒளிரும் பரஞ்சுடர்
ஓது சரியை க்ரியையும் புணர்ந்தவர் எவராலும்
ஓத அரிய துரியங் கடந்தது
போத அருவ சொருபம் பிரபஞ்சமும்
ஊனு முயிரு முழுதுங் கலந்தது சிவஞானம்
சால உடைய தவர்கண்டு கொண்டது
மூல நிறைவு குறைவின்றி நின்றது
சாதி குலமு மிலதன்றி யன்பர் சொ னவியோமம்
சாரு மனுப வரமைந்த மைந்த மெய்
வீடு பரம ஸுகஸிந்து (ஷண்முக
பால குமர குஹகந்த புங்கவன் வடிவாமே.)

என்னும் பிரமாணத்திஞலும் நன்கு விளக்கின்றதன்றோ?

இத்தகைய உண்மைச்சொரூபமுடைய ஷண்முகசிவ, ஸுப்ரஹ்மண்ய, குஹப்பிரஹ்மமானது அன்பர்க்கு அருள் புரியும் நிமித்தம் ஒரு சரீரவடிவத்தை யேற்றுப் பிறந்தது போலவும், பலசெயல்களைச் செய்தது போலவும் புராணதிகளில் கூறப்பட்டுள்ளது. நிஷ்களசிவம் அல்லது பிரஹ்

* மாகம் = ஆகாசம்

மம் ஸகளீகரித்த நிமித்தம், தேசம், காலம், முதலியவற்றைத்தான் புராணங்கள் கூறுகின்றன. இவ்விஷயத்தை,

அருவமும் உருவமாகி
யனாதியாய்ப் பலவாயொன்றாய்ப்
பிரமமாய் நின்ற ஜோதிப்
பிழம்பதோர் மேனியாகிக்
கருணைகூர் முகங்களாறுங்
கரங்கள் பன்னிரண்டுங்கொண்டே
ஒருதிருமுருகன் வந்தாங்
குதித்தனன் உலகமுய்ய"

என்னும் பிரமாணம் நன்கு வலிவுறுத்துகின்றது.

புராணம் என்னும் பதத்திற்கு அநாதியென்பது பொருளாகும். இதில் பக்தர்களின் அன்பும், சிவம் அல்லது பிரஹ்மத்தின் அருளும் விரிவாய் நிரூபிக்கப்பட்டுள்ளன. பக்தர்களின் கண்டிதமான வியஷ்டி அன்பானது கிரமக் கிரமமாகப் பெருகி அகண்ட ஸமஷ்டி அருள்வடிவ சிவ அல்லது பிரஹ்மஸ்வரூபமாகின்றது. அன்பு அருள்வடிவமாகும் இந்நிலைதான் சிவயோகம் அல்லது ஜீவப்பிரஹ்மைக்கியமெனப்படும்.

ஸகள அல்லது ஸகுணப்பிரஹ்மத்தின் (தடஸ்த) லக்ஷணத்தையாராயின், அது, நிஷ்கள அல்லது நிர்க்குண ஸ்வரூப லக்ஷணமாகவே சேஷிக்கின்றது. ஆகவே ஸுப்பிரஹ்மண்யதத்துவ மென்னும் இந்நூலும், ஸ்ரீகுஹக்கடவுளின் அவதாரம், பாலலீலைகள், நான்முகனைச் சிறையிடல், ஸேநாநீயாதல், தாரகவதம், கிரௌஞ்சபேதனம், சூரன் ஸிம்ஹமுகன் முதலிய அஸுரர்களை வதைத்தல், தெய்வயானையை மணத்தல், தேவர்க்குச் சுவர்க்கவாஸமருளல், இந்திரனுக்கு ஸ்வாராஜ்யமளித்தல், வள்ளியம்

மையை மணத்தல் முதலிய கதாபாகங்களாகும் ஸகுண ஆக்கியாயிகைகளின் மூலமாய் ஏற்படும் தடஸ்தலக்ஷண த்தை நன்கு விசாரித்து, உள்ளீடாயுள்ள ரஹஸ்ய ஸ்வரூப த்தை விளக்கி, நிர்க்குணஸ்வரூபத்தைப் பிரகாசிப்பிக்கச் செய்வதாகும்.

ஸ்ரீஸுப்பிரஹ்மண்ய ஸ்வரூபத்தின் அவதாரம், அவதரிப்பதற்குக் காரணம் முதலிய சரித்திரங்கள் பதி னெண் மஹாபுராணங்களிலொன்ருகிய ஸ்ரீஸ்காந்தபுராண த்திய ஆறு ஸம்ஹிதைகளில் ஒன்ருகிய சங்கரஸம்ஹிதை —சிவரஹஸ்ய கண்டத்தில் உள்ளனவாகும்.

புராணங்களில் அந்தர்க்கதமாயுள்ள எல்லாக்கதை களுக்கும் ஒருதத்துவம் இருந்தே தீரவேண்டும்; ஏனெ னின் புராணங்கள் வேதங்களின் உபப்பிரஹ்மணங்களே யாகும். வேதத்தின் அர்த்தத்தை நன்கு விளக்குவதற் கும், வேதத்தில் அதிகாரமற்றவர்களுக்கு வேதத்திலுள்ள துரூஹமான சிலவிஷயங்களைச் சுலபமாய்க் கதைகளின் மூலமாய் விளக்குவதற்குந்தான் புராணங்கள் ஏற்பட்டன.

வேதம் கர்மோபாஸன ஞானகாண்டங்களெனப்படும் மூன்று பெரும் பிரிவுகளையுடைதாகும். இவற்றுள் கர்ம காண்டத்தின் உபப்பிரஹ்மணங்கள் மனுஸ்ம்ருதி முத லிய தர்மசாஸ்திரங்களும், உபாஸன ஞான காண்டங்க ளின் உபப்பிரஹ்மணங்கள் புராணங்களுமாகும். ஆகவே புராணதிகளுக்குப் பிரஹ்மப்பிரதிபாதகமாகும் ஞான காண்டத்திலும், அப்பிரஹ்மத்தையடைதற்குச் சாதக மாகும் உபாஸன காண்டத்திலும் தாத்பர்யமுளது. ஆக வே ஸ்கந்த சரிதமானது புராணந்தர்க்கதமாயிருக்குங் காரணத்தால் அச்சரித்திர தத்துவமானது ஞானகாண்ட

தத்துவமாகும் ஆத்மப்பிரஹ்மைக்கிய அத்விதீயஸ்வரூபமே யாகுமென்பதில் யாதோரையமுமில்லை.

முற்கூறியபடி, புராணத்திலுள்ள ஸ்கந்த சரித்திரமானது உண்மைவடிவ நிஷ்களத்தன்மையோடும் கற்பிதவடிவ ஸகளத்தன்மையோடுங் கூடி விளங்குகின்றது.

"பத்தித் திருமுகமாறுடன் பன்னிரு தோள்களுமாய்த்
தித்தித் திருக்கு மமுதுகண்டேன் செயல் மாண்டடங்கப்
புத்திக் கமலத் துருகிப் பெருகிப் புவனமெற்றித்
தத்திக் கரைபுரளும் பரமாநந்த ஸாகரத்தே."

என்னும் கந்தரலங்காரச் செய்யுளில் முருகனது ஸகள நிஷ்கள ஸ்வரூபங்கள் இரண்டும் கூறப்பட்டுள்ளன. "பரமாநந்த ஸாகரத்தில் ஷண்முக வடிவத்தைக் கண்டேன்" என்னும் வாக்கியத்தில் பரமாநந்தவடிவம் ஸ்வரூபலக்ஷணமாகும் உண்மை ஸ்திதியென்றும், ஷண்முகவடிவம் தடஸ்தலக்ஷணமாகும் தேசகால நிமித்தாதிகளால் கற்பிக்கப்பட்ட அல்லது தானே ஸ்வீகரித்துக்கொண்ட கற்பனுவடிவமென்றும் ஏற்படுகின்றன.

இங்ஙனம், உண்மையும் பொய்யுங் கலந்துவிளங்கும் கதைகளில் கற்பனைக்கு நிமித்தங்களாகும் தேசம், காலம், உபாதி, நிமித்தம் முதலியவற்றை நீக்கி உண்மைச் சொரூபத்தை யாராய்வதே தத்துவ விமர்சமாகும்.

தேசமாகும் அண்டத்தில் காலம், நிமித்தம் முதலியவைகளால் நடைபெற்றனவாய்க் கூறப்படும் எல்லாப் புராணகதைகளையும், அக்கதாநிகழ்ச்சிக்கு நிமித்தர்களாயுள்ள தேவாஸுர, யக்ஷராக்ஷஸ, நராதி யாவரையும், காரணங்களையும் பிண்டமாகும் தன்னிடத்தில் தன் செயல்களாகவும் தனது மனோவ்ருத்திவிசேஷங்களாகவும்

பிரவ்ருத்தி நிவ்ருத்திகளாகவும் கருதுதலே பரம ரஹஸ்யமும் உண்மையுமாகும்.

இங்ஙனம் கருதாது பாஹ்யமாகவே நடந்தனவாகக் கருதப்படுமேயாயின் காலம், தேசம், வஸ்து முதலியன உண்மையாய் "**नान्यत्किंचन मिषत्**" (ஆத்மாவைவிடப் பின்னமாய் ஒன்றும் இல்லை; இருப்பின் அது பொய்யே என்றும்), "**नेह नानास्ति किंचन**" (இங்கே நானா வென்பது ஒரு சிறிதுமில்லை) என்றுங் கூறும் ஞானகாண்ட பிரமாணங்களுக்குப் பங்கம் வருமன்றோ? இங்கே பிண்டமென்பது ஸ்தூல, ஸூக்ஷ்ம, காரண சரீரங்களாமென்று அறிதல் அவசியம்.

எல்லாம் தன்வடிவமாய்ப்பாவிப்பது சிவயோக மாகும்.

"ஐந்துபூதமும் ஆறுஸமயமும், மந்த்ரவேத புராண கலைகளும் ஐம்பதோர்விதமான லிபிகளும் வெகுரூப
அண்டராதி சராசரமும் உயர் புண்டரீகனும்
மேகநிறவனும் அந்திபோலுருவானும் நிலவொடு
வெயில் காலும்,
சந்த்ர ஸூரியர் தாமும் அஜபையும் விந்துநாதமும்
ஏகவடிவமதன் ஸ்வரூபமதாக வுறைவது
சிவயோகம்"

என்னும் திருப்புகழ்ப்பாவானது சிவயோகஸ்வரூபத்தை நன்கு அறிவுறுத்துகின்றதல்லவா?

இங்ஙனமன்றி, மாறுக அறிவது மயக்கவுணர்வேயாகும். இவ்வுணர்வு அறியாமையாலேற்பட்டது. இந்த அறியாமையின் ஸ்வரூபம் த்ரிகுணாத்மகமென்றும், காமம், வெகுளி (கோபம்) மயக்கங்களென்றும், ஜாக்கிர

ஸ்வப்ன ஸுஷுப்திகளென்றும், அவித்யா காம கர்மங்களென்றும் பலபடியாகக் கூறப்படும்.

அக்ஞான கார்யங்களும் அக்ஞானமும் ஒழிந்தாற்றான் யதார்த்த தத்துவம் வெளிப்படும். இத்தத்துவ ஞானத்தின் அடைவிற்குச் சற்குருவின் ஸந்தர்சனம், அவரது உபதேசம், அவரது ஸம்ப்ரதாயத்தோடு பொருந்தும் நெறி முதலியன இன்றியமையாதனவாகும்.

அத்தியாவஶ்யகங்களாகும் மேற்கூறிய ஸாதனங்களைப் பெற்ற உத்தமபுருஷனே பாஹ்யத்தை ஆந்தரத்திலும், ஆந்தரத்தைப் பாஹ்யாப்பியந்தரங்களற்ற அதிஷ்டானத்திலும் ஒடுக்கி யுண்மைச் சொரூபத்தை யறியவல்ல உத்தமாதிகாரியாவன். இவன், தனது அன்பின் மிகுதியால் தற்போதமாகும் அசுத்த அஹங்காரத்தை யொழித்து, அதனுல் கர்ம ராஹித்தியத்தைப் பெற்று, அதனுல் உபசாந்தத்தை யடைந்து அச்சாந்தியினுல் மனோநாசத்தையும், அதனுல் அகண்டாகார வ்ருத்தியையும், அதனுல் பேராநந்த அநுபூதியையும் பெற்று அவாங்மனஸ கோசர அம்ருத ஸ்வரூபமாய் விளங்குகின்றுன். இவ்விஷயம்,

"அமுதுகண்டேன் செயல் மாண்டடங்கப் புத்திக்
கமலத்துருகிப் பெருகிப் புவனமெற்றித் தத்திக் கரை
புரளும் பரமாநந்த ஸாகரத்தே"

யென்னும் மேற்கூறிய பிரமாணச் செய்யுளின் அடிகளால் ஏற்படுகின்றது. ஆதலின் ஸகளவடிவ புராணக் கதையின் ஆராய்ச்சிரூப விசாரமானது நிஷ்களஸ்வரூப தத்துவஞானத்தின் அடைவிற்குச் சிறந்த ஸாதனமாகும். ஆகவே புராண கதையின் தத்துவ விசாரத்தின் பொருட்டுக் கதா ஸாரம் கூறப்படுகின்றது.

# स्कान्दपुराणसारसंग्रहः ।

पूर्वं काश्यपभूसुराद्दषिवराज्जातैस्तु शूरादिभिः
मायायां सुरवर्यदैवतगणा नीतास्तु कारागृहम् ।
इन्द्रो भीतियुतोऽथ दारसहितो नौकापुरेशं जवा-
द्गत्वा भूतलमार्तिभीतिहरणं श्रीशङ्करं प्राप्तवान् ॥ १ ॥

जाता भूधरनायकस्य दुहिता शैलेन्द्रसंप्रार्थिता
भर्तारं शिवमाप्तुमाचरितवत्यम्बाऽतितीव्रं तपः ।
धातुर्मानसपुत्रकैर्मुनिवरैः संप्रार्थितः शङ्करः
स्वीयं भावमुपादिशत्पुनरहो भावे निजे संस्थितः ॥ २ ॥

इन्द्रप्रेरितमङ्गजं सुमशरैः संताडयन्तं शिवः
दग्ध्वा फालविलोचनेन गिरिजामुद्वाह्य रेमे तया ।
कृत्वा मन्मथमिन्द्रमुख्यविबुधैः संप्रार्थितोऽरूपकं
तेजः षड्विधमुत्ससर्ज नयनात्फालस्थितादेव सः ॥ ३ ॥

तज्ज्योतींषि तदाऽम्बयाऽनलकरे दत्तान्यसह्यान्यहो
वाप्यां प्रस्रवणे गिरौ शरवणे क्षिप्तानि तान्यग्निना ।
सद्यः शैशवमागतानि रुरुदुः श्रुत्वाथ षट् कृत्तिकाः
स्तन्यं सुन्दरमाननं मुहुरहो दृष्ट्वा तु षण्णां ददुः ॥ ४ ॥

दैवापद्विनिवारणार्थमवनीमाविर्भवद्भिस्तदा
बालान्नूपुरसंभवैस्तु नवभिर्वीरैर्वृतानम्बिका ।
दृष्ट्वा शम्भुसुदर्शितानचलजा तानालिलिङ्गादरात्
सद्यः षण्मुखरूपमापुरमरैः संस्तूयमानार्भकाः ॥ ५ ॥

कैलासाचलसंस्थितः शिवसुतः क्रीडारतस्त्वर्भकै-
रायान्तं प्रणवार्थमाशु कमलाज्जातं तु संपृष्टवान् ।
अज्ञातार्थमजं तदा गुरुवरः कारां तु नीत्वा पुनः
मुक्त्वा मापतिवाक्यतः शशिभृते प्रोवाच तत्वं निजम् ॥

इन्द्राद्यैर्बहु संस्तुतावचलजाशम्भू गुहस्यात्मनो
दत्वा शक्तिमरातिहां सुररिपून् छिन्धीति तावूचतुः ।
तद्वाक्यान्नववीरसैन्यसहितो हत्वासुरं तारकं
मत्तेभास्यमचूर्णयद्गिरिवरं क्रौञ्चाचलं षण्मुखः ॥ ७ ॥

देवाख्याचलमम्बुजासनगुरुर्गत्वा पुनस्त्विष्टदान्
काश्यादीन्नवभिः स्ववीरसचिवैः सार्धं कुमारं पुरम् ।
आगत्यान्तकशासनं सुतपसा संतोषयन्नादरात्
तद्दत्तायुधतोषितः सुरगुरुं दध्यौ जयन्तीपुरे ॥ ८ ॥

तेनोक्तामरवैरिवृत्तमखिलं श्रुत्वाशु दैत्यान् प्रति
स्वाकारं वरवीरबाहुमचलं दौत्येन संप्राहिणोत् ।
सोऽप्यम्भोधिमरातिहा गुरुवरं नत्वाऽञ्जनासूनुवत्
प्रोल्लङ्घ्यासुरबृन्दमाशु मणिजो हत्वा पुरीं प्राविशत् ॥ ९ ॥

लङ्कायामतिवेगवारणमुखौ हत्वाऽसुरौ रत्नजो
नीत्वा वीरमृगेन्द्रमन्तकगृहं चाश्वास्य पुत्रं हरेः ।
गत्वा शूरवरस्य विश्रुतसभामध्यास्य सिंहासनं
दैत्येन्द्रेण समं स्वनाथकलितामाज्ञामथादिष्टवान् ॥ १० ॥

श्रुत्वा शूरकुभाषितं पुनरसौ गत्वा पुरान्तस्तदा
हत्वा पञ्चशताननं शतमुखं वज्राख्यसिंहाननौ ।
कृत्वा दुष्करकर्म नूपुरभवस्तीर्त्वाम्बुधिं दुष्टहा
शूरस्याखिलवृत्तमात्मपतये व्यज्ञापयद्विस्तरात् ॥ ११ ॥

श्रुत्वैतच्छरसंभवोऽसुरकुलं कुर्वेऽद्य निर्मूलमि-
त्येवं वीरकरादिसोदरयुतः प्रापासुरं पत्तनम् ।
युद्धायागतमन्तकान्तकसुतं योद्धुं पितृप्रेषितं
वीराग्र्यो युधि भानुकोपमसुरं व्यद्रावयद्रत्नजः ॥ १२ ॥

सूनुं नूपुरसंभवेन समरे विद्रावितं दैत्यराट्
श्रुत्वा शङ्करसूनुना सह रणं कर्तुं समासेदिवान् ।
देवोऽप्यद्भुतरत्नशोभि मकुटं शूरस्य शीर्षाच्च्युतं
कृत्वा तत्परिवारकानपि तदा चक्रे विशीर्षान्गुहः ॥ १३ ॥

शूरस्यात्मजमायया प्रबलया सैन्यान्समुद्राम्भसि
क्षिप्तानब्जजशासनस्तु सहसा दृष्ट्वा स्वकान्मोहितान् ।
भित्वा तां करुणाकरो निजमहाशक्त्योद्धृतांस्तान् गुहः
कृत्वा तत्पुरमासुरं समकरोच्चूर्णीकृतं लीलया ॥ १४ ॥

वीरः स्वामिनिदेशतः शुचिमुखाज्जातांस्त्रिसाहस्रकान्
सामात्यानपि भानुकोपमचिराद्धत्वाश्रयत्तत्पदम् ।
तद्भीत्या झषरूपवान् जलनिधौ मग्नो हिरण्यासुरः
देवः पञ्चशतद्वयीमुखयुतं विव्याध सिंहाननम् ॥ १५ ॥

शूरस्याद्भुतकर्मणो दशशतेष्वण्डेषु भृत्यान् स्थितान्
हत्वा तत्कृतमिन्द्रजालमखिलं संचूर्ण्य शर्वात्मजः ।
तन्मायाधृतनैकरूपमखिलं शक्त्या द्रुतं लीलया
हत्वा सर्वचराचरात्मकवपुर्भूत्वाशु तस्थौ गुहः ॥ १६ ॥

विश्वाकारविमोहितं दितिसुतं दृष्ट्वाम्रवृक्षात्मकं
देहस्तस्य विदारितो भगवता द्वेधा स्वशक्त्या क्षणात् ।
द्वेधाकृत्तविभागतोऽसुरतनोरेको मयूरात्मक-
स्त्वन्यः कुक्कुटसंज्ञकः समभवद्भागः परस्मिन्क्षणे ॥ १७ ॥

नीलग्रीवमरातिसूदनपटुः पत्रं ध्वजं कुक्कुटं
कृत्वा दैवतबृन्दकं समकरोत्कारागृहान्मोचितम् ।
पञ्चास्याननतारकौ युधि हतौ पञ्चास्यनागाकृती
काल्यै विष्णुशिवात्मजाय गुरुणा वाहाय दत्तौ मुदा ॥१८॥

वीरैर्नन्दितवैभवः सुरगणैः साकं जयन्तीपुरं
गत्वा शक्रसुताप्रियः परशिलापीठं तु संप्राप्तवान् ।
तस्माच्छान्तगिरिं गुहो गुरुवरः संप्राप्य वल्ल्या समं
देवेन्द्रादिसुरैः स्तुतः शिवसुतः स्कन्दाचलं सोऽगमत् ॥१९॥



## ஸ்காந்தபுராண கதையின் ஸாரம்.

1. அறஞ்சேர் தவத்துக் காசிபரை
யணைந்த மாயை யிடத்துதித்த
மறஞ்சேர் சூரன் முதல் மூவர்
வருத்துங் கொடுமையால் சுரர் வான்
துறந்தார் ; சிலர்கள் சிறைப்பட்டார்
துறக்க வேந்தன் காழியினில்
சிறந்தே தவம் செய்தனன் தீங்கின்
நீங்க நினைந்தக் காலத்தே.

முன்னொருகாலத்தில் கஶ்யபரிஷியானவர் தருமநெறி தவறாது தவமியற்றுங்கால், மாயை யென்னு மோரஸுர மங்கை கஶ்யபரின்முன் தோன்றினள். கஶ்யபர் அவளைக் கண்டு மதிமயங்கித் தானியற்றும் மாதவத்தை யறவே விட்டு அவளை யணையச், சூரபத்மன்-சிங்கமுகன்-தாரகன்-அஜமுகி-யென்பவர்களும், இரண்டுலக்ஷம் ஸேனைகளும் தோன்றினர். சூரபத்மன் முதலிய அஸுரர்கள் உதித்ததுமே தேவர்களை வருத்த ஆரம்பித்தனர். அஸுரர் செய்யும் கொடுமையால் தேவர் தேவலோகத்தை விட்டோடித் தலைமறைந்தனர் ; சிலர் அஸுரர்களால் சிறைப்பட்டனர். சுவர்க்கலோகத்திற்கு அதிபதியான தேவேந்திரன் சீர்காழியென்னும் சிவஸ்தலத்தில் தனக்குற்ற துன்பத்தினின்றும் நீங்குவதற்குப் பரமேஶ்வரனைக் குறித்துத் தவமியற்றினன். அப்போது,

2. இழுமென் அருவித்திருக்கயிலை
யிறைவனருளா லுமையவளும்
பழுதிலிமவான் மகளாகிப்
பரிந்து தவஞ் செய்தனன் பரனும்

தொழுத ஸநகாதியர்க்கருளி
யோகத்திருப்பத் தொல்லுலகம்
தழுவின் பகல மகபதியும்
தளர்ந்து மதனே வேண்டிடவே.

3. மறைந்தே நின்று மலர்ப்பகழி
தூவுமதனே மாய்த்துமையாள்
அறந்தா னேக்கி மணஞ்செய்து
காமற் கருவ முருவளித்தங்
குறைந் தோங்கலின் வந்தமரர்தொழ
வுதித்த முகத்தோடாறுமுக
நிறந்தாங்கியகட் பொறியளித்தான்
நினையா ரகத்துக் கொளித்தானே.

கைலாஸத்தில் பரமசிவனது அருளால் உமையம்மை இமயோனுக்குப் புத்திரியாய்ப் பிறந்து பரமசிவனே யடைதற்குத் தவம் செய்தனள். பரமேஸ்வரனும் ஸ்ரீ தக்ஷிணமூர்த்தி வடிவங்கொண்டு யோகத்திலமர்ந்து ஸநகாதி நால்வருக்கு ஞானேபதேசம் செய்துகொண்டிருந்தனர். சிவம் யோகத்திலும் சக்தி தவத்திலும் இருக்குங் காரணத்தால் உலகமெல்லாம் பிரவிருத்தியற்று நிச்சலமாய் இருந்தது. இந்திரனும் அஸுரர்கள் செய்யும் கொடுமைக்கு ஆற்ருது மனந்தளர்ந்து சிவசக்திகளே யொன்றுசேர்க்கும் நிமித்தம் பலவாறு யோசித்துக் கடைசியில் மன்மதனே வேண்டிக் கொண்டனன். மன்மதனும் இந்திரனது வேண்டுகோளுக்கு ஒருவாறு இணங்கி யோகாஸனத்திலமர்ந்துள்ள பரமசிவன்மீது புஷ்பபாணங்களேப் பிரயோகித்தனன். உடனே பரமசிவன் லலாடநேத்திரத்தைத் திறந்து பார்த்தனர். மன்மதன் எரிந்து சாம்பலானுன். பின், மகேசன் மன்

மதனது மனைவி ரதீதேவியின் முறையீட்டுக்கு மனங்கரைந்து, காமனுக்கு அருவ வடிவத்தையருளிப் பார்வதியின் தவத்திற்குக் களிப்புற்று அவள்முன் தோன்றி மணஞ் செய்துகொண்டு கைலாஸபர்வதத்தில் அமர்ந்து விளங்கினான்.

சிவசக்திகளை ஓராசனத்திற் கண்டு ஸகலதேவர்களும் முன் ஈசன் உரைத்தபடி அஸுரர்களை யழிக்கவல்ல ஒரு சேயைத் தந்தருளும்படி வேண்டித் துதித்து வணங்கினார்கள். தேவர்களின் வருத்தத்தை யொழிக்கும் பொருட்டு சக்திஸமேதனான பரமசிவன், தனதுமுகங்கள் ஐந்தினோடு சக்திமுகம் ஒன்றும் சேர ஆறுமுகத்தோடும் சக்தியைப் பார்த்தனர். அந்த க்ஷணத்தில் பரமசிவனது நெற்றிக்கண்கள் ஆறிலிருந்தும் கோடி சூரியப் பிரகாசமுடைய மஹாதேஜஸ்ஸானது வெளிப்பட்டது.

4. ஆறுபொறியும் பரந்தருளா
லடங்கியனல் காலுடனிமையோர்
ஆறுமருவிச் சரவணஞ் சேர்ந்
தாறு மகவாய் ஆரல் முலை
ஆறுவழி பாலருந்தி விளை
யாடி வருங்கால் விபுதரிடர்
ஆறும் வகையால் இலக்கத்தொன்
பது வீரர்களுமவதரித்தார்.

அங்ஙனம் வெளிப்பட்ட ஆறுபொறிகளும் பதினான்கு லோகங்களிலும் வியாபித்தன. யாவரும் பிரமித்தனர். பின் பரமன் அப்பொறிகளை வாயுதேவனிடத்தில் தந்தனர். வாயுவும் அவற்றைத் தாங்கமாட்டாமல் அக்கினி பகவானிடம் கொடுத்தனர். அக்கினியும் அவற்றை யேற்க முடியாமல் கங்காதேவியினிடம் சேர்ப்பித்தனன். அக்கங்

கையும் அவற்றைத் தரிக்கமாட்டாது சரவணமென்னும் நாணல் தரையில் ஒதுக்கினள். சரவணத்திற் சேர்ந்த ஆறுபொறிகளும் ஆறுகுழந்தைகளாக விளங்கின. இங்ஙனம் விளங்கும் குழந்தைகள் கிருத்திகை நக்ஷத்திரங்களின் ஸ்தன்யபானம் செய்துவிளையாடிக்கொண்டிருந்தன. இவ்விஷயம் இங்ஙனமிருக்கப், பரமசிவனது நெற்றிக் கண்களிலிருந்து சிவதேஜஸ்ஸாகும் பொறிகள் கிளம்பிய போது பார்வதி பயந்து பரமேஸ்வரனது மடியைவிட்டு ஓடுகையில் இடறியபாதங்களிற் பூண்ட பாதச்சிலம்பிலிருந்து நவரத்தினங்கள் உதிர்ந்தன. இந்நவரத்தினங்களில் பரதேவதையின் திருமேனி பிரதிபலித்தது. அப்பிரதிபிம்பங்கள் ஒன்பது பெண்களாய் விளங்கின. அப்பெண்மணிகளைப் பரமசிவன் அழைத்தனர். அவர்கள் பரமசிவனைக் காதல் மனத்தோடு நோக்கினார்கள்; உடனே அவர்கள் கருவுற்றவராயினர். தேவியின் சாபத்தால் பிரஸவிக்கமுடியாமல் அவர்களின் மேனிதளர்ந்து, மிகுந்த வியர்வையுண்டாக, அவ்வியர்வைத் திவலைகளினின்றும் இலக்ஷம் படைவீரர்களுண்டாயினர். பின் ஜகன்மாதாவுக்கு அப்பெண்மணிகளினிடம் கருணையுண்டாகி "லோக க்ஷேமத்தின்பொருட்டு உங்கள் கர்ப்பங்களினின்றும் ஒன்பது மைந்தர்கள் அவதரிக்கக்கடவர்" என்று அவர்களை அநுக்கிரஹித்தனள். பரதேவதையின் கட்டளைப்படியே நவரத்தினப் பெண்களின் வயிற்றினின்றும் வீரபாஹு முதலிய நவவீரர்கள் அவதரித்தனர்.

| நவரத்தின மணிப்பெண்கள் | நவவீரர்கள் |
|---|---|
| 1. மாணிக்கவல்லி | வீரபாஹு |
| 2. தரளவல்லி | வீரகேஸரி |

3. புஷ்பவல்லி — வீரமஹேந்த்ரன்
4. கோமேதகவல்லி — வீரமஹேஸ்வரன்
5. வைடூர்யவல்லி — வீரபுரந்தரன்
6. வஜ்ரவல்லி — வீரராக்ஷஸன்
7. மரகதவல்லி — வீரமார்த்தாண்டன்
8. பவழவல்லி — வீராந்தகன்
9. நீலவல்லி — வீரதீரன்

இங்ஙனம் நவவீரர்களும் லக்ஷம் ஸேனைகளும் ஆறுமுகனுக்குத் துணையாய் விளங்கினார்கள்.

5. ஈசனுமை யுன் மதலையென
வெடுத்தா றுருவு மொன்றாகி
நேசமொடும் பாலளித்தளிக்க
நிமலன் மகவை மார்பினணைத்து
ஆசில் கயிலை யணைய விளை
யாடி முருக னசமேறிப்
பேசும் விதியைச் சிறை சேர்த்திப்
பெருமாற் கருளி விடுத்திட்டான்.

முற்றறிவுடைய பரமன், உமாதேவியோடு சரவணப் பொய்கைக்குச் சென்று, அங்கே விளையாடிக்கொண்டிருக்கும் ஆறு குழந்தைகளையும் உமையம்மைக்குக் காட்டி "உமையே நின் மதலைகளைப் பார்" என்று திருவாய் மலர்ந்தனன். உடனே உமையும் மிகக்களிப்போடு தனது திருக்கரங்களினால் அக்குழந்தைகளைச்சேர்த்து அணைத்தனள். அணைத்ததும் அந்த ஆறுகுழந்தைகளும், திருமுகங்களாறும் திருக்கர மீராறும் சுருதி புகழ் தாளிரண்டும் தோன்ற ஒருவடிவாய் நின்றன. இங்ஙனம் நின்ற அவ்வறுமுகக் குழவிக்கு உமாதேவி தன் திருமுலைப்பாலூட்ட, அதுவு

முண்டது. பரமனும் அக்குழந்தையைத் தன் மார்போ டணைத்து உச்சிமோந்து திருக்கயிலாயத்திற்கு அழைத் துச் சென்றனன்.

குஹேசனது பாலலீலைகள்.

கந்தன் தனது துணைவர்களான நவவீரர்களோடும் இலக்ஷம் ஸேனையோடும் கூடி விளையாட ஆரம்பித்தனன். தன் தாளினால் ஸப்தஸாகரங்களையும் உடைத்து ஒன்றாக் கினான்; ஸப்தகுலாசலங்களும் தங்கள் இடங்களை விட்டுத் தகர்த்தப்பட்டன; திக்கஜங்கள் யாவும் வீறிட்டோடும் சிறுபந்தெனும்படி விண்ணில் எறியப்பட்டன. இங்ஙனம் பல திருவிளையாடல்கள் நடத்தப்பட்டன. இங்ஙனம் பாலக்குஹன் திருவிளையாடல் புரிவதைக்கண்டு இந்திரன் முதலிய தேவர்கள் மதிமயங்கி இவன் அஸுரக்குழவி யோவென ஐயமுற்று அக்குழவியோடு போர்புரிந்து உயிர் நீத்தனர். தேவர்கள் யாவரும் மாண்டசெய்தியை நாரத ரால் அறிந்த தேவகுரு, குகன் திருவடிகளில் வீழ்ந்துத் துதித்து தேவர்களைப் பிழைப்பிக்கவேண்டினர். குகனும் உண்மையறியாது மயங்கி உயிர் நீத்த அத்தேவர்களை யெழுப்பி அவர்களுக்குத் தனது விஶ்வரூபத்தைக் காட்டி யருளினான்.

இச்சமயத்தில் நாரதர் சிவபெருமானைக் குறித்து ஒரு யாகமியற்றினார். அந்த யாகமானது யாதோவொருவகை யில் விதிதவறி நடத்தப்பட்டகாரணத்தால், அதனினின் றும் ஒரு பெரிய ஆட்டுக்கடாதோன்றிற்று. அக்கடா வானது எல்லாப் புவனங்களும் நடுங்கும்படி கொர்ச்சித் துக்கொண்டு கிளம்பிற்று. அப்பொழுது ஸகலதேவர்

களும் முனிவர்களும் முருகன் சன்னிதியில் நின்று பணி ந்து "சுவாமீ இக்கடாவை யடக்கியருளல் வேண்டும்" என்று விண்ணப்பித்தனர். முருகனும், வீரபாஹுவால் அக்கடாவை யடக்கி அதைத் தனது வாஹனமாக்கிக்கொ ண்டு யாழ்முனிவன் யாகத்தைப் பூர்த்திசெய்தனன்.

## அயனைச் சிறையிடல்

இங்ஙனமிருக்க ஒருநாள் மாலே, பிரமதேவன் சிவ பெருமானைத் தரிசிக்கத் திருக்கைலாஸத்திற்கு வந்தனன். வந்தவன் நங்குகனை வணங்காது மிக்க உதாசீனனாய் குஹ னது இருக்கையைக் கடந்து போயினன். அங்ஙனம் சென்ற பிரமனைக் குகக்கடவுள் அழைத்து "வேத முதலா கும் பிரணவப் பொருளை நீயறிவையோ?" என்று வின வினன். அதற்கு அப்பிரமன் அகங்காரத்தால் "நானே அப்பிரணவப்பொருள்" என்று கூறினன். இங்ஙனங் கூற வே, குகேசன் சினங்கொண்டு, அவனது நான்கு சிரங் களும் குலுங்கக் குட்டி அவனைச் சிறையிட்டனன்; அன் றியும் அவன் புரியும் சிருஷ்டித் தொழிலைத் தானே யியற் றவாரம்பித்தனன். இங்ஙனம் சில நாள்கழிய சிவபெரு மானே குகனிடம் வந்து பிரமனைச் சிறைவிடுக்க வேண்டி னர். "பிரணவப்பொருளை யறியாத அயனைச் சிறையினின் றும் விடுதல் தகுதியோ?" என்று அறுமுகன் கூறச் சிவன் "ஆயின் அப்பொருளை நீயறிவையோ? அறிவை யாயின் எனக்குக் கூறுதி" என்று மொழிந்தனன். குக னும் சிவபெருமானுக்குப் பிரணவத்தின் உண்மைப் பொ ருளை யுபதேசக்கிரமத்தா லெடுத்துரைத்துப் பரமசிவன் விருப்பத்தின்படி அப்பிரமனைச் சிறைவிட்டனன்.

6. எந்தையுடனங்குமையவளும்
இமையோர் கூறு முறைக்கிரங்கிக்
கந்தன் தனையோர் நாளழைத்துக்
கதிர்வேல் முதலாம் படையருளி
மைந்த! வசுரர்தமைவென்று
வாவென்றருளப் படைகளுடன்
முந்திப்புவிமேற் கரிமுகனை
முடித்தான் அசலம் பொடித்தானே.

இங்ஙனமிருக்க ஒருநாள் ஸகலதேவர்களும் திருக்கைலாயத்தை யணுகி அஸுரர்களால் தாங்கள்படும் துன்பந் தவிர்க்குமாறு மன்றாடி வேண்டிக் கொண்டனர். அவ்வேண்டுகோளுக்கிரங்கி பரமசிவன் "குமரனே! நீ சென்று அசுரர்களை வென்று தேவர்க்குற்ற விடுக்கண்களைத்தவிர்த் தருள்வாயாக" என்று கூறி ஞானசக்தியோடு மற்றும் பதினோராயுதங்களையும் கொடுத்து அனுப்பினார். குகேசனும் அங்ஙனமே தனது நவவீரர்களோடும் சேனைகளோடும் புறப்பட்டு இம்மண்ணுலகத்திற்கு வந்தனர்.

இப்பூவுலகின் கண் ஏமகூடமலையின் சாரலில் அமைக்கப்பட்ட ஒரு மாயாபுரியின் கண் யானைமுகத்தையுடைய தாரகன் என்னும் ஓரசுரன் கொடுங்கோல்புரிந்துவந்தனன். இவன் மாயையின் மூன்றாவது புதல்வன்; சூரபத்மனது தம்பி. இவன் விஷ்ணுசக்கிரமான ஸுதர்சனத்தை ஓராபரணம்போலத் தன்கழுத்திலணிந்தவன்; பிரஹ்மாஸ்திரத்தை யொரு பழம் போல் விழுங்கியவன்; இத்தகைய வலிமை பொருந்திய தாரகனைப்பல அஸ்திரங்களால் அடித்தனன். அப்பொழுது கிரௌஞ்சன் என்னும் மாயாவியான ஓர் அஸுரன் திரிபுரங்களாய் நிற்க அக்கோட்டைகளில் தாரகன் மறைந்து நின்று போர்புரிந்தனன். சக்திதர

னது புன்முறுவலால் திரிபுரங்கள் எரிந்துபடத் தாரகன் கிரௌஞ்சன் என்னும் இரண்டு அஸுரர்களேயும் குஹன் தனது வேலாயுதத்தால், முறையே, கொன்றும் தூளாக்கி யும் வெற்றி மாலையைச் சூடினர்.

7. அன்று தேவகிரியிலமர்ந்
தருட் கேதார முதற் பதிகள்
சென்று கண்டு திருச்சேய் நல்
லூரிற் சிவன்றன் படை பெற்றுத்
துன்று சுரந்தீர்ந்தருட் செந்தூர்
சூழ்ந்தங் கசுரர்திறங்களெலாங்
குன்றலின்றிக் கேட்டருளக்
குறித்தான் உடுவில் தெரித்தானே.

8. சூரபன்ம னரிமுகவன்
தும்பிமுகன்மை முகிப்பிறப்பும்
வீரயாகத்திவர்க் கெங்கோன்
அளித்த வியப்பும் திசைவென்றே
கோரமுடிபெற் றெழின் மணஞ்செய்
தரசாள் கொடுங்கோன்மையும் பிறவும்
கீரனுரை போல் குருமொழியக்
கேட்டான் தணிகை நட்டானே.

கிரௌஞ்சனும் தாரகனும் ஒழியவே, இந்திரன் முத லிய தேவர்களும் ரிஷிகணங்களும், முனியோர்களும் குகக் கடவுளைத் தேவகிரியில் அமர்த்தி, விதிப்படி பூசித்துத் துதி த்து நின்றனர். தேவர்ஷிகணங்களின் பூஜையைக் களிப்புடன் அங்கீகரித்துக் கந்தபிரான் அவ்விடத்தினின்றும் புறப் பட்டுத் தென்திசையாய்ச் சென்று கேதாரம், காசி முத லிய பல சிவஸ்தலங்களைத் தரிசித்துக் கொண்டு குமாரபுர

மென்னும் திருச்சேய்நல்லூரை யடைந்து அங்கே சில காலம் தங்கிப் பரசிவனைப் பூசித்து சங்கராஸ்த்ரம், ரௌத் ராஸ்த்ரம் பாசுபதாஸ்த்ரம் முதலிய பல திவ்ய அஸ்த்ரங் களைப் பெற்று ஒரு பெரிய பாலைவனத்தையுங் கடந்து, திருச்செந்தூரென்னும் ஜயந்திபுரத்தை யடைந்தனர். அடைந்ததும், குகன் தேவகுருவாகிய பிருஹஸ்பதியின் மூலமாய் அஸுரர்களின் பிறப்பு, தவம், வீரயாகம், வரப் பேறு, சுக்கிரன் உபதேசம், திக்குவிஜயம், தேவரை யேவல் கொளல், அமரரைச் சிறையிடல் முதலிய விருத் தாந்தங்களைச் செவி மடுத்து "அச்சூரனுதியசுரரைக் கொன்று தேவர்களைச் சிறையினின்றும் மீட்பேன்" என்று திருவாய் மலர்ந்தருளினன்.

9. ஏற்ற குமரன் தூதேவ
விருங்குன் றகன்றே கடல்பாய்ந்தங்
காற்றல் வீர சிங்கனொடும்
இலங்கை வீழ்த்தி யதிவேகன்
தோற்று யானை முகற்கொன்று
நகரில் துயர்கூர் சயந்தனையும்
தேற்றி யவைசென் றரியணைமேல்
சிறந்தான் சிலம்பிற் பிறந்தானே.

10. தகுதி மொழிந்து சதமுகனைக்
காவலாளர் தமை நகரைப்
புகுமைஞ்ஞூற்று முகத்தினரைப்
பொருவச் சிரவா குவையாளி
முகனை யழிவு புரிந்தந்தி
முந்தவந்து சூர் நினைவைக்
குகனை வணங்கி யுரைத்திட்டான்
கொற்ற வீரவாகுவே.

"அஸுரரைக் கொன்று அமரரைச் சிறை மீட்பேன்" என்னும் பிரதிஞ்ஞையை யேற்ற குமரேசன் வீரபாஹுவைச் சூரபத்மனிடம் தூதாக அனுப்பினான். வீரபாஹுவும் கடலைத் தாவிப்பாய்ந்து இலங்கையை யடைந்து வீரசிங்கன், யாளிமுகன் முதலிய அசுரர்களைக் கொன்று வீரமாகேந்த்ரபுரியை யடைந்து அங்கே சிறைப்பட்டு வருந்தி நிற்கும் தேவேந்திரன் மகன் ஜயந்தனைத் தேற்றிச் சூரபத்மனது கொலுமண்டபத்தை யடைந்தனன். வீர பாகுவைச் சூரன் பார்த்து "அடா! நீயார்? உன் வரலாற்றைக் கூறுவாயாக" என்று மொழிந்தனன். அதற்கு வீரபாகுதேவர் "அடா சூரபத்மனே! நான் முழுமுதற் கடவுளாம் அறுமுகச் சிவனாரால் அனுப்பப்பட்ட தூதன். அவன் சிவகுமரனாய் அவதரித்துள்ளான். நீ யிக்கணமே குற்றமற்ற தேவர்களது சிறையை நீக்கிவிடுவாயாக. அங்ஙனம் செய்யாவிடின் மாயாவியான கிரௌஞ்சன், மஹாவல்லமையுள்ள தாரகன் இவர்கள் அடைந்த கதியை நீயும் அடையநேரும். இவ்விஷயத்தை உனக்கு அறிவுறுத்தும் பொருட்டே பேரருளாளனாகிய என் பெருமான் என்னை உன்பால் அனுப்பியுள்ளான்" என்று புகன்றான்.

இதைக்கேட்டுச் சூரன் சினங்கொண்டு ஆர்ப்பரித்துத் தூதாக வந்த வீரபாகுதேவரைக் கொல்ல ஓராயிரம் வீரப்படைகளுடன் சதமுகனை யனுப்பினான்.

வீரபாகு அவர்களைக் கொன்று, பிறகு வந்த ஸஹஸ்ரபாஹுக்களும் ஐந்நூறு சிரங்களும் கொண்ட பல வீரர்களையும், யாளிமுகனையும், சூரபத்மனது மக்களில் ஒருவனாகிய வஜ்ரபாகுவையுங் கொன்று வீரமாகேந்த்ரபுரத்தை விட்டகன்று குகப்பெருமானிடம் வந்து சூரனது எண்ணத்தைத் தெரிவித்தனன்.

11. அவுணர் குலம் வேரறுப்பனெனக்
குகன் பாசறை வந்தமர்ந் திடலும்
தவறில் போர் செய் கெனச் சூரன்
பானுகோபன் தனை விடுத்தான்
கமர் போர் புரிகென்றிளை யோனைக்
கடிது விடுத்துக் காரவுணன்
புவிமீதோடத் துரந்தான் முன்
பொறியாறுகப் பரந்தானே.

உடனே குகப் பெருமான் "அஸுரர் குலத்தை அடியோடு ஒழிக்கின்றேன்" என்னும் பிரதிக்ஞையோடு திருச்செந்தூர் விட்டுப் புறப்பட்டு பாசறையை வந்தடைந்தனன். நவவீரர்களும், இலக்ஷம் குமார கணங்களும், சிவ, ருத்திர, பூத, பிரமதாதி கணங்களும் வெகு உற்சாகத்தோடு வந்து சேர்ந்தன. சூரபத்மனும் தனது பல்லாயிரக் கணக்கான ஸேனைகளைத் திரட்டித் தன் மூத்த மகன் பானுகோபனைப் போர்க்களத்திற்கு அனுப்பினான். நம் சரவணபவனும் தன்னிளையோனாகிய வீரபாஹுவை யனுப்ப வீரபாஹு தேவரும் பானுகோபனும் போர்புரிந்தனர். கடைசியில் பானுகோபனது மோஹனாஸ்திரத்தால் எல்லாப்படைவீரர்களோடு வீரபாகுவும் மயங்கித்தரையில் கிடப்பவராயினர்.

இச்செய்தியையறிந்த ஸர்வஞ்ஞனான குகன் மோஹனாஸ்திரத்திற்கு விரோதியாய அமோஹாஸ்திரத்தையேவி வீரபாஹு முதலிய வீரர்களுக்கும் ஸகல பூதப்படைகளுக்கும் ஏற்பட்டிருந்த மோஹத்தைத் தெளிவித்தனன். உடனே வீரபாகு தேவர் பானுகோபன்மீது பாசுபதாஸ்திரத்தைப் பிரயோகிக்கக் கையிலெடுத்தார். இதைக்கண்ணுற்ற பானுகோபன் மிகுந்த அச்சம் கொண்டவனாய்




அப் பாசுபதாஸ்திரத்திற்குப் பதில் அஸ்திரம் தன்னிடத்திலில்லையே யென்று கலங்கிப் போர்க்களத்தை விட்டகன்று தன் நகரத்திற்குத் திரும்பினான்.

12. எண்ணிக்குமரன் வரு சூரோ
டெதிர்ந்து பெரும் போர் புரிந்தவனை
வண்ணக்கிரீட பங்கமுற
வருத்திச் சூரன் மகன் மாயைத்
திண்ணப் படையால் வீரர்களைச்
சேனையுடனீள் கடலின் மயல்
உண்ணச் செயக்கண் டதை வேலால்
ஒழித்தான் கருணை கொழித்தானே.

தன்மகன் பானுகோபன் யுத்தகளத்திலிருந்து மிக்க அவமானத்தோடு வீட்டுக்குத் திரும்பி வந்துவிட்டானென்று அறிந்த சூரன் காலாக்னிருத்திரன் போல் சீறிப் போர்க்களத்திற்கு வந்தான். இங்ஙனம் வந்த சூரனோடு முருகன் வெகுநேரம் பலவகையாய்ப் போர் புரிந்து சூரனுடைய கிரீடத்தை யுடைத்து அவனைக் கீழே தள்ளி மானபங்கம் செய்தனன். பின்னர், மறுபடியும் பானுகோபன் யுத்தத்திற்கு வந்து வீரபாகுவோடு பெரும் போர் செய்தனன்; மாயாஸ்திரத்தினால் பூதர்களையும் வீரர்களையும் மயக்கிச் சுத்தநீர்க்கடலில் அமிழ்த்தி வீடுதிரும்பினான். இச்செய்தியைக் குகன் நாரதரால் அறிந்து வேலாயுதத்தை விடுக்க, அவ்வேல் யாவரையும் அழைத்து வந்து குகன் திருமுன் வந்து சேர்த்தது. பின் சூரன்மகன் ஹிரண்யன், அக்கினிமுகன், மந்திரிகளில் ஒருவனான தருமகோபன், மூவ்வாயிரவர் முதலியவர் புடைசூழப் பானுகோபன் மறுபடியும் யுத்தத்திற்கு வந்தான்.

13\. மையலகலச் சூரநகர்
மாய்த்துக் கனகன் மீளுகக்
கொய்திமுகன் மூவாயிர்மாங்
குமரரமைச்சருடன் சென்றே
வெய்ய பானுகோபனுயிர்
வீட்டியணைந்த வீரபுயன்
ஐயன் மலர்த்தாள் பணிந்தேயன்
பருளென்றிரப்ப வருள் புரிந்தான்.

வேலாயுதத்தினுல் மாயை நீங்கினவர்களாய்ப் பூதர்களும் வீரர்களும் சூரபத்மனது நகரைத் தீக்கிரையாக்கி ஹிரண்யனைப் பலவாறு வருத்த, அவன் பிழைத்தாற் போது மென்று கடலில் ஒளிந்து கொண்டனன். அக்கினிமுகன், தருமகோபன், மூவாயிரவர் முதலியவர்கள் வீரபாகுவாலும் விஜயனென்பவனுலும் கொல்லப்பட்டனர். பிறகு வீரபாகுதேவர் பானுகோபனைச் சங்கரித்தனர். தேவர்கள் யாவரும் மகிழ்ந்தனர். வீரபாகுவும் பாசறையடைந்து குகனை வணங்கி நின்றனன். பின்,

14\. முடியாயிரம் சேர் அரிமுகனை
முன்னோன் விடுப்பவச்சிரத்தால்
கடியோன் உயிர் கொன்றுயிரத்தெட்
டண்டச் சேனைகளை முழுதும்
பொடியாய்ப் பொடித்திந்திரஜால
மெல்லாம் போக்கிப் பொரு சூரன்
மடியாமாயை யுருப்பலவு
மடித்தான் வடிவேற் பிடித்தானே.

மறுநாள் உத்தரசமுத்திரத்திலுள்ள ஆஸுர மென்னும் நகரத்தை யிருப்பாகவுடைய ஆயிரந்தலைகளையுடைய

சிங்கமுகன் தன் தமையனாகிய சூரன் முன்தோன்றி "அண்ணா! இப்போது நம்மோடு போர் புரிபவன் சிவ பெருமானேயாவன்; அவனை வெல்லுதல் முடியாதகாரி யம். நாம் தோல்வியுறுதல் நிச்சயம். ஆயினும் நான் சண் டைக்குச் செல்கின்றேன்." என்று கூறிச் செருக்களம் சேர்ந்தனன். பூதசேனைகளும் இலக்கத்தொன்பது வீரர் களும் போர்க்களம் மேவினர். சிங்கமுகன் மாயாபாசத்தை யேவினான். அது நவவீரர்களையும் பூதசேனைகளுள் ஓராயிர வெள்ளத்தையும் பிணித்துக்கொண்டு எழுகடலுக்கப்பால் விளங்கும் உதயகிரியில் தள்ளிற்று; எஞ்சியுள்ள பூதகண ங்களைத் தன் ஆயிரம் வாய்களினாற் கவ்வி விழுங்கினான். இதை யிறைவன் அறிந்து புன்முறுவல் செய்து ஒரு வஜ் ராயுதத்தை யேவினான். அது சிங்கமுகன் மார்பைத் தொ ளைக்க, அவ்வழியாகப் பூதரனைவரும் வெளிவந்து வடி வேலிறையைத் துதித்து நின்றனர். பெருமான் விடுத்த மற்றொரு பாணத்தால் மாயாபாசத்தால் கட்டுண்டு கிட ந்த வீரர்கள் யாவரும் விடுபட்டுப் பெருமானையடைந்து வணங்கினார்கள். பின் சிங்கமுகன் பற்களைக்கடித்து அட்டகாஸம் செய்தனன். வடிவேற் பெருமான் பல அஸ்திரங்களை விடுத்து அவனது ஆயிரம் முடிகளையும் இரண்டாயிரங் கைகளையும் அறுத்தனன். அவை யுட னே முளைத்தன. இங்ஙனம் பன்முறையறுத்தும் அவை முளைப்பதைக் கண்டு ஒரு ஹுங்காரம் செய்து அதட்டிய மாத்திரத்தில் அவை வளராமல் நின்று விட்டன. அக் கொடியோனாகிய சிங்கமுகன் இரண்டு கைகளோடும் ஒரு தலையோடும் நின்று ஒரு கதையைப் பெருமான் மேல் விட் டெறிந்தான். வேலன் ஒரு வஜ்ராயுதத்தை யெறிந்தான். அது அசுரன் எறிந்த கதையைத் தூள் தூளாக்கிச் சிங்க

முகனுடைய உயிரைக் கவ்விக்கொண்டு சென்று கங்கையிற் படிந்து திரும்பி வந்து இறைவன் திருக்கரத்தில் அமர்ந்தது. கந்தருவர் மலர் மாரி பொழிந்தனர். திருமாலும் பிரமனும் இந்திரன் முதலிய தேவர்களும் குகனைப் பல வகையாய்த் துதித்தனர்.

மறுநாள் அதாவது ஆறுவது நாளில் சூரபத்மன் தன் தம்பி சிங்கமுகன் இறந்த செய்தியைச் செவியுற்றுக் கண்களில் நீர் பெருக்கியழுதனன். உடனே ஆலகால விஷம் போல் சீறியெழுந்து ஆயிரத் தெட்டண்டங்களிலுமுள்ள சேனைகளைத் திரட்டிக்கொண்டு போர்க்களம் புகுந்தனன். குகப்பெருமானும் இன்று சூரனை யொழிப்போமென்னும் சந்தோஷத்தால் பூதகணங்களும் குமாரகணங்களும் நாற்புரமும் சூழ்ந்து நிற்க யுத்தபூமியை யடைந்தனன். அடைந்ததும், ஆயிரத்தெட்டண்டங்களின் பல்லாயிர வெள்ள அவுணர் ஸேனைகளையுங் குகன் கண்ணால் நோக்கியொரு ஹூங்காரம் செய்து நீறுக்கினுன். சூரன், பெருமான் மீது சக்ராயுதத்தைப் பிரயோகித்தான். அது இறைவன் தாளில் வந்து சரணமடைந்தது. இதைக்கண்டு பெருஞ்சினங்கொண்டு சூரன் ஆகாயத்திற்கிளம்பி பல அண்டங்களில் மறைந்து நின்று பல அஸ்திரங்களை விடுத்தான். அவையாவும் சூரியன் முன்னுற்ற பனித்திரள் போல் ஒழிந்தன. இதையறிந்த சூரன் மனங்கலங்கிப் போர்க்களத்தைவிட்டுப் புறங்காட்டியோடி வீரமாகேந்திரபுரத்தையடைந்து ஒளிந்து கொண்டான். அவனைத்துரத்திக் கொண்டு வேலன் அங்கும் சென்று ஆங்குள்ள சேனைகளையும் தன்முறுவலினுல் சாம்பலாக்கிச் சூரனை யெதிர்த்தனன். சூரன் மிகவும் மனங்கலங்கித் தன் தாயாகிய மாயையை நினைத்தான். உடனே மாயை யவன்முன்தோன்றி இறந்த

சேனையை மறுபடியும் உயிர்த்தெழுமாறு செய்தனள். இதைக்கண்ட தேவர்கள் யாவரும் மனங்கலங்கி வேலாயுதப் பெருமானிடம் விண்ணப்பித்தனர். வடிவேலனும் உடனே ஓர் ஒப்பற்ற பாசுபதாஸ்திரத்தைப் பிரயோகித்து, உயிர்த்தெழுந்த அசுரப் படைகளையெல்லாம் வீழ்த்தி மிருதஸஞ்சீவிமலையையும் தூளாக்கினான். பிறகு சூரன் பல மாயவுருவங்களைத் தாங்கிப் போர் புரிந்தனன்; சக்கிரவாகப்புள் வடிவங்கொண்டு போர் புரியும் சூரனைப் பரமன் கண்டு தன்னெதிரே நிற்கும் இந்திரனாகிய பெரிய மயில் வாகனத்தின் மீது ஆரோகணித்து ஒரு வாளால் அப்புள்ளை இரண்டு துண்டாக்கினான். இங்ஙனம் துண்டிக்கப்பட்ட சூரனானவன், அனல், கால், நீர், நிலம் எனவாகியும், பல தேவரூபங்களை யொரேகாலத்தில் தாங்கியும் போர் புரிந்தனன். இதைக் கண்ணுற்ற குமரேசன் அச்சூரன் கொண்ட அவ்வவ்வுருவத்தை யடக்கவல்ல பல அஸ்திரங்களை விடுத்து மாய்த்தனன். சூரனும் நிற்கதியாய்த் தியங்கி நின்றனன். அப்போது ஷண்முகன் தன்னந்தனியனாய் நிற்கும் சூரன்முன் தனது விராட் ஸ்வரூபத்தைக்காட்டி அவ்வடிவத்தைத் தரிசிப்பதற்கு அவனுக்கு ஞானக்கண்ணையும் தந்தருளினார். சூரன் அப்பேருருவத்தைக் கண்டு "ஏகநாதனே! எம்மை யாண்டருளும் பராபரனே!! ஷண்முகா!!" என்று துதித்துக் கைகுவித்து வணங்கினான். உடனே பரமன் தனது பாரமேஸ்வர வடிவத்தை மறைத்துக் கொண்டனன். உடனே சூரன் அஞ்ஞானத்தால் மறைக்கப்பட்டவனாய் மறுபடியும் போரிழைக்கவாரம்பித்துப் பேரிருள் போல் நின்று யாவரையும் விழுங்கிவிட நினைத்தனன். அவ்விருள் கந்தபிரானது வேலாலொழிந்தது. பிறகு சூரன் கடலானான். அக்கடலை

யும் வேலாயுதமானது வறளச்செய்தது. பிறகு சூரன் ஒரு மாமரமாய் நின்றான். அப்பொழுது அவ்வேலானது அம் மாமரத்தை யிருகூறாய்ப்பிளந்தது. இங்ஙனம் சூரனையிரு பிளவாய்ப்பிளந்த சுடர் வேலானது பெருமகிழ்ச்சியோடு தேவநதியிற் படிந்து வந்து இறைவன் திருக்கரத்தில் அமர்ந்து நின்றது. சூரனது அவ்விரண்டு கூறுகளும் நம் பெருமானுக்குக் கொடியாகவும் வாகனமாகவும் அமர்ந்தன. ஆகாயத்தில் தேவதுந்துபி முழங்கிற்று. தேவர்கள் மலர் மாரி பொழிந்தனர். மாலும் அயனும் தேவர்கள் பலரும் ஜெய ஜெய சப்தத்தோடு துதித்துப் போற்றினார்கள். பின்னர், யாவரும் அங்கிருந்து புறப்பட்டு ஜயந்தனைச் சிறைமீட்டுக்கொண்டு திருச்செந்தூர் வந்து சேர்ந்தனர். கடலில் மீனுருவோடு ஒளிந்துகொண்டிருந்த சூரபத்மன் புதல்வன், ஹிரண்யன் இறந்துபட்ட ஸகல அஸுரர்களுக்கும் ஈமக்கடன்களைச் செய்து முடித்தான். சூரன் நகரமாகிய வீரமாகேந்திரமும் முருகன் திருவுளத்தின்படி கடலில் ஆழ்ந்து நாசமாயிற்று.

பிறகு வெற்றிவேற் பெருமான் தேவர்களது வேண்டுகோளுக்கிரங்கி அவர்களால் இயற்றப்பட்ட சிறந்த பூசையையேற்றுக்கொண்டு அச் சீரலைவா யென்னும் ஜயந்தீபுரத்திலிருந்து புறப்பட்டு மயில் வாகனரூடராய் திருப்பரங்குன்றிற்கு வந்து சேர்ந்தனர்.

தேவேந்திரனும், பரமன் தனக்குச்செய்த மஹோபகாரத்தை மனத்தில் நினைத்து அடியற்ற மரம் போல் கீழே விழுந்து "அடிகாள்! ஐராவதத்தால் வளர்த்தப்பட்ட தெய்வயானையை மணந்தருள்வீராக. யான் அடிகளுக்குச்

செய்யத்தக்கபணி யிதைவிடச் சிறந்தது மற்றொன்று காணேன். அங்கீகரித்தருளல் வேண்டும்" என்று விண்ணப்பித்துக் கொண்டனன். முருகனும் அதற்கு இணங்கி, இந்திரனை யனுக்கிரகித்தனர். தெய்வயானையின் மணம் வெகு சிறப்பாக நடைபெற்றது. தேவர்கள் யாவரும் குமரனது திருமணத்தைக் கண்டு களித்தனர். பின், தேவ ஸேனுபதி, யாவரும் பின்தொடரத் திருப்பரங்கிரியினின்றும் புறப்பட்டுச் சுவர்க்கலோகத்தையடைந்து தேவர்களை யெல்லாம் அங்கே குடியேற்றித் தேவேந்திரனுக்குப் பல தூய்மையான நதீ ஜலங்களால் அபிஷேகம் செய்வித்து அவனைச் சிங்காதனத்தின்மேல் வீற்றிருக்கும்படி செய்து நான்முகப்பிரமனுல் நவரத்ன மயமானமுடியை யவனுக்குச் சூட்டுவித்தனர். இந்திரன் தன்னுடைய உடல் பொருளாவி மூன்றையும் பரமனுக்குத் தத்தம் செய்து பணிந்து நின்றனன். ஜயந்தனும் மனமுருகித் துதித்து நின்றான். மற்ற திக்குப்பாலகர்கள் எழுவரும், திருமாலும், அயன், முதலிய தேவர்களும், வீரபாகு முதலிய நவவீரர்களும், இலக்ஷம் படைவீரர்களும் கார்த்திகேயனது இன்னருளைப் புகழ்ந்து பாராட்டித் தனித்தனியாய்த் துதித்து நின்றனர். பின்னர், கடப்பமாலையையணிந்து தேவஸேனுதிபதி பிரம்மா விஷ்ணு முதலிய ஸகல தேவர்களுக்கும் விடைகொடுத்தனுப்பித் தெய்வயானைப் பிராட்டியோடு இலக்கத்தொன்பதுபேரும் சூழத் திருக்கைலாயத்தைச் சேர்ந்து பராசத்தியாகிய பார்வதியையும் சிவபிரானையும் வணங்கி நின்றனன். சிவபெருமானும் உமையம்மையும் மனமகிழ்ந்து உடலம் பூரித்தனர். தெய்வயானையும் சிவசக்திகளை வணங்கித் துதித்தனள். பின், முருகனும் தேவயானையும் கந்தகிரியிலமர்ந்திருக்கும்போது நாரதமுனிவரால் வள்ளியம்மையின் செய்

தியை யறிந்து முருகன் அங்கிருந்து புறப்பட்டுப் பரிபூர்ண சலமென்னும் திருத்தணிகைக்கு வந்தனன். அங்கிருந்து கட்டழகுடைய ஒரு சிறந்தவேடவுருவந்தாங்கி, வள்ளி மலையை யடுத்த தினைப்புனத்திற் காவல் புரியும் வள்ளியம்மையின் முன் தோன்றிப் பலவாறு அவளுடன் சம்பாஷித்துக் கொண்டு நின்றபோது, வள்ளியின் வளர்ப்புத்தந்தையாகிய நம்பிராஜனும் வேடரும் அங்குவர, உடனே முருகன் ஒரு வேங்கைமரமாய் நின்றனன். அவர்கள் சென்றபின் மறுபடியும் செவ்வேள் வேடவுருவத்தோடு வள்ளியின் முன்நின்று வாதுபுரிந்தனன்; மறுபடியும் வேடவீரர் அங்கு வர இறைவன் கூன் சேர்ந்த மூப்பையுடைய நல்ல தவசிவடிவினனாகி அவர் முன்விளங்கி அவர்களணிந்து கொள்வதற்குத் திருநீறளித்தனன். பின்னர் அத்தொண்டுகிழத்தவசி, வள்ளியம்மையிடம் தேனும் தினைமாவுமுண்டு ஏழு குன்றுகளுக்கும் மேல்விளங்கும் குமரிச்சுனையின் நீரைப் பருகினன். பின் ஓரியானையால் பயமுறுத்தப்பட்ட வள்ளி நாயகி கிழத்தவசியைக்கட்டியணைய, எம்மிறைவன், தனது சிறப்புற்றோங்கு முண்மை வடிவைக் காட்டி நின்றனன். இங்ஙனந் தோன்றிய முழுமுதற்கடவுளை அவ்வள்ளியம்மையார் பணிந்துத் துதித்தனள். குமரவேளும் தமது கருணை நோக்கத்தையும் திருவுள்ளத்தையுங்கொண்டு வள்ளியம்மையின் அகத்திலும் புறத்திலும் கலந்தருளினன். பின்னர், வள்ளிகாந்தன் நம்பிராஜனது மனையிலிருந்து வள்ளியைக் களவாடிச் செல்ல, அவர்களைத் தொடர்ந்து வந்த வேடர்களைச் சேவலின் ஹூங்காரத்தினால் வீழ்த்தினான். பின் வள்ளியம்மையின் விருப்பத்தின்படி அவர்களையெழுப்பி, நம்பிராஜனது விருப்பத்தின்படி வள்ளியை விதிப்படி மணந்து, வேடர்களுக்கு அருள்புரிந்து, தணிகை

வெற்பில் அமர்ந்து மண்ணுலகத்தின் அடியார்க்கருள் புரிந்து வள்ளீஸமேதனுய்க் கந்தவெற்பிற்கு எழுந்தருளி னுன்.

சிவம்

ஆறிறு தோள் வாழ்கவரு ளாறுமுகம் வாழ்கவெற்பைக்
கூறிடுவேல் வாழ்க கொடிவாழ்க—ஏறிடுமா
வீரமயில் வாழ்க விரு மெல்லியர்கள் வாழ்கவன்பார்
சீரடியார் வாழ்க சிறந்து.

உபோத்காதம் முற்றிற்று.

———:o:———

# ஸ்ரீஸுப்ரஹ்மண்ய தத்துவம்.

## (நூல்)

### ஸம்பவகாண்டம்.

(அவதாரிகை) முன் உபோத்காதத்திற் கூறப்பட்டுள்ளபடி, ஸ்காந்தபுராணம், சங்கரஸம்ஹிதை சிவரஹஸ்ய கண்டத்திலுள்ள ஸம்பவகாண்டம், அஸுரகாண்டம், வீரமஹேந்த்ரகாண்டம், யுத்தகாண்டம், தேவகாண்டம் என்னும் ஐந்து காண்டங்களிலுள்ள ஸ்ரீஸுப்ரஹ்மண்யரது பாஹ்யசரித்திரத்தின் அந்தரார்த்தமாகும் ரஹஸ்யமே ஸ்ரீஸுப்ரஹ்மண்யதத்துவமென்னும் இந்நூலாகும்.

பகைவர்களாகிற சூரபத்மன், ஸிம்ஹமுகன், தாரகன் முதலிய அஸுரர்களால் வருந்தி மனந்தளர்ந்து, ஸ்வர்க்கமாகும் தனது ராஜ்யத்தைவிட்டு ஓடியொளித்துக் கொண்ட இந்திரன் பரமேஶ்வரனைச் சரண்புக, ஈசன் இந்திரனுக்கருள்புரிந்து தானே குஹக்கடவுளாக அவதரித்துத் தேவசத்ருக்களாகிய அஸுரர்களையொழித்துத் தேவராஜனாகும் இந்திரனுக்கு மறுபடியும் ஸ்வர்க்காதிபத்தியம் அருளினன் என்பது தான் ஸ்கந்தசரித்திரத்தின் பரமஸாரமாகும்.

இச்சரித்திரத்தில் தேவர்கள், இந்திரன், அஸுரர்கள், ஸ்வர்க்கம், பரமசிவன், பார்வதி, குஹன், குஹனது அவதாரம், சரவணம், கார்த்திகைமாதர்கள், நான்முகப் பிரமன், நவவீரர்கள், தெய்வயானை, வள்ளி முதலியவர்களின்

தத்துவங்களை நன்கறிந்தால்தான் ஸுப்ரஹ்மண்யதத்துவம் நன்கு அறியப்பட்டதாகும். ஆதலின் மேற்கூறியவற்றின் தத்துவம், ஈண்டு, பலதொகுதிகளாகப் பிரிக்கப்பட்டு அவற்றில் விமர்சிக்கப்படும்.

முதற்காண்டமாகும் ஸம்பவகாண்டத்தில் விமர்சிக்கப்படும் விஷயங்களாவன :—

1. தேவாஸுரர்களின் தத்துவம்.
2. அவதாரதத்துவம்.
3. சரவணப்பொய்கையின் தத்துவம்.
4. சிவசக்திகளின் ஐக்கியமே ஷண்முகனெனல்.
5. குஹாவதாரகாரணம்.
6. ஸுப்ரஹ்மண்ய நாமாவளி தத்துவம்.
7. நவவீரர்களின் தத்துவம்.
8. பாலலீலா தத்துவம்.
9. அயனைச் சிறையிட்ட தத்துவம்.
10. பிரணவார்த்தப் பிரகடனம்.
11. பிரணவார்த்த மஹிமை.
12. இந்த்ராதி தேவர்க்கும் குஹனுக்கும் நடந்த யுத்தமும், பின்னர் தேவர்க்குண்டான அநுக்கிரஹமும்.
13. தேவகுரு குஹனைத்துதித்தல்; குஹன் தேவர்களை யருளல்.
14. விராட்ஸ்வரூப வர்ணனம்.
15. தேவர்கள் குஹனைத் துதித்தல்.
16. குஹப்பிரஹ்மத்தின் மாஹாத்மியம்.
17. ஸ்கந்தகிரியில் குஹனுக்கு ஸேநாதிபத்திய பட்டாபிஷேகம் செய்தல்.

18. தேவர்களின் முறையீடும், ஸோமாஸ்கந்தரின் அருளும்.
19. ஆயுதங்கள் முதலியவற்றின் தத்துவம்.
20. தாரக ஸம்ஹார தத்துவம்.
21. தேவகிரியில் தேவர்கள் குஹனைப் பூஜித்தல்.
22. சிவகுமரன் சிறந்த அஸ்த்ரங்களைப்பெற்ற தத்துவம்.
23. பாலைவனத்தைக் கடந்த தத்துவம்.
24. பரங்குன்று, திருச்செந்தூர் தங்களை அடைந்த தத்துவம் முதலியனவாம்.

## 1. தேவாஸுரர்களின் தத்துவம்.

**प्रमादात् अनात्मनि देहादौ आत्मभावात् असुराः विरोचनप्रभृतयः पुरा अभवन् । तथा अप्रमादात् स्वाभाविकचित्सदानन्दाद्वितीयब्रह्मात्मना अवस्थानात् सुराश्चेति इन्द्रादयः अभवन् ॥**

(सनत्सुजातीयं—5. शांकरभाष्यं)

பிரமாதாதி தோஷங்களால் அநாத்ம வஸ்துக்களாகும் பாஹ்யப் பொருள்களிலும், ஸ்தூல ஸூக்ஷ்ம காரண சரீரங்களிலும் ஆத்மபுத்தி யுடையவர்கள் அஸுரர்களெனப் படுவர். இவர்கள் விரோசனன், பண்டாஸுரன், சூரபத்மன், முதலியவர்களாவர்.

காமக்குரோதாதி தோஷங்களற்று ஸ்வபாவமாகவே ஸச்சிதாநந்த அத்விதீய பிரஹ்மமாய் விளங்குபவர் இந்திரன் முதலிய தேவர்களாவர்.

இந்த லக்ஷணத்தின்படி தேவர்களுக்குப் பிரமாதாதி தோஷங்களும், சத்ருக்களாகும் அஸுரர்களால் துன்பமும் நேரிடுவதற்கும், தேவர்கள் அங்ஙனம் நினைப்பதற்கும் கூடாதன்றோ? கூடாததே. எனின், தேவர்கள் தூய மனமுடையவர்களாய் விவேகாதி ஸாதனங்களைப்பெற்று பரோக்ஷஞானமுடையவர்களே யன்றி, அபரோக்ஷ ஆத்ம ஞானிகளல்லர்: ஒருவன் பரோக்ஷமாய் எவ்வளவு வாசித்திருப்பினும் காலகர்மங்களால் அவன் அஞ்ஞான மயக்கிற் சிக்கி வருந்தக்கூடும்.

ज्ञानिनामपि चेतांसि देवी भगवती हि सा ।
बलादाकृष्य मोहाय महामाया प्रयच्छति ॥

என்னும் பிரமாணத்தின்படி பராசக்தியானவள் உத்தமாதிகாரியான இந்திரனையும் மாயாவசத்தனாக ஆக்கினள். இங்ஙனம் இந்திராதி தேவர்களுக்கு மோஹமும், பிரமாதாதி தோஷங்களும் பல ஸந்தர்ப்பங்களில் ஏற்பட்டு தக்க தண்டனை யடைந்து பின்னர் அவர்கள் விவேகமுற்றவர்களானார்களென்று புராணாதிகளால் நாம் நன்கு அறியலாம். ஸ்காந்த புராணத்தில் இந்திராதி தேவர்களுக்கு அஸுர பாதை யேற்பட்டமைக்கு என்ன காரணமெனின் அது கூறப்படுகின்றது.

ரஜோகுணப் பிரதானனான சதுர்முகப் பிரஹ்மாவின் புதல்வன் தக்ஷப்பிரஜாபதியாவன். இவன் தமோகுணம் மேலிட்டு விஷயஸுகங்களில் மிகப்பற்றுடையவனாய்,காம்ய கர்மங்களே மிகச் சிறந்தவை யென்றும், ஜீவர்களியற்றுங் கர்மங்களின் பயனையருள ஒரு ஈஶ்வரனை யொப்புதல் அவஶ்யமில்லை யென்றும் தீர்மானித்து மிக்க செருக்குடன் ஒரு

நிரீஸ்வரயாகம் இயற்றினன். இந்த அவைதிகமான யாகத்திற்குப் பராசக்தியால் மோஹிக்கப்பட்டவராய், விவேகமற்று, பிரஹ்மா, விஷ்ணு, இந்திரன், ஸூர்யன், மற்றுமுள்ள தேவர்கள், முனிவர்கள் முதலியவர்கள் சென்றிருந்தனர்.

அந்த யாகத்திற்கு வந்த அனைவரும் பரமசிவனது கோபாவதாரமாகிய வீரபத்ரமூர்த்தியால் நன்கு தண்டிக்கப்பட்டனர். ஆயினும் சிவத்துரோகமென்னும் பெரும் பாபம் தீர்ந்திலராய் மனத்தூய்மை கெட்டு மலவிக்ஷேப ஆவரணாதி தோஷங்கள் மூடப்பெற்று துன்புறுவதற் குரியவர்களானார்கள். இக்காரணமாகவே சூரனாதி அஸுரர்கள் தோன்றினார்கள்.

இங்ஙனமன்றித் தேவஸுரர்களின் தத்துவம் வேறுவகையாகவும் சாஸ்திரங்களிற் கூறப்பட்டிருக்கின்றது. அஃதெங்ஙனமெனின்,

अभयं सत्वसंशुद्धिः ज्ञानयोगव्यवस्थितिः ।
दानं दमश्च यज्ञश्च स्वाध्यायस्तप आर्जवम् ॥
अहिंसा सत्यमक्रोधः त्यागश्शान्तिरपैशुनम् ।
दयाभूतेष्वलोलत्वं मार्दवं ह्रीरचापलम् ॥
तेजः क्षमा धृतिः शौचमद्रोहो नातिमानिता ।
भवन्ति संपदं दैवीमभिजातस्य भारत ॥

(கீதை 16-வது அத்தியாயம்)

பயமின்மை, மனத்தூய்மை, குருசாஸ்திராதிகளால் ஞானத்தின் மஹிமையை நன்கறிந்து அம்மார்க்கத்தில் பழகுதல், தானம் செய்தல், பாஹ்யேந்திரியங்களை யடக்குதல், அக்னிஹோத்ரம் பூஜை முதலியவற்றைச் செய்தல்,

வேதாத்தியயனம் செய்தல், தவமியற்றல், கபடமின்றி ருஜுவாயிருத்தல், பிராணிகளை ஹிம்ஸைசெய்யாமை, பொய் பேசாமை, குரோதமின்மை, அகங்காரமமகாரங் களை விடுதல், மனச்சாந்தி, கோள் சொல்லாமை, தயை, விஷயங்களில் இச்சையின்மை, பேச்சும் செய்கையும் மிருதுவாயிருத்தல், விலக்கான காரியம் செய்யும்போது வெட்கப்படுதல், பிரயோஜனமில்லாத காரியத்தைச் செய்யாமை, தேஜஸ், பொறுமை, தைரியம், சரீரமனங்களின் சுத்தம் இவைகளை யுடைமை, வஞ்சனை யின்மை, தற்புகழ்ச்சியின்மை, முதலிய குணங்கள் ஸாத்விகஸ்வபாவமான தெய்வ ஸம்பத்துகளாகும்.

दम्भो दर्पोऽभिमानश्च क्रोधः पारुष्यमेव च ।
अज्ञानं चाभिजातस्य पार्थ संपदमासुरीम् ॥

டம்பம், கர்வம், அபிமானம், கோபம், கொடூரகுணம், அக்ஞானம் அவிவேகம் முதலிய (ராஜஸதாமஸ) குணங்கள் ஆஸுரமாகும். இதன்படி அஸுரப்பிரக்ருதியை யுடையவர்கள் விதிநிஷேதங்களை யறியார்கள்; அவர்களிடத்தில் நல்லொழுக்கமும் சுத்தமும் இரா. பொய்யும் அப்பிரதிஷ்டையும் அவர்களிடத்தில் நன்கு விளங்கும்; உண்மையென்பது கனவிலுங் கிடையாது. ஸதா காமம், குரோதம் முதலிய துர்க்குணங்களோடு கூடியவர்களாய் விளங்குவார்கள்.

நற்குணங்களாகும் தெய்வ ஸம்பத்தும், துர்க்குணங்களாகும் அஸுர சம்பத்தும் அந்தக்கரணத்தின் தர்மங்களே யாகுமென்பதையும், இந்த தேவாஸுரயுத்தம் ஸதா ஜீவர்களின் மனதில் நடந்துகொண்டிருக்கின்றதென்பதையும் நன்கு ஞாபகத்தில் வைத்துக் கொள்வது அவசியம்.

நற்குணங்களோடு கூடிய சித்தமுடைய தேவர்க்கும் தேவேந்திரனுக்கும் மனக்கலக்கமேற்பட்டு துர்க்குணங்களாகும் பகை அஸுரர்களால் மொத்துண்டு வருந்தியபோது அவர்கள் நிஷ்காமகர்மத்தை ஈஶ்வரார்ப்பணமாய்ச் செய்ய மலதோஷம் நீங்கிப் பரமேஶ்வரனை யுபாஸித்துத் தவம் செய்ய விக்ஷேப தோஷமும் நீங்கிற்று. இங்ஙனம் தேவர்கள் மலவிக்ஷேப தோஷங்களை நீக்கிக்கொண்டு பரிசுத்தமான அந்தக்கரணத்தோடு விளங்கினார்கள்.

அப்போது அவர்களுக்கு ஆவரணமென்னும் மறைப்பு மாத்திரம் இருந்தது. தேவர்கட்குள்ள அஜ்ஞானமென்னும் மறைப்பை நீக்கி ஆத்மஜ்ஞானத்தையருளி தானே தானாய் விளங்கும் ஸ்வாராஜ்ய நிலையை யருளுவதற்காகவே ஸ்ரீஸுப்ரஹ்மண்யன் அவதரித்தது.

## 2. அவதார தத்துவம்

आसीनामासने सार्धमम्बिकामम्बिकापतिः ।
व्यलोकयदमेयात्मा साकांक्षं षड्भिराननैः ॥

तत्क्षणात् नयनैः षड्भिः ललाटैरूर्ध्वरेतसः ।
निरगात्कोटिसूर्याभं तेजः कालाग्निसंनिभम् ॥

(ஸம்ப–25 அத்யா)

அளவிடமுடியாத ஸ்வரூபமுடையவரும் ஜகதம்பிகையின் நாதனுமாகிய பரமேஶ்வரன் தன்னுடன் திவ்விய ஸிம்ஹாஸனத்தில் வீற்றிருக்கும் அம்பிகையை ஆறு திருமுகங்களாலும் மிக்க விருப்பத்தோடு நோக்கினார். அந்த க்ஷணத்திலேயே மேல்நோக்கும் வீர்யத்தை யுடைய

பரமேஸ்வரனிடமிருந்து அவரது ஆறு லலாட நேத்திரங்களின் மூலமாய்க் கோடி ஸூர்யப் பிரகாசமுடையதும், பிரளய காலாக்கினிக்குச் சமமானதுமான தேஜஸ்ஸானது வெளிப்பட்டது. இந்த தேஜஸ்வின் பிரகாசமானது சராசராத்மக ஸர்வாண்டங்களிலும் வியாபித்து விளங்கிற்று. பின் அவ்வகண்ட தேஜஸ்ஸானது ஆறு பொறிகளாயின. அப்பொறிகளைப் பரமேஸ்வரன் அக்கினி வாயுக்களிடம் தந்து அவற்றைக் கங்காநதியின் அருகிலுள்ள சரவணமென்னும் நாணற் புத்திற் சேர்த்துவிடும்படி ஆக்ஞாபித்தனர். அங்ஙனமே அவர்கள் செய்து முடித்தனர். அந்த ஆறு பொறிகளும் சரவணத்தை யடைந்ததும் அவை ஆறு குழந்தைகளாயின.

இதன் தத்துவமாவது :—

சுத்தசைதன்ய ஞானமே லலாடநேத்திரத்தின் மூலமாய் வெளிவந்ததாகும் : நெற்றிக்கண்தான் ஞானசக்ஷுஸ் எனப்படுவது. பரமேஸ்வரனுக்கு ஐந்து முகங்கள் வெளிப்படையாகவும், ஒருமுகம் குடிலையென்னும் பெயர்பெற்று ஆந்தரமாகவும் ஆறுமுகங்களுண்டு. இவை முறையே பூமி, ஜலம், அக்கினி, வாயு, ஆகாசம், மனம் என்பவையாகும். பஞ்சபூதங்களின் ஸத்வாம்ஸங்கள் தனித்தனியாகவும் ஸமஷ்டியாகவும் கந்த, ரஸ, ரூப, ஸ்பர்ஸ, சப்த, ஸுகதுக்கங்களாகவும், இவற்றை யுணர்தற்குறிய கிராணம், ரஸனை, சக்ஷுஸ், துவக்கு, சுரோத்திரம், அந்தக்கரணங்களாகவும் ஆயின. பஞ்சேந்திரியங்களாலும் மனத்தினாலும் அறியத்தக்க ஞானமே ஆறு நெற்றிக்கண்களினின்றும் வெளிக்கிளம்பி ஆறு பொறிகளாய் ஏற்பட்டதன் தத்துவமாம்.

இந்த சுத்த நிர்க்குண நிருபாதிக ஞானமானது பரம சிவனது நெற்றிக் கண்களிலிருந்து தேஜோ வடிவமாய் வெளிக்கிளம்பியபோது ஆகாசத்தோடும், பின்னர் அப் பொறிகள் வாயு அக்கினிகளிடத்தில் கொடுக்கப்பட்டு தேவகங்கையிலிடப்பட்டமையால் வாயு, தேயு, ஜலங்க ளோடும், பின்னர் அவை நாணற் காட்டில் ஒதுக்கப் பட் டமையால் பூமியோடும் சம்பந்தப்பட்டு இங்ஙனம் பஞ்ச மஹா பூத உபாதிகளோடு கூடி ஸகுண ஸாகார வடிவத் தோடு விளங்குவன வாயிற்று. இவ்விஷயம்,

तस्मादात्मन आकाशः संभूतः; आकाशाद्वायुः वायोरग्निः; अग्नेरापः ; अद्भ्यः पृथिवी ; पृथिव्या ओषधयः ॥

என்னும் உபநிஷத் பிரமாணத்தால் நன்கு வித்திக்கின் றது. அன்றியும்,

ஈசன், நெற்றி விழியினெருப்புப் பொறியருளப்
பற்றியவை யெங்கும் படர்ந்திலகக்—குற்றமிலா
விண்ணவர்கண் டஞ்ச விரிசடையான் பொற்பிழம்பை
நண்ணுலவை வேந்தற்கு நன்கருளத்—திண்ணவனும்
தீக்கடவுட் கீயவவன் சீதப் புனற்களிக்க
மாக்கங்கை தூய மலர்க்கரத்தால்—தூக்கி
வரவணத்தி னல்திகழும் வாசமலர்ப் பொய்கைச்
சரவணத்திற் சேர்க்கத் தனித்த—ஒரு பொருள் நீ
பூதங்க ளாகிப்புலனாகி ஆங்கவற்றின்
பேதங்க ளாகிப் பிறவாகி—வேதங்கள்
காண்டற் கரிய கருணைத் திருவுருவாய்
வேண்டற் குரிய விழுப் பொருளாய்—ஆண்டுத்

திருமுகங்க ளாறும் திருக்கரமீ ராறும்
சுருதி புகழ் தாளிரண்டும் தோன்ற—ஒரு வடிவாய்
நின்று விளையாடி நீள்விண்மீன் மாதர் தனம்
ஒன்றும் சுவைத் தீம்பால் உண்டவனே!

என்னும் ஓரன்பரது திருவாக்கும் ஈண்டறியத் தக்கது.

3. சரவணப் போய்கையின் தத்துவம்

சரவண மென்பது நாணற்காடு. நாணல் ஓர் அற்ப மாகிய புல். **पृथिव्या ओषधयः** = ப்ருதிவியிலிருந்தும் ஓஷதிகள் (உண்டாயின) வென்னும் உபநிஷத் பிரமாணத்தின்படி சரவணம் ஓஷதிகளை யுணர்த்துவதோடு உபலக்ஷணமாய்ப் பஞ்ச பூதங்களையுங் குறிப்பிடுகின்றது. ஆதலின் பாஞ்ச பௌதிகப் பிரபஞ்சமே சரவணமாகும். பிரபஞ்சந்தான் பரப்பிரஹ்மத்தின் அபிவியஞ்சகமாகும். வடமொழி யில் எழுத்துக்களால் எண்களைக் குறிப்பிப்பது வழக்கம். அதன்படி ஶர என்பதற்கு இருபத்தைந்தென்பது குறிப் பாகும். வணம் = வனம் = கூட்டம். ஆகவே இருபத் தைந்து தத்துவங்களின் கூட்டமாகும் இப்பிரபஞ்சமே சர வணமாகுமென்றும் அறிதற்குக் கூடும். தத்துவ மயமாகும் பிரபஞ்சத்திற்கு அதிஷ்டானமாய் அதில் விளங்குபவன் சரவணபவன்.

4. சிவ சக்திகளின் ஐக்கிய வடிவமே ஷண்முகன்.

शिव उवाच—

हन्त ते कथयिष्यामि रहस्यं शृणु सुन्दरि ।
शिवोऽहं निष्कळः पूर्णः शक्तिस्त्वमनपायिनी ॥

पञ्चकृत्यपरश्चाहं पञ्चवक्त्रः सदाशिवः ।
एकवक्त्रासि बहुधा भिन्नापि परमेश्वरी ॥
त्वन्मयो मन्मयो यस्मात् षड्वक्त्रः परिकीर्तितः ।
पञ्चकृत्यपरोऽयं च प्रपञ्चस्यास्य लीलया ॥

சிவன் கூற்று:—ஓஹோ! இது மிகவும் ஆச்சரியம். ஸுந்தரீ அந்த ரஹஸ்யத்தைக் கூறுகிறேன் கேள். நானோ களங்கமற்ற பரிபூர்ண சிவன்; நீயோ என்றும் அழியாத பராசக்தி. நான் சிருஷ்டியாதி பஞ்ச கிருத்தியங்களுக் கதிபன். நீ பலவாய் விளங்கினாலும் ஒரு முகத்தையு டைய பரமேஸ்வரி. நமது மைந்தனாகும் இவனோ உனது ஸ்வரூபத்தையும் எனது ஸ்வரூபத்தையும் உடையவன். ஆதலின் இவன் ஷண்முகங்களோடு விளங்குகின்றனன். (ஸம்ப—35 அத்யா)

இஃதன்றியும் பரமசிவன் ஸத்ரூபனென்றும் பராசக்தி சித்ரூபிணி யென்றும் சாஸ்திரங்கள் கூறுகின்றன. ஆதலின் சிவசக்திகளின் ஐக்கிய வடிவ ஸ்ரீஸுப்ரஹ்மண்யன் ஸச்சிதாநந்தஸ்வரூபமுடையவனாவன்.

इति सच्चिदेशममितं वचसां मनसामगोचरमनन्तसुखम् ।
शिशुभावमेत्य समलंकृतिमत् समलंचकार शिवयोः सविधम् ॥

(சிவரஹ—29—16.)

'அளவுக்கடங்காததும், மனோவாக்குக்களுக்கு எட்டாததுமான அநந்தாநந்த ஸச்சித் பரப்பிரஹ்மமானது இங்ஙனம் மிகவலங்காரமான ஒரு குழந்தைத் தன்மையை வகித்துப் பார்வதீ பரமேஸ்வரர்களின் அருகில் நின்று விளையாடி யலங்கரித்தது.' என்னும் பிரமாணம் இங்கே

அறியத் தக்கது. ஆகவே குஹஸ்வரூபமானது சிவசக்திக ளின் ஐக்கிய வடிவ ஸச்சிதாநந்த பிரஹ்மஸ்வரூபமே யாகுமென மேலே விமர்சித்த பிரமாணங்களா லேற்பட் டன நிற்க,

## 5. குஹாவதார காரணம்

"மாயாபுத்திரர்களாகும் சூரபத்மாதிகளின் கொடுந் தவத்திற்கும் வீரயாகத்திற்கும் மகிழ்ந்து அவர்கட்கு அனேக சிறந்த வரங்களை யருளிய பரமசிவனே அவர்க ளது துஷ்டச் செயல்களை யறிந்தபோது அவர்களை யேன் கொல்லக் கூடாது? அவர்களைச் சம்ஹரிக்கக் குஹனை யேன் வெளியிட வேண்டும்?" என்னும் ஆசங்கை யாவருக் கும் உண்டாகலாம். இதற்குச் சமாதான மாவது:—

பரமசிவன் நிர்விசேஷசுத்தசைதன்யமெனப்படுவன். சிவசைதன்யமானது எங்கும் வியாபகமாய் விளங்கி நாம ரூபப் பிரபஞ்சமாகும் மாயாகார்யங்களுக்கும், காரண மாயைக்கும் ஆதாரமாயும் ஆஶ்ரயமாயும் இருக்கின்றது.

ஸாமான்ய சேதனமாய் விளங்கும் நிர்விசேஷ சுத்தப் பிரஹ்ம வடிவ பரமேஶ்வரனுக்கும், மாயை, மாயா கார் யங்கள் முதலியவற்றிற்கும் விரோதம் இல்லை. மாயையும் அதன் கார்யங்களும் விசேஷரூபம்; சிவம் ஸாமான்யரூபம். ஸாமான்ய விசேஷ ரூபங்களுக்குப் பரஸ்பரம் விரோத மில்லை. அரணி (நெருப்புக் கடையும் கட்டை) விசேஷ ரூபம். இக்கட்டையினிடத்தில் நெருப்பு கூடமாய் வியக் தப் படாமல் ஸாமான்ய வடிவத்தோடு இருக்கின்றது. இங்ஙனமுள்ள ஸாமான்ய அக்கினிக்கும் விசேஷவடிவ கட் டைக்கும் பாதகம் (விரோதம்) இல்லை; என்றால், ஸாமான் யரூப அக்கினியானது விசேஷரூப அரணிக் கட்டையைக்

கொளுத்தாது. இங்ஙனமே பரமசிவனும், ஸாமான்ய ஸத்தாமாத்திர வடிவினனுயுள்ள காரணத்தால் மாயை, மாயாகார்யங்கள் இவைகளுக்கு எள்ளளவும் கெடுதி செய்ய ஆற்றலுள்ளவனுகான்; மற்ரூ அவற்றிற்கு அநுகூலனேயாவன். ஆகையினுற்ரூன் புராணங்களில் அஸுரர்கள் யாவருக்கும் அவரவர் வேண்டிய வரங்களைப் பரமசிவன் தந்ததாகக் கூறப்பட்டுள்ளது.

வேதாந்தசாஸ்திரங்களிலும் மாயைக்கு ஆஶ்ரயம் ஸாமான்ய சேதனமே யென்று கூறப்பட்டுள்ளது. மாயைக்கு 'स्वाश्रयस्वविषयत्वम्' என்ருல், தனது ஆஶ்ரயத்தை மறைத்துவிடும் தன்மையையே லக்ஷணமாகக் கூறப்பட்டுள்ளது. பரமசிவன் பஸ்மாஸுரனுக்கு வரம் தந்து அவனுக்குப் பயந்து ஓடுங்கதை ஸ்வாஶ்ரய ஸ்வவிஷய தத்துவத்தை நன்கு விளக்குகின்றதல்லவா?

ஆதலின், ஸ்மான்ய சேதனமாகும் பரமசிவன் மாயாபுத்திரர்களான சூரனுதியரைக் கொல்லமாட்டான். ஸாமான்ய அக்கினி விசேஷவடிவ மரத்தைத் தஹிக்காதது போல.

அரணியிலுள்ள அநுத்பூத அக்கினியைக் கடைதல் மூலமாய் வெளிப்படுத்தி விசேஷரூப அக்கினியாக்கின் அவ்விசேஷவடிவ அக்னியானது விசேஷரூப தன் ஆஶ்ரய அரணியைத் தஹித்துவிடும். இங்ஙனமே நிர்விசேஷ ஸாமான்ய சேதன வடிவ பரமசிவனது நெற்றிக் கண்களினின்றும் வெளிக்கிளம்பிய ஞானப்பொறிகளே விசேஷப்பிரஹ்மவடிவ ஸுப்ரஹ்மண்ய ஸ்வரூபமாகும். இந்த விசேஷவடிவ ஸுப்ரஹ்மண்யமே மாயாகார்யமான ஸகல அஸுரர்களையும் கொல்லும் ஆற்றலுடையதாகும்.

மற்றும், பரமசிவன் ஸ்வரூபஞான வடிவினன். ஸுப்ரஹ்மண்யமோ விருத்திஞான வடிவமாகும். ஸூர்யனது கிரணங்கள் எங்கும் வியாபித்திருந்தாலும், அக்கிரணங்கள் உலர்ந்த சரகுகளை எரிக்கா. அக்கிரணங்களையே ஒரு ஸூர்ய காந்தக் கண்ணாடியின் மூலமாய்ச் செல்லவிட்டால் அக்கண்ணாடியின் மூலமாய் வந்த கிரணங்கள் உலர்ந்த சரகுகளை மிகவெளிதில் எரித்து விடும். கேவலமான கிரணங்கள் ஸ்வரூபஞானத்திற்கும், கண்ணாடியின் மூலமாய்ச் செலுத்தப்பட்ட கிரணங்கள் விருத்தி ஞானத்திற்கும் ஒப்பிடப்பட்டுள்ளன வென்றறிதல் அவசியம். ஸூர்யகாந்தக் கண்ணாடி மூலமாய்ச் செலுத்தப்பட்ட கிரணங்களைப் போல்வதுதான் ஸ்ரீஸுப்ரஹ்மண்யஸ்வரூபமாகும்.

மாயை சுத்த சேதனத்தை, அதாவது, பரமசிவ ஸத்தையை யாஶ்ரயித்துத் தனது ஆவரணம்சத்தால் ஆதார ஸத்தையை மறைத்து, விக்ஷேப சக்தியால் அத்தியாஸத்தைத் தோற்றுவிக்கின்றது. ஆதாரரூபஸத்தாமாத்ர ஸாமான்ய சேதனமாகும் பரமசிவனோடு வித்யாஸ்வரூபிணியாகும் சித்சக்தி ஐக்கியப் பட்டபோது, தோன்றிய அத்தியாஸம் நிவர்த்தியாய், நித்தியாநந்தம் உணரப்படுகின்றது. இத்தகைய ஆநந்தஸ்வரூபமே ஸ்ரீஸுப்ரஹ்மண்யமெனப்படும்.

**आनन्दो ब्रह्मेति व्यजानात्** என்னும் பிரமாணத்தின்படி ஸுப்ரஹ்மண்யம் ஆநந்தஸ்வரூபமென் றேற்படுகின்றது. ஸு = நன்ருக, பிரஹ்ம = பெரிய பொருளாகிய பூமாஸ்வரூபமானது, ண்யம்(ந்யம்) அகண்டாகார விருத்தியில் வேருக எதிரிட்டு அநுபவிக்கப்படுவது. கருத்து:—எங்கும்

வியாபித்துள்ள ஸச்சிதாநந்தப் பரம் பொருளானது ஸமாதி விருத்தியில் ஆநந்தானுபூதியாய் விளங்கும். இதற்கு ஞேயவிளக்க மென்றும், ஸுப்ரஹ்மண்ய மென்றும், ஸோமாஸ்கந்த மூர்த்தியென்றும் பல பெயர்களுண்டு. பரமசிவன் = ஸத்து ; உமை—பார்வதி = சித்து ; ஸ்கந்தன் = ஆநந்தம். ஸச்சிதாநந்த பரப்பிரஹ்மமே ஸோமாஸ்கந்த மூர்த்தியாகும்.

## 6. ஸுப்ரஹ்மண்ய நாமாவளி தத்துவம்

ஸச்சிதாநந்தவிசேஷப் பிரஹ்மமாகிய ஸ்ரீஸுப்ரஹ்மண்ய மூர்த்திக்குப் புராணங்களில் பல நாமங்கள் வழங்கப்பட்டுள்ளன. அவற்றின் வாச்சியார்த்தம் ஸ்தூல ஸகுணமாகவும், லக்ஷ்யார்த்தம் ஸூக்ஷ்மாதிஸூக்ஷ்ம நிற்குணமாகவும் விளங்குகின்றது. அது வருமாறு:—

1. ஹரஸூநு—ஹரன் = பரமசிவன் ; ஸர்வ அஞ்ஞானங்களையும் நாசம் செய்பவன் ; ஸம்ஹாரகர்த்தாவெனினுமாம். ஆதாரவடிவ ஸாமான்யசேதனம் ; உணர்தற்கரிய அத்விதீய சிவன். இச்சிவம் சிவயோகாநுபவத்தில் வெளிப்பட்டு ஆநந்தஸ்வரூப ஸுப்ரஹ்மண்யமாய் விளங்குவதால் குஹனுக்கு ஹரஸூநுவென்னும் பெயர் ஏற்பட்டது.

2. கார்த்திகேயன்—கிருத்திகை யென்னும் ஆறு நக்ஷத்திரங்களால் பாலூட்டி வளர்க்கப்பட்டவன். ஞாநாகாசத்தில் கண்டகண்டமாய் விளங்கும் அறுவித ஐஶ்வர்யங்களே கிருத்திகா நக்ஷத்திரத்தின் தத்துவமாகும். ஐஶ்வர்யம், தர்மம், யசஸ், ஸ்ரீ, ஞானம், வைராக்கிய மென்னும் ஆறு கல்யாண குணங்கள் ஸுப்ரஹ்மண்யத்தினிடத்தில்

வந்து அடைந்த தத்துவத்தை ஸ்தன்யபானம் செய்த தாகக் கூறப்பட்டுள்ளது.

3. ஷண்முகன்: i சிவசக்தியைக்கிய ஆநந்தவடிவன்: ii மஹாஸாதாக்கியம், சிவஸாதாக்கியம், அமூர்த்தி ஸாதாக்கியம், மூர்த்தி ஸாதாக்கியம், கர்த்ரு ஸாதாக்கியம், கர்ம ஸாதாக்கியம் என்னும் ஆறு ஸாதாக்கியங்களையே முகமாயுடையவன். iii மேல், கீழ், பூர்வாதி நான்கு, ஆக ஆறு திசைகளிலும் வியாபித்துள்ளவன்; iv ஸர்வக்ஞதை, நித்திய திருப்தி, அநாதி போதம், ஸ்வதந்த்ரதை, அலுப்த சக்தி, அநந்தத்துவ மென்னும் ஆறுலக்ஷணங்களோடு விளங்குபவன்; v. சிக்ஷை, கல்பம், வியாகரணம், நிருக்தம், சந்தஸ், ஜ்யோதிஷம் என்னும் ஆறுவேதாங்கங்களின் அதிஷ்டான வடிவமாயிருப்பவன். vi மூலாதாராதி ஷட் கமலங்களில் விளங்கும் கணபதி, பிரஹ்மா, விஷ்ணு, ருத்திரன், மஹேஸ்வரன், ஸதாசிவன் என்னும் ஷண்மூர்த்திகளின் அதிஷ்டான ஸ்வரூபமாய் விளங்குபவன். vii சைவம், வைஷ்ணவம், சாக்தம், காணபத்யம், ஸௌரம், காபாலிகமென்னும் ஷண்மதங்களில் அதிஷ்டிதராய் விளங்குபவன். viii பஞ்சேந்திரியங்களாலும் மனத்தினாலும் உணரப்படும் ஞானத்தின் நிருபாதிக வடிவாயிருப்பவன். ix ஞானப்பிரகாச, ஞானாகாசப்பிரகாச, ஸர்வக்ஞானவியாபகப் பிரகாச, சுத்தக்ஞான ஸாக்ஷிப்பிரகாச, ஸர்வபரிசுத்த பிரஹ்மக்ஞானாநந்த விமர்ஶப் பிரகாச, அநாதி நித்திய பிரஹ்மக்ஞானாநந்த விமர்ஶப் பிரகாசமென்னும் அறுவகைச் சமாதி யநுபூதிஸ்வரூபமாய் விளங்குபவன்—என்னும் பலவகையான தத்துவங்களோடு கூடியது ஷண்முகனென்னும் நாமமாம். இந்நாமத்தின் தத்துவம் குருமுகமாகவே அறியத்தக்கது.

4. குருமூர்த்தி--குருநாதன்--ஜகத்குரு--சிவகுரு- ஞான பண்டிதன்-ஸ்வாமிநாதன்—என்னும் பலபெயர்கள் ஒரே அர்த்தத்தோடு விளங்குகின்றன.

அக்ஞானத்தை நிவர்த்திக்கும் மஹாவாக்ய உபதேஷ்டா—பிரஹ்மவித்யா ஸம்ப்ரதாய தேசிகசிகாமணி ; பரம சிவனுக்கும் பிரணவார்த்தத்தை யுபதேசித்தவன் ;

ஒளியில் விளைந்த வுயர்ஞான பூதரத் துச்சியின்மேல்
அளியில் விளைந்ததோரானந்தத்தேனை யநாதியிலே
வெளியில் விளைந்தவெறும்பாழைப்பெற்ற வெறுந்தனி
தெளிய விளம்பியவாமுகமாறுடைத் தேசிகனே! [யைத்

5. குஹன் :—ஹ்ருதய புண்டரீக சிதாகாசத்தில் வெளிப்படுபவன். அந்தர்யாமி. இந்த நாமம் ஸுப்ரஹ்மண்யமூர்த்தியை ரூடிசக்தியால் உணர்த்துவது நன்கு கவனிக்கத்தக்கது.

कुमारायास्मदीशाय नमस्ते शरजन्मने
षण्मुखाय सुरेन्द्रार्तिहराय गुरवे नमः
योगिनां हृद्गुहास्थाय शक्तिहस्तायते नमः

என்னும் பிரமாணம் இங்கு அறியவும்.

6. குமாரன்:—i குத்ஸிதங்களான காமம் குரோதம் முதலிய அசுபவாஸனைவடிவ அஸுரர்களை ஸம்ஹரிப்பவன் ; ii कौ=पृथिव्यां, मां=मोक्षलक्ष्मीं, राति = ददातीति कुमारः. இஹலோகத்திலேயே ஜீவன்முக்திநிலையை யருள்பவன்.

iii கு = அசுத்தம். அசுத்தங்களான ஆணவம், மாயை, கர்மங்களென்னும் மும்மலங்களையும், மாரன் = ஒழிப்பவனெனினுமாம்.

7. ஸ்கந்தன் — आन्तरशत्रून् स्कन्दयति शोषयतीति स्कन्दः = காமக்குரோதாதி ஆந்தர சத்துருக்களை நாசம் செய்பவன். ii आक्रम्य च यतोऽस्कन्दद्विक्रमेण जगत्त्रयम् । तेन स्कन्दोऽयमाख्यातः सुतस्ते गिरिसंभवे ॥ என்னும் பிரமாணத்தின்படி மூவ்வுலகத்திலும் பராக்கிரமத்தோடு ஆக்ரமித்து ஸஞ்சரித்தபடியால் ஸ்கந்தனெனப் படுவன்.

iii "சேயவன் வடிவமாறும் திரட்டி நீயொன்ருய்ச் செய்தாய் ஆயதனுலே கந்தனு மெனு நாமம் பெற்ருன்"

என்னும் பிரமாணத்தின்படி பார்வதியால் அணைக்கப்பட்டபோது ஆறு குழந்தைகளும் ஒன்று சேர்ந்து திருமுகங்களாறும் திருக்கரமீராறும் சுருதிபுகழ்தாளிரண்டும் தோன்ற நின்ற ஒரு வடிவம் ஸ்கந்தனெனப் படுவன்.

8. பாலன்—குழகன்-முருகன்- என்றும் இளமையோடிருப்பவன்-நிர்விகாரி-எப்பொழுதும் புதிதாய் விளங்குபவன்- பிரணவஸ்வரூபி. प्रकर्षेण नवं अशेषविक्रियादिरहितकूटस्थनित्यपरमानन्द प्रकाशनात् सर्वदा अभिनवम् ॥ ஸர்வோ பாதிகளுமற்ற ஸச்சிதாநந்த கூடஸ்தஸ்வரூபமாய் விளங்குங் காரணத்தால் எப்பொழுதும் புதிதாய் இருப்பவன்.

9. சரவணபவன்:—ஷடக்ஷர மஹா மந்த்ரத்தின் அதிஷ்டானஸ்வரூபமாய் விளங்குபவன்.

சர = இருபத்தைந்து, வனம் (வணம்) = கூட்டம். இருபத்தைந்து தத்துவக் கூட்டமாகிய சரீரத்தின் குஹையில் வெளிப்படுபவன். (பக்கம் 47 பார்க்கவும்)

10. சிகிவாஹனன் :—i மயிலை வாகனமாக வுடையவன். மயில் என்பது நாஞவித விசித்திரதர அலங்காரம் பொருந்திய முக்குண பிரபஞ்ச நாமரூப விலாஸமான கலாபத்தை விரித்தாடா நின்ற அதோ மாயை யாகும்.

இது ஆவரண சக்தியோடு கூடியது: இதன் அதிஷ்டான மாய் விளங்குபன் ; ii शुद्धचित्तस्वरूपमयूराधिष्ठानाय नमः என்னும் பிரமாணத்தின்படி மலாதி மூன்று தோஷங்களு மற்று ஸ்வரூப நாசம் பெற்று எப்பொழுதும் அகண்டாகார வ்ருத்தி யோடிருக்கும் சுத்த ஸத்துவப் பிரதான அந்தக் கரணமே மயூரமாகும். ஆதலின், சுத்தாந்தக்கரணத்தில் ஸ்புரிக்கும் ஆநந்தகனனே சிகிவாஹன னென்பதன் தத்து வமாம்.

11. குக்குடத்துவஜன்:—சேவற் கொடியோன். அக் கினி பகவானே சேவற் கொடியானன் ; (ஸ்கா- யுத்த-31 அத் - 37 - 38ச்லோ). சிதக்கினியையே துவஜமாயுடை யவன்.

சேவல் ஊர்த்துவ மாயை—விக்ஷேபசக்தி ; ஸத்தா ஸ்வரூபமாகிய ஞானப் பிரகாசத்தால் ஸகலதுவைதப் பிராந்தியை நீக்கும் நிதித்தியாஸனமே குக்குடத்தின் தத் துவமாகும்

பிரிதிவி முதலிய பாஞ்சபௌதிகமான துவைதப் பிர பஞ்சத்தைத் தனது ஸத்தையில் அடக்கி வைத்திருக்கும் ஸாமான்ய சேதன வடிவமே குக்குடமா மென்க. ஸாமா ன்ய ஞானமே விசேஷ ஞான வடிவ ஸுப்ரஹ்மண்ய மூர்த் தியின் துவஜமாகும். சேவல் ஜீவர்களை நித்திரையினின்றும் எழுப்புவது போலக் குக்குடத்துவஜமும் அக்ஞான தூக் கத்தினின்றும் எழுப்புகின்றது. ஆதலின் பிரபோதமே குக்குடத்தின் தத்துவமாம்.

12. கிரௌஞ்சபித்:— கிரௌஞ்சம் = மாயையின் முக்குண மூலாஹங்காரத்திற் பிரதிபலித்த ஆவரண மென் னும் சூரபத்மனுக்குப் பந்துவான முக்குணவிகல்பாஹ

ங்கார கடினத்தன்மை. அஹங்காரம் பிரிதிவீ தத்துவமாகையால் கடினத்துவம் இயல்பு; ஜீவத் தன்மைக்குக் கிரௌஞ்ச மென்று பெயர். ஜீவனை ஹம்ஸபக்ஷி ரூபமாய்ச் சொல்லுவது சாஸ்திர ஸம்பிரதாயமாம். பிராண ரூபமாய் நடப்பதால். இத்தகைய ஜீவபாவத்தை யொழித்துப் பிரஹ்ம பாவத்தை யருள்பவன்.

13. தேவஸேனாதிபதி—ஸேநாநீ-மஹாஸேனன் என்னும் நாமங்கள் ஒரு பொருளேயே பயக்கின்றனவாகும். தேவஸேனை யென்பது சுத்த ஸத்வப் பிரதான அகண்டாகார வடிவ ஆத்ம கோசர விருத்திகளாகும். ஞானம், ஸத்தியம், தமம், சிரவணம், ஸர்வ பூதங்களிடத்திலும் ஹிதமாய் இருத்தல், லஜ்ஜை, திதிக்ஷை, அஸூயையின்மை, பூஜை, ஜபம், தியானம், நிதித்தியாஸனாதி காயிக, வாசிக, மானஸிக, ஞானயக்ஞங்களைச் செய்தல், உரிமையும் தகுதியு முடையவர்க்கு அன்னம் முதலியவை யளித்தல், சாந்தி முதலிய ஸத்வ குணங்களையும் தேவ ஸேனைகளென்று பெரியோர் கூறுவர். இக்குணங்களினால் அடையத் தக்கவனென்பது கருத்து.

தேவஸேனையாகும் தெய்வயானையின் மணாளன் என்பதும் மற்றொரு பொருளாகும்

மஹாவிஷ்ணுவின் தக்ஷிண நேத்திரத்திலிருந்து தோன்றிய பாஹ்யப்பிரவ்ருத்திக்கு அம்ருதவல்லி அல்லது தெய்வயானை யென்று பெயர்.

சாஸ்திரங்களில், ஸூகஸம்பந்தமான சித்த விருத்தியானது சப்தாதி விஷயங்களிற் செல்வதை யானைக்கு ஒப்பிடப் பட்டுள்ளது. சப்தாதி வெளி விஷயங்களைச் செவி முதலிய இந்திரியங்களால் உணர்ந்து அவற்றின் உபாதி

களை யொழிக்கின், மிஞ்சிய நிருபாதிக அகண்டஞானமே தெய்வயானை அல்லது ஞான வேழம் என்று கூறப்படும்.

"बाह्यानुविद्धसमाधिनिष्ठात्मगोचरवृत्तिस्वरूपदेवसेनापतये नमः"

என்று அடியேனது பரமகுருநாதராலியற்றப்பட்ட நிற்குண ஸுப்ரஹ்மண்ய அஷ்டோத்தரசத நாமாவளியின் பிரமாணம் இங்கே நன்கறியத் தக்கது. இந்த அஷ்டோத்திரம் இந்நூலில் உரையோடு சேர்க்கப்பட்டுள்ளது.

"நிஷ்கள வெளியில் நிற்பன; ஸமய தர்க்க விரோத வாதிகள் தகர வெற்றுவ; ஆசையாணவ தளையியற்கையை விட நடிப்பன; கருவினைத்தரு மிருவினைத் தொடர் கழல் பதத்தன; யோக ஸாதகர்களைபறிப்பன; கருணை மெய்த் தவ திருவருட்கன கவள மொக்குவ; அகில கற்பனை யரணழிப்பன; ராஜஸாதியின் அதிகுணத்ரய மதிலிடிப்பன; அளவில் தத்துவதூளி வீசுவ; செயலொழித்தநுபூதி மீமிசை திகழு மற்புத மவுன நிற்குண சிவமயத்திரு ஞான வேழமே" என்று, ஸ்ரீ ஸுப்ரஹ்மண்யஸ்வரூபபிரஹ்மாநந்தக் கடலை நண்ணித் திளைத்துப் பேசாப் பெருநலம் பெற்று இன்னருள் பழுத்த செந்நெறிச் செல்வராய் விளங்கிய ஸ்ரீ அருணகிரிநாதர் ஞானவேழ வகுப்பில் கூறுவது இங்கறியத் தக்கது. அன்றியும், பிரபஞ்சமனைத்தினையும் பிரகாசிக்கச் செய்தற்கு ஆதாரமாய் நின்ற பிரபஞ்ச ஐஶ்வர்ய ஸர்வாதார சைதன்ய இலக்ஷணமாயுள்ள சக்தியே தெய்வயானையாமென்றும், இந்த சக்தியால் அலங்கரிக்கப் பட்டவன் தெய்வயானை காந்தனுவன் என்றும் பிரஹ்மவித் வரிஷ்டராய் விளங்கியிருந்த ஸ்ரீ கோடகநல்லூர் ஸ்ரீ ஸுந்தரஸ்வாமிகள் இயற்றியுள்ள நிஜாநந்த விலாஸம் கூறுகின்றது மிங்கே யறியத்தக்கது.

14. சக்திதரன்: — வேலை ஆயுதமாயுடையவன். வேல் என்பது ஆத்மகோசர அகண்டாகார விருத்தி வடிவினதாகும். பரமசிவனது கையில் விளங்கும் திரிசூலமானது பிரபஞ்சசிருஷ்டிக்குக் காரணமான இச்சாக்ஞானக் கிரியா சக்திகளின் தனித்தனி வடிவமாய் முத்தலையோடு விளங்குவதாகும். திரிகண்ட வடிவமாய் விளங்கும் சூலத்தின் அகண்டஸ்வரூபமே வேலாகும்.

சூலம் = பிரபஞ்ச சிருஷ்டிக்குக் காரணமான ஜடசக்தியாகும் மாயையின் கூறுகளாகும் இச்சை, ஞானம், கிரியைகளின் வடிவமானது.

வேல் = நிஷ்பிரபஞ்ச மோக்ஷஸாம்ராஜ்யத்திற்குக் காரணமான பிரஹ்மவித்யாஸ்வரூபமானது. சித்சக்தியின் ஞானசக்தியா மென்று பெரியோர் கூறுவர். சித்சக்தியின் கிரியாசக்திக்கூறு—தெய்வானை. சித்சக்தியின் இச்சாசக்திக்கூறு—லவலீயென்னும் வள்ளியம்மை.

வேல் அகண்டாகார விருத்தியாகு மென்பதற்குப் பிரமாணங்களாவன :—

1. வினையோட விடுங் கதிர்வேல் மறவேன்

என்னுடைய ஸுகதுக்கங்களுக்குக் காரணமாயுள்ள புண்ணிய பாவங்களென்னும் இரு வினைகளும் ஒழியும்படி வீசுகின்ற கிரணங்களையுடைய உனது வேலாயுதத்தை யென்றும் மறவேன். கந்தரநுபூதி—(40)

2. இமையோர் பூணே புகழே மிகயான் சேணே பெறவேல் விடு தேசிகனே!

தேவர்களுக்கு ஆபரணம் போன்று மிகச்சிறந்து விள ங்குபவனே! ஞானிகள் யாவரும் நின்னைப் புகழ்வதால் புகழ் வடிவமாயிருப்பவனே! முமுக்ஷுவாகிய யான் பரம சிரேஷ்டமாய் விளங்கும் பிரஹ்மாபின்ன ஆத்ம தரிசனத் தைப்பெற என் தூயமனத்தின்கண் அகண்டாகார விருத் தியை யுண்டாக்கிய ஞான தேசிகனே!

கந்தரநுபூதி(53)

குறிப்பு:— குருவானவர் சிஷ்யன் மிகவுயர்ந்த நிலை யைப் பெறுதற்கு ஏவுவது வேற்படையெனில் அவ்வேல் ஞான நாட்டமாகிய அகண்டாகார விருத்தியை யன்றி மற்றெதனைக் குறிக்கும்?

3. ஸுரர்க்கு முனிவரர்க்கு மகபதிக்கும் விதிதனக் கும் அரிதனக்கும் நரர்தமக்கும் உறுமிடுக்கண் வினை சா டும்—குகன் வேலே! வேல் வகுப்பு—

தேவர், முனிவரர், இந்திரன், நான்முகன், விஷ்ணு, மனிதர்கள் என்னும் யாவர்க்கும் துன்பமிழைக்கும் இரு வினைகளைச் சுட்டுச் சாம்பராக்குவது சிதாகாசத்தில் ஆந ந்த தாண்டவமாடும் குஹனை யறிதற்குரிய ஞான நாட்ட மாகும் அகண்டாகார விருத்தியே யாகும்.

4. அவிரோத ஞான சுடர் வடிவேல்

(கந்தர் அலங் 25)

5. ஸிந்து வெந்து, கோக்குத் தறிபட்டடேறிபட்டு திரங்குமுகுமேனச் கக்கக் கிரியுருவக் கதிர்வேல் தோட்ட காவலனே.

(கந்த-அலங் 30)

ஸமுத்திரம் வெதும்பி வறளவும், மாமரமாய் நின்ற சூரன் இரு பிளவாக முறிந்து எறியப்பட்டு இரத்தங்

கக்கவும், கிரௌஞ்சகிரியைப் பிளந்து அதனிடையே ஊடுருவிச் செல்லவும் பிரகாசமுள்ள வேலாயுதத்தைப் பிரயோகித்த ரக்ஷகனே! ஸமுத்திரம் = ஸம்ஸாரமாகும் பெருங்கடல்; மாமரம் = ஜனனமரண துன்பங்களுக்குக் காரணமான அக்ஞான விருக்ஷம்; கிரௌஞ்சம் = அழுந்திய ஜீவத் தன்மைக்கு ஹேதுவாகும் அஹங்காரம். இம்மூன்றும் வேலாயுதத்தால் நாசமுற்றன வெனின், அவ்வேலின் தத்துவம் தத்துவ ஞானமன்றி மற்றெதுவாயிருக்கலாம்?

6. சுரர்பதியயனு மாலு முறையிட அசுரர் கோடி, துகளேழ விடு மெய்ஞ்ஞான—அயிலோனே!

(திருப்புகழ்)

மெய்ஞ்ஞானமே வேல்; அபேத வடிவ அகண்ட மெய்ஞ்ஞானமானது பேதவடிவ மயக்க அஞ்ஞானகாரிய அசுரர்களை நாசமாக்கும் வன்மை யுடையதாகும்.

இங்ஙனம் சில முக்கியமான நாமங்களின் தத்துவம் ஒருவாறு விமர்சிக்கப் பட்டது.

## 7. நவவீரர்களின் தத்துவம்.

यदा तेजांसि देवाक्षिसमुद्भूतानि वीक्ष्य वै ।
अमरा दुद्रुवुर्भीतास्तदा देव्यपि पार्वती ॥
अङ्कमैशं परित्यज्य संभ्रान्तहृदयाऽद्रवत् ।
प्रस्खलत्पादकमला निशान्ताभिमुखी मुहुः ॥
स्खलतोः पादयोर्वेगात् मञ्जीरखाचितानि वै ।
रत्नानि मार्गपर्यन्ते नवापि व्यगलन् क्षणात् ॥

रत्नेषु विनिकीर्णेषु मार्गस्योभयपार्श्वयोः ।
संक्रान्तप्रतिमा गौरी नवधा विरराज सा ॥

*　　　*　　　*

अनुजग्राह गर्भाणामवतारोस्तु भूतये ।
जगतामिति तास्वेवं नव जाता महौजसः ॥
वीरवीरवरा लोके मातॄणां वर्णपेशलाः ।

(संभव—27—அத்யா)

தேவர்கள் ஸ்ரீ மஹாதேவனுடைய நெற்றிக் கண்களிலிருந்து வெளிப்பட்ட தேஜஸ்ஸைக் கண்டு பயந்தோடும் போது பார்வதீ தேவியும் பயத்தினல் நடுங்கிப் பரமேஶ்வரனது மடியை விட்டு அந்தப்புரத்திற்கு ஓடினாள். அப்பொழுது பார்வதியின் பாதங்களிடறி, பாதங்களிற் பூண்டிருந்த பாதச்சிலம்புகளில் இழைக்கப்பட்டுள்ள நவரத்தினங்களும் சிதறி வழியின் இரண்டு பாரிசங்களிலும் உதிர்ந்தன. அங்ஙனம் சிதறி விழுந்த ஒன்பது ரத்தினங்களிலும் அம்பிகையின் திருமேனி பிரதிபலித்து ஒன்பது பெண்கள் விளங்கினார்கள். பிரதிபிம்பமான அவ்வொன்பது பெண்களையும் பரமேஶ்வரன் பார்த்துத் தன்னருகில் வரும்படி யழைத்தனன். நவரத்தினமயமான அப்பெண்கள் ஈசனிடம் வந்து அவரைக் காதல் மனத்தோடு நோக்கியதால் அவர்கள் கர்ப்பவதிகளாயினர். இந்நவமணிப் பெண்களுக்குப் பிறந்தவர்களே வீரபாஹு முதலிய நவ வீரர்களாவர்.

நிர்விசேஷசைதன்யமாகும் ஞானதேஜஸ் வெளிப்பட்ட போது பார்வதியும் பயந்து பரமசிவனது மடியை விட்டுப் பரப்பரப்புடன் அந்தப்புரத்திற்கு ஓடினாள் என்

னும் கதாபாகத்தினுல் நாம் அறிய வேண்டிய தத்துவம் யாதெனில்,

பரமசிவத்திற்கு அபின்னையாகும் சித்சக்திதான் ஞான தேஜஸ். சித்சக்தியாகும் தேஜஸ் வெளிக்கிளம்பிய அந்த க்ஷணமே, பார்வதிக்கு ஜடசக்தித் தன்மை ஏற்பட்டு விட்டது. ஓரேஸ்வரூபம் சித்தாகவும் ஜடமாகவும் இருக்கமுடியுமா வெனின் இருக்கலாம். "विद्यां च अविद्यां च स्वयमेव भवति" என்பது உபநிஷத் பிரமாணமல்லவா? "चिच्छक्तिश्चेतनारूपा जडशक्तिर्जडात्मिका" என்னும் பிரமாணமும் மேற்படி விஷயத்தை வலிவுறுத்துகின்றதன்றே? பார்வதிக்கு மாயாஸ்வரூபம் ஏற்பட்டமையின் பிரஹ்மஞான வடிவ தேஜஸ்ஸுக்குப் பயந்து அந்தப்புரமாகும் தனது அதிஷ்டானத்திற்குப் போதல் சாஸ்திர ஸம்மதமே யாகும். "अधिष्ठानावशेषो हि नाशः कल्पितवस्तुनः" என்னும் பிரமாணமும் இங்கு அறியத்தக்கதே யாகும். பிரஹ்ம வித்தையாகும் சித்சக்தியின் பாதநூபுரங்களே நான்கு வேதங்களும் உபநிஷத்துக்களுமாகும். அந்நூபுரங்களிலுள்ள நவமணிகள் மஹா வாக்கியங்களா மெனப் பெரியோர் கூறுவர். சாந்தோக்கிய உபநிஷத்தில் "तत्त्वमसि श्वेतकेतो" என்று ஒன்பது முறை யுபதேசிக்கப்பட்டதன் உண்மை இங்கு அறியத்தக்கது.

பார்வதிக்கு ஜடமாயாஸ்வரூபம் ஏற்பட்டவுடன் அபேதபோதக மஹாவாக்கியரூப நவரத்தினங்கள் அவளுடைய பாதச் சிலம்பினின்றும் தெறித்து விழுந்தன. பேதகற்பனுகாரணமான மாயைக்கும் அபேததர்ஶன வடிவ தத்துவஞானத்திற்கும் பாஸ்பரம் பிரதிகூலத் தன்மை யுண்டன்றே?

இங்ஙனம் தெறித்த மணிகள் மாயோபாதியில் பிரதி பலித்து ஒன்பது பெண்களாய் விளங்கின. நவதுர்க்கைகளென்றும், நவசக்திகளென்றும் சாஸ்திரங் கூறுவது இவர்களைத்தான். இவர்கள் கௌரியின் பிரதிபிம்பவடிவினர்களென்று முன் கூறப்பட்டது. கௌரி யென்றால் வாக்கென்பது பொருள். உபநிஷத்துக்களும் மஹாவாக்கியங்களும் சப்தரூபமானவை. சப்தம் ஆகாசத்தின் குணம். அபேதஞானமானது மஹாவாக்கியவடிவ சப்தப்பிரமாணம் ஒன்றினாலேயே பெறப்படுவதாமென்பது சாஸ்திர சித்தாந்தமாகும்.

சிதாகாசத்தின் குணமாகும் சப்தவடிவமே அபேத போதகமஹாவாக்கியங்களாம். ஆகவே, சிதாகாச குணமாகும் சப்தத்தினால் அகண்டாகாரவ்ருத்தியுண்டாய் அகண்டஸ்வரூப அபேதஞானமுண்டாகின்றது. இவ்வகண்டஞானத்தினால் பேதவடிவ அஸுரர்கள் (மாயாகாரியங்கள்) நாசமாகின்றனர். இத்தகைய ஞானவடிவினரே வீரபாஹு முதலிய நவவீரர்கள்.

## நவவீரர்களின் விமர்சம்.

1. வீரதீரன் — சரியையில் ஞானம்.
2. வீராந்தகன் — கிரியையில் ஞானம்.
3. வீரமார்த்தாண்டன் — யோகத்தில் ஞானம்.
4. வீரராக்ஷஸன் — ஞானத்தில் ஞானம். பாஹ்யதிரிசியாநுவித்தஸமாதி.
5. வீரபுரந்தரன் — ஞானத்தில் ஞானம். பாஹ்யசப்தாநுவித்தஸமாதி.
6. வீரமஹேஸ்வரன் — ஞானத்தில் ஞானம். பாஹ்ய--நிர்விகல்பஸமாதி.

7. வீரமஹேந்திரன் —ஞானத்தில் ஞானம். ஆந்தர திரிசியாநுவித்தஸமாதி.
8. வீரகேஸரி —ஞானத்தில் ஞானம். ஆந்தர சப்தாநுவித்தஸமாதி.
9. வீரபாஹு —ஞானத்தில் ஞானம். ஆந்தர நிர்விகல்பஸமாதி.

இங்ஙனமன்றி மற்றொருவகையாகவும் நவவீரர்களின் தத்துவம் கூறப்படுகின்றது. அஃதெங்ஙனமெனின், (1) ஜாக்கிரம் (2) ஸ்வப்னம் (3) ஸுஷுப்தி (4) ஜகத்காரணனுகும் ஈஶ்வரவிசாரம் (5) குருபஸதனம் (குருவை நாடிச் செல்லல்) (6) சிரவணம் (7) மனனம் (8) நிதித்தியாஸனம் (9) ஸவிகல்பஸமாதியெனக் கூறப்படும் ஒன்பது வகைத்தாய மனோவிருத்தி வடிவினர்களே கிரமமாய் வீரதீரன், வீராந்தகன் முதலிய நவவீரர்களின் தத்துவமாகும். இது மிகவும் ரஹஸ்யமும் பரமசித்தாந்தமுமாகும். இவ்விஷயத்தைப்பற்றி விசேஷமாய் அறிய விரும்புவோர் இந்நூலாசிரியராலியற்றப்பட்ட *(1) ஸ்ரீவித்யாஸபர்யாவாஸனையில் 154ம் பக்கம் முதல் 158ம் பக்கம் வரையும், *(2) ஸ்ரீகுருதத்துவவிமர்சத்தில் 35-36 பக்கங்களையும் பார்க்கவும்.

### வீரசப்தத்தின் பொருள்.

தோற்றும் இதந்தையை அதாவது இதுவென்னும் முன்னிலைச் சுட்டை அஹந்தையில் அதாவது ஆத்மஸ்வரூப தன்மையில் லயம் செய்யும் ஆற்றலையுடையவனுக்கு வீரனென்றுபெயர்.

---

* இவை சென்னை பிரஹ்மவித்தியாவிமர்சினீ ஸபையாரால் வெளிப்படுத்தப் பட்டிருக்கின்றன.

अहमि प्रळयं कुर्वन् इदमः प्रतियोगिनः ।
पराक्रमपरो भुङ्क्ते स्वात्मानमशिवापहम् ॥

"இதம் சப்தார்த்தமான ஸகலபாஹ்ய வஸ்துக்களை யும் பராஹந்தாவடிவ தனது (ஆத்ம) ஸ்வரூபத்தில் லயம் செய்யும் ஆற்றலுள்ள வீரன் மிக்க பராக்கிரமமுடையவ னாய், ஸமஸ்தமான அசுபங்களையும்போக்கத் தக்க ஆத்மாந ந்தத்தை அநுபவிக்கின்றனன்"—என்னும்ப ராபஞ்சாசி கையின் பிரமாணம் ஈண்டறிதற்குரியதாகும். இவ்விஷய மாய் அதிகம் அறியவிரும்புவோர் இவ்வாசிரியராலியற்றப் பட்ட வரிவஸ்யாரஹஸ்யதீபிகையில் 54-117 பக்கங்கள் பார்க்கவும்.

எதிரிட்டுப் பார்க்கும் ஸகலதிரிசியங்களையும், அத்திரி சியங்களின் தோற்றங் காரணமாய்த் தனக்கேற்பட்ட திர ஷ்டாவென்னும் தன்மையையும், தரிசனத்தையும், அறவே யொழித்து, என்றால், காணப்படும் பொருள், காண்பவன், காட்சியென்னும் திரிபுடியைத் தகர்த்துத் தானேதானாய் நிற்பவரே வீரரெனப்படுவர். இந்த வீரத்தன்மை சுத்த ஸத்துவப்பிரதான அகண்டாகாரவ்ருத்திக்கே யுரியதாகும். பிரதிபிம்ப சக்திகளினின்றும் தோன்றிய நவவீரர்களுக் கும் வ்ருத்தித்தன்மை பொருந்தும். இவ்வொன்பது வீரர்களும், இவர்களின் தாய்மார்களின் வியர்வையினின்று ண்டான ஒன்பதுலக்ஷம் ஸேனைகளுந்தான் தேவஸேனை களெனப்படுபவர். ஆத்மகோசரஸாதனமாகும் ஆத்மீய வ்ருத்திகளே தேவஸேனைகளாகுமென்று முன்னர் கூறப் பட்டது. அஸுரர்களாகும் அநாத்ம வ்ருத்திகளை யொ ழித்து ஸ்வர்க்கம் எனப்படும் ஸ்வாராஜ்யஸித்தி ஏற்படும் பொருட்டுச் சாஸ்திரங்களிற் கூறப்பட்ட ஸகலஸாதன

ஸாமக்கிரிகளும் தேவஸேனைகளேயாமென்பது பரமரஹஸ்யமாம்.

8. பாலலீலா தத்துவம்.

इति सच्चिदैशममितं वचसां मनसामगोचरमनन्तसुखम् ।
शिशुभावमेत्य समलंकृतिमत्समलंचकार शिवयोः सविधम् ॥
अथ सानुगो जगति खेलधिया पितरौ प्रणम्य परिगम्य मुहुः ।
निरगाच्छिशुः स तत एव जगज्जगतां मनांसि भृशमुत्कयति ॥

"அளவுக்கடங்காததும், மனோவாக்குக்களுக்கு எட்டாததும், தேசகாலவஸ்து பரிச்சேதங்களற்றதும், ஸச்சிதாநந்த ஸ்வரூபமுடையதுமான பரப்பிரஹ்மமானது இங்ஙனம் ஒரு குழந்தைத்தன்மையை வகித்து ஸ்ரீபார்வதீ பரமேஸ்வரர்களின் முன்னிலையை யலங்கரித்து நின்று விளையாடியது. பின், பாலக்குஹன் தனது பரிவாரங்களோடு உலகில் விளையாடவிரும்பி தாய்தந்தையர்களுக்குப் பல பிரதக்ஷிண நமஸ்காரங்களைச்செய்து அங்கிருந்து வெளிப்பட்டு உலகத்தாரின் மனத்தைத் தனது லீலைகளாற் சந்தோஷிப்பிக்கத் தொடங்கினான்."

(ஸம்ப-29 அத். 6. 7. ஸ்லோ)

என்னும் பிரமாணத்தினால் குஹப்பிரஹ்மமானது ஸகளீகரித்துக் குழந்தைவடிவத்தோடு விளங்குகின்றதென்றும், அச் சகுணப்பிரஹ்மமே ஜகத்காரணத்தன்மையைப் பெற்றதென்றும், ஜகத்தின் சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், திரோபாவம், அநுக்கிரகம் என்னும் பஞ்சகிருத்தியங்களே பாலகுமரனது விளையாட்டுகளாமென்றும் அறியக்கிடக்கின்றன. சங்கரஸம்ஹிதை ஸம்பவகாண்டம் 29வது அத்தியாயம் முழுவதும் குமரனது

பாலலீலைகளை வர்ணிக்கின்றது. அந்த லீலைகளை நாம் நன்கு விமர்சிப்போமேயாயின் அவையாவும் பஞ்சகிருத்தியங்களுள் அடங்கும். "लोकवत्तु लीलाकैवल्यं" என்று பிரஹ்ம ஸூத்திரமும், द्वैताद्वैतसमुद्भूतैर्जगन्निर्माणलीलया" என்று மஹோபநிஷத்துங் கூறும் வண்ணம் சிருஷ்டியாதி பஞ்சகிருத்தியங்களும் பரமேஶ்வரனது லீலையேயாகும்.

"கூத்தனிவ்வானுங் குவலயமு மெல்லாமுங்
காத்தும் படைத்துங் கரந்தும் விளையாடி,"

என்னும் திருவெம்பாவைப் பிரமாணத்தாலும் பரமனது திருவிளையாட்டே சிருஷ்டியாதி கிருத்தியங்களாகுமென்று சித்திக்கின்றது. முருகக் குழவி யியற்றிய திருவிளையாடல்கள், ஸப்த ஸமுத்திரங்களையும் ஒன்றாக்குதல், ஸப்த குலாசலங்களையும் உடைத்துத் தூளாக்குதல், ஸூர்யனது ரதத்தைச் சுக்கல் சுக்கலாய் உடைத்தல், சந்திரஸூர்யர்களது கதியை மாற்றுதல், அஷ்டதிக்கஜங்களையும் பெயர்த்து அவற்றைப் பந்துபோல் எறிதல், நவக்கிரஹங்களும் நக்ஷத்திரங்களும் சுற்றி வருகின்ற சிம்சுமாரசக்ரத்தைத் துருவஸ்தானத்திலிருந்து அறுத்தெறிதல், சக்ரவாள பர்வதத்தைத் தகர்த்தல், ஸத்யலோகம், வைகுண்டம் முதலியவற்றைத் தத்தம் இடங்களினின்றும் பெயர்த்துவைத்தல் முதலியனவாகும். இவையாவும் மஹாப் பிரளயகாலத்தில் நடக்கும் மஹாஸம்ஹார கிருத்தியங்களாகும். நான்முகப் பிரமனைப் பிரணவார்த்தம் வினவ, அவன் செருக்கால் தானே பிரணவப் பொருளென்று கூற, அவனது நான்கு சிரங்களுங் குலுங்கக் குட்டி அவனைச் சிறையிட்டு அவன் புரியும் சிருஷ்டித் தொழிலைத் தானே புரிந்தனன். இதனால் குமரன் சிருஷ்டிசெய்தது பெறப்பட்டது. விதிதவறி யியற்றப்

பட்டகாரணத்தால், யாகத்திற்ரேன்றிய ஆட்டுக்கடாவை யடக்கியாண்டதால் ஸ்திதித்தொழில் முருகனுக்குச் சித்தித் தது.

தன்னை யறியாவண்ணம் இந்திரன் முதலியதேவர்களை மோஹிப்பித்து தன்னேடு எதிர்க்கச் செய்த காரணத் தால் திரோபாவ கிருத்தியமும், பின்னர் அவர்க்கு அருள் புரிந்து தனது பாரமேஸ்வர (விராட்) ஸ்வரூபத்தைக் காட் டிய திருவிளையாடலால் அநுக்கிரஹ கிருத்தியமும் முருகன் பால் சித்திக்கின்றன.

ஆகவே சிருஷ்டியாதி பஞ்சகிருத்தியங்களும் நம் குழந்தைமுருகனது லீலைகளேயாமென்பது பெறப்பட் டது.

ஸம்ஹார கிருத்தியங்களை, முன்னர் செய்ததற்குக் காரணம்.

எந்தக்காரியத்திற்கு எது லயஸ்தானமோ அதுவே தான் அதன் உபாதான காரணமாமென்பது நியமம். முரு கன் இவ்வுலகத்திற்குத் தானே உபாதானகாரணமென்று காட்டுவதற்கே முதலில் லயவடிவ ஸம்ஹாரகிருத்திய லீலைகளைச் செய்தனன். முருகன் இவ்வுலகத்திற்கு அபி ன்னநிமித்தோபாதான விவர்த்தகாரணமாவனென்பது உப நிஷத்துக்களின் தீர்மானமாகும்.

9. சதுர்முகப்பிரமனைச் சிறையிட்ட தத்துவம்.

स्कन्दः—ब्रह्मन् तव कृतिः का वा कासु विद्यासु पाटवम् ।
जिज्ञासुरहमद्य त्वां पृच्छामि न परीक्षकः ॥
मा कृथाः कोपमधुना वद ब्रह्मन् त्वमञ्जसा ।

பிரம்மாவே! உமது தொழில் யாது? உமக்கு எந்த வித்தைகளில் பாண்டித்திய முள்ளது? அதைத் தெரிந்து கொள்ள விருப்பமுற்றுக் கேட்கிறேனேயன்றி யும்மைப் பரீக்ஷிப்பதற்காகவல்ல. ஆதலின் ஓ பிரஹ்மாவே! இப் போது நீர் கோபங்கொள்ளாமல் சீக்கிரம் சொல்லும். என்று ஸ்கந்தன் கூற,

चतुराननः——देवासुरमनुष्याणां स्रष्टाऽस्मि जगतां प्रभो ।
नान्योऽस्ति मत्समो लोके चराचरकृतेः पटुः ॥
अष्टादशसु विद्यासु पटुरस्म्यहमेव भोः ।
वेत्तिधात्वर्थभूतानां विद्यानामहमाश्रयः ॥

ஸகலலோகங்களுக்கும் பிரபுவே! யான் தேவாஸுர மனிதர்களுக்கெல்லாம் சிருஷ்டிகர்த்தாவா யிருக்கின் றேன். சராசரங்களைச் சிருஷ்டிப்பதில் எனக்குச்சமான சாமர்த்தியமுள்ளவர் எங்கும் இல்லை. பதினெட்டு வித்தை களிலும் திறமையுள்ளவன் யானே. "வித்" (அறி) என் னும் வடமொழிப் பகுதியின் பொருளாகிய ஸகலவித்தை களுக்கும் யானே இருப்பிடமாயிருக்கின்றேன். என்று நான்முகன் மொழிந்தனன்.

स्कन्दः——अहो पटुरहो वेत्ता महांस्त्वं महतोऽधुना ।
तासु विद्यासु चाद्यायास्तदा वद कियत्पदम् ॥
संतोषो ह्यस्मदादीनां शिशूनां वृद्धभाषणे ।

ஓகோகோ! என்ன கெட்டிக்காரர்! எவ்வளவு கற்ற வர். நீர் பெரியோர்களுக்கெல்லாம் மிக்கபெரியவர். ஆகை யால் அப்பதினெட்டுவித்தைகளில் முதலாவதான ருக்வே தத்தில் எத்தனை பதங்களுள்ளன வென்பதைக் கூறுங்கள்.

எங்களைப் போன்ற குழந்தைகளுக்குக் கிழவர்களோடு பேசுவது ஸந்தோஷமல்லவா? என்று முருகன்பின்னுங் கூற,

श्रुत्वाचष्ट ततो ब्रह्मा श्रुतिमाद्यामृगात्मिकाम् ।
स्वरमादौ पपाठैष बिन्दुनादैस्त्रयोदशम् ॥
तावन्मात्रेण सेनानीः सशिरःकम्पमात्मनः ।
हस्तेन तिष्ठ तिष्ठेति भूय एनमभाषत ॥

அதைக் கேட்டுப் பிரஹ்மாவானவர் முதலாவதாகிய ருக்வேதத்தைச் சொல்லத்தொடங்கி முதலில் பதின்மூன்ருவது உயிரெழுத்தாகிய ஓகாரத்தைப் பிந்துநாதங்களோடு சேர்த்து உரைத்தமாத்திரத்தில், முருகன் சிரக்கம்பனம் செய்து "நிறுத்தும்! நிறுத்தும்!!" என்று கையால் ஆக்ஞாபித்துப் பின்வருமாறு கூறுகின்ருன்.

गुहः—अर्थोऽस्य वर्ण्यतामाशु समञ्जसमिह त्वया ।
यथाऽस्माकं मनो गच्छेत् संशयं नैव संप्रति ॥

குஹன்:—இதன் பொருளை எங்கள் மனதுக்குச் சந்தேகமேயில்லாதபடி இப்போது சீக்கிரத்தில் ஸரியாகவும் தெளிவாகவும் எடுத்துரைப்பீராக.

विधिः—प्रकृतश्चाहमेवार्थो विधिरस्येति विब्रुवन्

"பிரணவத்திற்குரியபொருள் யானே" என்று பிரமனுரைத்தபோது, ஸ்கந்தன்,

मुष्टिना चाटचस्त्येन मुखरीकृतदिङ्मुखः ।
कारागृहं स्कन्दगिरौ नीतोऽयं वीरबाहुना ॥
जगत् सृष्टं च देवेन स्कन्देन सचराचरम् ।

கைமுட்டியால் திசையெங்குமொலிக்கும்படி பிரமனது சிரங்கள் நான்குங் குலுங்கக்குட்டி, அவனைக் கந்தகிரியின் கண்ணுள்ள சிறைச்சாலையில், வீரபாஹுவால் அடைத்து விடும்படி செய்தனர்; பின்னர், ஸ்கந்தபிரானாலேயே சராசரமாகிய உலகெல்லாம் படைக்கப்பட்டது. என்னும் ஸம்பவகாண்டம் 33வது அத்தியாயப் பிரமாணங்களால் முருகன் விதியைச் சிறையிட்டுத் தானே அப்படைப்புத் தொழிலியற்றிய விஷயம் பெறப்படுகின்றது.

இனி இக்கதாபாகத்தின் தத்துவத்தை யாராய்வாம். நான்முகப் பிரமனது தத்துவம் அந்தக்கரணமாகும். மனம், புத்தி, சித்தம், அஹங்காரம் என்னும் நான்கு பகுதிகளோடு கூடியது அந்தக்கரணமாதலின், நான்முகப் பிரமன் அந்தக்கரணத்தோடு உருவகப் படுத்தப்பட்டனன். ஸங்கல்பமே படைப்புத் தொழிலாகும். பிரமன் ரஜோ குணவ்ருத்தியோடு கூடியுள்ள காரணத்தால் அஹங்காரம் மேலிட்டுத் தானே சிருஷ்டிகர்த்தாவென்றும் தானே ஸகல கலாபண்டிதனென்றும் தன்னைப் புகழ்ந்துகொண்டனன்.

அஹங்காரத்தோடுகூடியவனாயும், சிருஷ்டியென்னும் அதிகார மலத்தோடு கூடியவனாயுமுள்ள பிரம்மனுக்குப் பிரணவத்தின் உண்மையான பொருள் எங்ஙனம் புலப்படும்? பிரணவத்தின் உண்மையான அர்த்தம் அமனஸ்கமன்றோ? “यतो वाचो निवर्तन्ते अप्राप्य मनसा सह” என்பது ஸித்தாந்தமாகும் பிரமாணமல்லவா? ஆதலின் அந்தக்கரண வடிவ பிரமனுக்குப் பிரணவத்தின் உண்மைப்பொருள் தெரியாமல் சரீராத்தியாஸத்தால் “தானே பிரணவத்தின் பொருள்” எனப் பிதற்ற, அவனைக் குமரன் சிறையிட்டனன். பிரணவத்தின் உண்மையான லக்ஷ்யார்த்தத்தில்

அசுத்த மனோவ்ருத்திகள் செல்லமாட்டாமல் லயமாவ தன் தத்துவமே சிறையிட்டதின் அர்த்தமாகும்.

பின்னர் நெடுங்காலம் குஹனே பிரமனது சிருஷ்டித் தொழிலைப் புரிந்துவந்தனர். இங்ஙனம் இருக்கையில் பரம சிவன் கந்தனையணுகிப் பிரமனைச் சிறையிலிருந்து மீட்கும் படி சொன்னார். அப்போது முருகன் "பிரணவத்தின் உண்மைப் பொருளை யறியாதவன் சிருஷ்டித் தொழிலைச் செய்தற்குரியனோ" வென்றனன். அதற்குப் பரமேஸ்வரன் தனக்குள் ஸந்தோஷமடைந்தவனாய்க் "குமரா! அங் ஙனமாயின் பிரணவத்தின் உண்மைப்பொருளை நீ யறிவையோ? அறிவாயாயின் எனக்குக் கூறுதி" என்றனன்.

**अङ्के निधाय चालिङ्ग्य कर्णे कथय पुत्रक ।**

என்பது மேற்கூறியதற்குப் பிரமாணமாம்.

10 பிரணவார்த்தப் பிரகடனம்.

ஷண்முகன் சிவபெருமானது காதில் பிரணவத்தின் லக்ஷ்யார்த்தத்தை மிகரஹஸ்யமாய் உரைத்தனன். இது

"சிவனார் மனங்குளிர உபதேசமந்த்ரமிரு
செவிமீதிலும் பகர் செய்—குருநாதா."

என்னும் திருப்புகழ்ப் பிரமாணத்தினால் ஏற்படுகின்றது.

ஸ்ரீ சம்புவும் அதைக்கேட்டுப் "பிரணவத்தின் அர்த்தம் இதுதான். ஸந்தேஹமில்லை. வேதத்தில் "ஸுப் பிரஹ்மண்யோம்" என்று சொன்னபடி நீயும், "ஸதா சிவோம்" என்று சொன்னபடி நானும் அதன் பொருளாகின்றோம்." என்று கூறினான்.

## 11 பிரணவார்த்தத்தின் மஹிமை.

सुब्रह्मण्यों स्वरस्यार्थस्त्वं चाहं च सदाशिवोम् ।
इति जानन्ति ये लोके ते यान्ति मम तुल्यताम् ॥
सर्ववेदान्तविज्ञानसुनिश्चितधियां सताम् ।
यतीनां शुद्धसत्वानां ब्रह्मप्राप्त्येकसाधनम् ॥
पुत्र पुत्र मनोरथों वर्णितो यन्महांस्त्वया ।
अधिकारमलग्रस्तः कथं वेत्ति चतुर्मुखः ॥
योगिनोऽपि न जानन्ति ध्याननिर्धूतकल्मषाः ।
मद्भक्ता एव जानन्ति ममैवानुग्रहात्सुत ॥
ममात्माऽसि यतो नूनं वेत्सि पुत्रार्थमद्भुतम् ।
अस्याधिकारिणोऽगस்த्याद्रते सन्ति न योगिषु ॥
तस्मै कथय सम्यक्त्वममुमर्थं मदाज्ञया ॥

"பிரணவத்தின் உண்மையான பொருளை, மேற்கூறிய படி, எவர்கள் அறிகின்றனரோ அவர்கள் எனக்குச் சமமானவராகின்றனர். மேலும் இது ஸகலவேதாந்தங்களின் விக்ஞானத்தினால் நிச்சய புத்தியுடைய பெரியோர்களுக்கும், ரஜோகுண தமோகுணங்களின் கலப்பின்றிய சுத்த ஸத்வகுணமுடைய யதிகளுக்கும் பிரஹ்ம ஸாக்ஷாத்காரத்திற்கு முக்கிய ஸாதனமாகும். குழந்தாய்! பிரணவ மஹாமந்த்ரத்தின் மஹாமஹிமை பொருந்திய இவ்வர்த்தமானது உன்னால் நன்குரைக்கப்பட்டது இதை அதிகாரமாகிய மலத்தினால் கட்டுண்ட நான்முகன் எவ்வாறறிவான்? தியானத்தினால் ஸகலபாபங்களையும் தொலைத்திருக்கின்ற யோகிகளும் இவ்வுண்மைப்பொருளை யறியார்களே.

எனதனுக்கிரகத்தால் என் பக்தர்கள் மாத்திரம் அறிவார்கள். நானே நீயாதலால் அதன் அற்புதமான பொருளை நீ யறிவாய். யோகீஸ்வரர்களில் அகஸ்தியரைத் தவிற மற்றயாவரும் இதற்குத் தகுதியுடையவரல்லர். ஆகையால் நீ நமது கட்டளையின்படி இவ்வர்த்தத்தை இவ்வகஸ்தியருக்கு உபதேசிப்பாய்" என்று பரமசிவன் கூறினான்.

பரமசிவன் சொற்படி குஹனும் அகஸ்தியருக்குப் பிரணவார்த்தத்தை யுபதேசித்துப் பிரஹ்மவித்யா ஸம்ப்ரதாயத்திற்கு ஆதிகுருவாய் விளங்கினர்.

## 12. இந்திராதிதேவர்களுக்கும் குஹக்கடவுளுக்கும் நடந்தயுத்தமும், பின்னர் தேவர்களுக்குண்டான அநுக்கிரகமும்.

ஸுப்பிரஹ்மண்யனது பாலலீலைகளைக் கண்ணுற்ற தேவர்கள், குமரனது மாயையால் அறிவுமயங்கி, தேவர்க்கு அபயஸ்வரூபத்தை யளிக்கவே அவதரித்த சிவகுமரக் குழவியென்று அவரை யறியாது, அஸுரக்குழந்தையென விபரீதமாய் எண்ணி அவருடன் தேவர்கள் போர்புரியத் தொடங்கினர்கள். சரவணபவனும், இந்திரன், அக்கினி, யமன், வருணன், வாயு, சூரியன், சந்திரன் முதலிய தேவர்களை ஒரு நொடிக்குள் விளையாட்டாக வீழ்த்திவிட்டனன். மடிந்தவர்போக மிகுதியான தேவர்கள் நாற்புறமும் ஓடிப் பிழைத்தனர். இச்செய்தியை நாரதரால் அறிந்த குருபகவான் குமாரக்கடவுளைத் தோத்திரம் செய்து நின்றனர். பிரஹஸ்பதிசெய்த ஸ்தோத்திரத்திற்கு மகிழ்ந்து, இறந்துபட்டதேவர்களை முன்போல் உயிர்த்தெழும்படி அநுக்கிரகித்தனர்.

## 13. குருபகவான் குஹப்பெருமானைத் துதித்தது.

ओं नमोऽनन्तमहिमा अपारसरितां पते ।
स्कन्दाय दन्तिवक्त्रस्य सोदरायादराय ते ॥

उमाशङ्करयोरेकप्रेमभाजनमूर्तये ।
अनन्तमूर्तये तुभ्यमनन्ताद्भुतहेतवे ॥

अनन्तज्योतिषे तुभ्यमनन्ताय नमो नमः ।
न विदुर्यद्बलं देवा मायया यस्य सर्वकाः ।
गुहं तमहमीशानप्रभुं त्वां प्रणमाम्यहम् ॥

यन्मायापहृतज्ञाना विबुधा अबुधा मताः ।
अर्च्यमासाद्य वैरेण शिक्षितास्तं नमाम्यहम् ॥

"அளவற்ற மஹிமையும், கடல்போல் கரையற்ற கருணையுமுடைய உமதடிகளுக்கு நமஸ்காரம். சத்துருக்களைச் சோஷிக்கச் செய்கின்றவனும், யானைமுகனுக்கு ஸஹோதரனும், அடியார்க்கு நேசனுமான உமக்கு நமஸ்காரம். உமாசங்கரர்களது ஆசைக்குரிய ஆநந்தஸ்வரூபியும், அழிவற்றவரும், அளவற்ற வற்புதங்களுக்குக் காரணமூர்த்தியும், அளவற்ற பிரகாசஸ்வரூபியும், தேசகாலவஸ்துபரிச்சேதமற்றவருமான உமக்கு நமஸ்காரம். எவரது மாயையினால் தேவர்களது அறிவு அபகரிக்கப்பட்டு அவர்கள் விபுதராயினும் அபுத(அறிவீன)ராக மதிக்கப்பட்டார்களோ, பூஜிப்பதற்குத் தகுதியான எவரை விரோதத்துடன் எதிர்த்து எவரால் தண்டனை யடைந்தார்களோ அத்தகைய உம்மை நமஸ்காரம் செய்கின்றேன்" என்று இங்ஙனம் குருபகவான் தோத்தரித்தனர்.

தேவர்கட்குக் குஹன் அநுக்கிரஹித்தல்.

तेषां देवोऽपि दयया मायामज्ञानरूपिणीम् ।
व्यपोह्य करुणामूर्तिर्ददौ भक्तिं स्वपादयोः ॥
प्रोवाच च पुनर्देवान् वेत्थ मा शिशुमज्ञवत् ।
पश्यतामाशु मद्रूपं परं यत्पारमैश्वरम् ।
दिव्यं ददामि वश्चक्षुर्मद्रूपालोकनक्षमम् ॥

*மிகவும் தயாமூர்த்தியாகிய குஹப்பெருமான் தேவர்களிடமிருந்த அக்ஞானவடிவமாயையை நீக்கி, அவர்களுக்குத் தனது சரணங்களில் மாறுதபக்தியையும் அருளினார். பிறகு பகவான் அத்தேவர்களைப் பார்த்து "ஓ தேவர்களே! கேவலம் மூடர்கள்போல நம்மைக் குழந்தையென்று நினைக்காதீர்கள். இதோ நமது ஸர்வசிரேஷ்டமான பரமேஶ்வரரூபத்தைப் பாருங்கள். நமது விஶ்வரூபத்தைத் தர்சிப்பதற்குத் தகுதியான திவ்யநேத்திரங்களையும், உங்கட்கு அருளுகின்றோம். பாருங்கள்" என்று திருவாய் மலர்ந்தருளினான்.*

14. விராட்ஸ்வரூப வர்ணனம்

सप्तपातालपादं तत्सप्तद्वीपोरुजङ्घकम् ।
सप्तार्णवपरीधानं दिग्बाहुव्योमनाभि तत् ॥
द्युशिरश्चन्द्रसूर्याग्निनयनत्रयपेशलम् ।
परं जलदकेशं तत्ताराकुसुमगुम्भितम् ॥
शिवश्चात्मा मतिर्गौरी वामपार्श्वं जनार्दनः ।
दक्षिणं भगवान् ब्रह्मा भारती वैदिकी च वाक् ॥

लक्ष्मीर्लक्ष्मीश्च पवनः प्राणादिदशभेदभाक् ।
मन्युः कालाग्निरुद्रोऽग्निर्जाठरः समुदाहृतः ॥
अनन्तादिमहानागाः पादनूपुरहंसकाः ।
रोमाण्योषधयो भूरि यूकाण्डान्यण्डकोटयः ॥
तत्कोटिसूर्यसंकाशं कोटिशीतांशुशीतलम् ।
कोटिकालाग्नितेजस्कं परमं रूपमद्भुतम् ॥
अदर्शयदमेयात्मा ब्रह्मण्यो हरसंभवः ।
तेजसा तस्य देवानां चक्षूंष्यन्धीकृतान्यहो ॥

ஏழு பாதாள லோகங்களைப் பாதமாகவும், ஸப்த த்வீபங்களைக் கணுக்காலாகவும், ஸப்தஸமுத்திரங்களை இடை வஸ்திரமாகவும், திக்குகளைப் புஜமாகவும், ஸ்வர்க்க லோகத்தைச் சிரஸாகவும், ஆகாயத்தை நாபியாகவும், ஸூர்யன், சந்திரன், அக்கினி இம்மூவர்களை நேத்திரங்களாகவும், மேகங்களைக் கேசங்களாகவும், நக்ஷத்திரங்களை அக்கேசங்களில் அலங்கரிக்கப் பெற்ற புஷ்பங்களாகவும், பரமசிவனை ஆத்மாவாகவும், பராசக்தியைப் புத்தியாகவும், விஷ்ணுவை வாமபாகமாகவும், பிரஹ்மாவைத் தக்ஷிணபாகமாகவும், ஸரஸ்வதியை வாக்காகவும், லக்ஷ்மியைச் சம்பத்தாகவும், வாயு பகவானைப் பிராணாதி தசவாயுக்களாகவும், காலாக்னிருத்திரனைக் கோபமாகவும், அக்னி தேவனை ஜாடராக்னியாகவும், அநந்தன் முதலிய மஹா நாகர்களைப் பாதஸரம் தண்டைகளாகவும், ஸகல ஓஷதிவர்க்கங்களை ரோமங்களாகவும், அநேக கோடி பிரஹ்மாண்டங்களை அவ்வுரோமங்களிற் பற்றி விளங்கும் பேன் முட்டை(ஈர்)களாகவும், உடைய

பகவானது விஶ்வரூபமானது கோடி ஸூர்யர்களுக்கொப்பான பிரகாசமுடையதும், கோடி சந்திரர்களின் குளிர்ச்சியுடையதுமாய் விளங்கிற்று. இத்தகைய அற்புதமான மஹாரூபத்தை அளவற்ற மஹிமையுடைய ஸ்ரீ ஹர குமாரனாகிய ஸுப்பிரஹ்மண்யன் தேவர்க்குத் தர்சிப்பித்தனன். அவ்வுருவத்தின் பேரொளியால் தேவர்களின் கண்கள் குருடாக்கப்பட்டன. யாவரும் பரவசமாய் அப்படியே நின்று விட்டனர்.

### 15. பிரஹ்மா, விஷ்ணு, இந்திரன் முதலிய தேவர்கள் குஹப் பெருமானைத் துதித்தல்

यतो जातानि विश्वानि भुवनानि यदन्तरा ।
येन जातानि जीवन्ति यत्प्रयन्ति विशन्ति च ॥

तद्ब्रह्म परमं साक्षात्सुब्रह्मण्यमुपास्महे ।
यन्मायामोहितात्मानः सच्चिद्रूपं परात्परम् ॥

अज्ञात्वाऽज्ञं जडं कर्तृ प्रवदन्ति नताः स्म तम् ।
त्रयीमयो यः सवितुर्वरेण्यो मण्डले स्थितः ॥

हिरण्यश्मश्रुराकेशमानखाग्रं हिरण्मयः ।
विनिद्रपुण्डरीकाक्षयुगळो जगतां पतिः ॥

तं त्वामनन्यशरणाः प्रपन्नाः शरणं गुहम् ।
यस्यानन्दलवाः प्रोक्ता ब्रह्मादीनां मनीषिणाम् ॥

पूर्णानन्दाब्धिमतुलं भजामह उमासुतम् ।
आद्यमिन्द्रं हरं विष्णुं ब्रह्माणममरान्तरम् ॥

आहुर्यन्मायया मूढास्तमीशतनुजं नुमः ।
अनवाप्य च तद्बुद्धिमिन्द्रियाण्यपरे विदुः ॥

यत्कृपारहिता लोके तद्ब्रह्म परमं नुमः ।
उक्तमेतत्समस्तं यच्छरीरं चिदचिद्द्वयम् ॥

अवस्थात्रयनिर्मुक्तमवस्थात्रयसाक्षिणम् ।
प्रेरकं जीववृन्दस्य मोचकं तमुपास्महे ॥

नियामकं च सर्वेषां वयं तं समुपास्महे ।
ज्ञात्वेति यं जनः शान्तिमेति भूतिप्रदायकम् ॥

शक्त्यायुधं सर्वशक्तिसमृद्धं तमुपास्महे ।
सर्वमन्यत्परित्यज्य शिवाद्विप्रः शिवङ्करात् ॥

ध्यात्वा यन्मुक्तिमाप्नोति त्वां ब्रह्म समुपास्महे ।
त्वयि दृष्टे जगन्नाथ सुब्रह्मण्य परापरे ॥

भिन्ना स्याद्धृदयग्रन्थिश्छिन्नाः स्युः सर्वसंशयाः ।
वपुषोऽस्मात् समुत्थाय परंज्योतिस्वरूपिणम् ॥

प्राप्य स्वं रूपमाप्नोति तं त्वां वन्दामहे वयम् ।
त्वमेव गतिरस्माकं त्वदृते विद्म नो परम् ॥

परं ब्रह्म परं धाम परं ज्योतिः स ईश्वरः ।
परं रूपं परं शान्तिः परात्परमुपास्महे ॥

स्तुत्वैवं प्रार्थयामासुर्विश्वरूपस्थितं गुहम् ॥

ஸகலபுவனங்களும் யாரிடத்தினின்றுண்டாகின்றன
வோ, அவை யாரிடத்தில் நிலைத்து நிற்கின்றனவோ, யாரால்

ஜீவிக்கின்றனவோ, அவை நசித்தபிறகு எங்கே ஒடுங்குகின்றனவோ அத்தகைய ஸாக்ஷாத் பரப்பிரஹ்மமாகிய ஸுப்பிரஹ்மண்யனைத் தொழுகின்றோம். ஜீவர்கள் யாருடைய மாயையால் அறிவு மயங்கியவர்களாய்ப் பராபர ஸச்சிதாநந்தஸ்வரூபத்தை யறியமாட்டாமல் அசேதன ஜடப்பொருள்களை ஜகத்கர்த்தாவாகச் சொல்லுகின்றார்களோ அப்பரமாத்மாவை நமஸ்கரிக்கிறோம். எவர் வேதஸ்வரூபியும், மிகசிரேஷ்டரும், சூர்யமண்டல மத்தியில் அதிஷ்டானமாயிருப்பவரும், உச்சி முதல் நகம் வரையில் தேகமுழுமையும், மீசை தாடி முதலியவையும், பொன்மயமாய் விளங்குபவரும், எல்லா ஜகங்களுக்கும் நாதனும் ஆவரோ அத்தகைய குஹரூபியாகிய வும்மைச் சரணமடைகின்றோம். எவருடைய ஆநந்தத்தில் ஒரு திவலை பிரஹ்மா முதலிய எங்கட்குளதென மதிக்கப்படுகின்றதோ அந்த பரிபூர்ணமாகிய, ஆநந்தக்கடலாகிய, சித்சக்தி மைந்தனாகிய உம்மை எத்துகின்றோம்.

எவருடைய மாயையால் மூடர்கள் இந்திரன், ருத்திரன், விஷ்ணு, பிரம்மா, இன்னும் இதரமான தேவர்கள் இவர்களை ஆதிகாரணமாகக் கூறுகின்றார்களோ அப்பரமேஶ்வரகுமாரனை வந்தனை செய்கின்றோம்.

எவருடைய அநுக்கிரகமின்மையால், பரப்பிரஹ்மமே ஜகத் காரணமென்று அறியமுடியாமல் இந்திரியங்களை ஆதிகாரணமாய் நினைக்கிறார்களோ அப்பிரஹ்மத்தை நமஸ்கரிக்கின்றோம். சேதனுசேதன வடிவமாய் விளங்கும் இச் சகலலோகங்களும் யாருடைய சரீரமெனப்படுகின்றதோ யார் அவையெல்லாவற்றையும் நடத்துகின்றனரோ

அத்தகையவும்மைத் தொழுகின்ருேம். ஜாக்கிரம் முத லிய மூன்றவஸ்தைகளுக்கு அப்பாற்பட்டவரும், அம் மூன்றவஸ்தைகளுக்குச் சாக்ஷியாயுள்ளவரும், அந்தர் யாமியாயிருந்து ஜீவ கோடிகளைப் பிரேரணை செய்பவ ரும், அவர்களைச் சீவபாவத்திலிருந்து விடுவிப்பவருமான உம்மைச் சரணமடைகின்ருேம். ஜனங்கள் எவரை அறி வதனுல் பரமாநந்தத்தை யடைகின்ருர்களோ, ஸகல விபூதிகளையும் பெறுகின்ருர்களோ அத்தகைய ஸர்வ சக்தி வாய்ந்தவரும் சக்தியை (வேலை) யே ஆயுதமாயுடையவரு மான உம்மை நமஸ்கரிக்கின்ருேம். எந்த பிராஹ்மஞேத் தமர்கள் ஸகல மங்களங்களையும் தரும் சிவத்தைத் தவிர வேருயுள்ளதை நினைக்காமல், எச்சிவத்தைத் தியானித்து முத்தியடைகின்ருர்களோ, அச் சிவப்பிரஹ்மமாகும் உம் மைத் தியானிக்கின்ருேம். ஜகன்னுதனுகிய ஸுப்பிரஹ் மண்யா! உன்னையறிந்த மாத்திரத்தில் மனச்சஞ்சலங்களெ ல்லாமொழிந்து ஸர்வஸந்தேகங்களும் நாசமாகிப் பரஸ்வ ரூபத்தை யடைகின்ருேம். இந் நிலையற்ற தேஹத்தை விட்டு ஜீவர்கள் எந்த ஒரு பரஞ்சோதிப் பொருளை யடைந்து ஸாரூப்ய பதவியை யடைகின்ருர்களோ அப்பரம் பொருளாகிய உம்மை நமஸ்கரிக்கின்ருேம். பரப்ரஹ்மஸ் வரூபியும், பரந்தாமவடிவரும், பரஞ்சோதியும், பரமேஶ் வரரும் சிரேஷ்டமான ரூபமுடையவரும், பரமசாந்த ஸ்வரூபரும், பராபரவஸ்துவுமாகிய தேவரீரே எங்கட் குக் கதி. உம்மைத்தவிர மற்றவரையாம் நாடோம். தங் கள் சரணங்களையே யாங்கள் உபாஸிக்கின்ருேம்.

என்று இங்ஙனம் தேவர்கள் பலவாறு துதித்து விஶ்வரூபத்தோடு விளங்கும் குஹப்பிரஹ்மத்தைப் பிரா ர்த்தித்துக் கொண்டார்கள்.

ஸுப்பிரஹ்மண்யமூர்த்தி பிரஹ்மவித்யாபரம்பரைக்கு ஆதிகுருவாய் ஏற்பட்டபின் பரமசிவன் பரதேவதையை அழைத்துத் தன் மடிமீதிலமர்த்திப் பிரணவலக்ஷ்யார்த்த நிஜஸ்வரூபனாகிய குஹனது மஹிமையைப் பராசக்திக்குக் கூறத்தொடங்கினான்.

## 16. குஹப்பிரஹ்மத்தின் மாஹாத்மியம்.

आमनन्त्यात्मना यस्मान्महासेनात्मसंहतिः ।
सा सेना यदधीनोऽयं महासेनः सुतस्तव ॥

देवा विष्णुमुखा लोके यस्य सेनाः प्रकीर्तिताः ।
दुःखान्तमनयत्तासां सेनानीः परिकीर्तितः ॥

रूपमस्य सुतस्यार्ये वर्ण्यमानं मया शृणु ।
सच्चिदानन्दरूपस्य निष्कलस्य गिरीन्द्रजे ॥

महश्च महसामीशे परंज्योतिरनूपमम् ।
तद्भासा भाति सूर्योऽपि न चन्द्रो नैव तारकाः ॥

नेमाश्च विद्युतः कास्मिन्कुतोऽग्निस्तस्य तेजसि ।
भाति सर्वं प्रसादेन तस्य मुक्तिर्न चान्यथा ॥

ओतं प्रोतं च निखिलं सूत्रे मणिगणा इव ।
पुत्रेण ते पुराणेन पूर्णचन्द्रनिभानने ॥

स्वाभाविकमिदं रूपं रूपमन्यच्चराचरम् ।
अन्यत्तद्भुवनाकारं मूर्धा द्यौर्नाभिरम्बरम् ॥

सप्तपातालपादं तदक्षीण्यग्निः शशी रविः ।

* * * *

மஹாஸேனைகளாகிற ஆத்மக்கூட்டங்கள் உன் மைந்தனை ஆத்மஸ்வரூபமாய்த் தியானிப்பதாலும், உன் மைந்தனுடைய குஹனது ஸ்வாதீனத்தில் எல்லா ஜீவாத்மாக்களும் இருப்பதாலும் அவனுக்கு மஹாஸேனனேன்னும் பெயரேற்பட்டுள்ளது. உலகில் விஷ்ணு முதலிய தேவர்கள் அவனுக்குச் சேனைகளாயிருப்பதாலும் அவர்களின் துக்கங்களைப் போக்கிச் சுகத்தை யருள்வதாலும் அவன் ஸேனானி யெனப்படுகின்றான். கிரிராஜனது மகளே! ஸச்சிதாநந்தஸ்வரூபனும் களங்கமற்றவனுமான நம் செல்வனுடைய ரூபத்தை வர்ணிக்கிறேன். கேள். ஜகதீஸ்வரி! அவன் பிரகாசப் பொருள்களுக் கெல்லாம் மிகப் பிரகாசமானவன்; அவன் ஒப்பற்ற பரம்பொருள். அவனது மிகுந்த தேஜஸ்ஸினால் ஸூர்யன், சந்திரன், நக்ஷத்திரங்கள், முதலிய ஒளிப் பொருள்கள் சோபிக்கின்றன வெனின், மின்னலும் அக்கினியும் எம்மாத்திரம்? ஸகலமும் அவனது அருளால் பிரகாசிக்கின்றனவே தவிர வேறில்லை. பூர்ண சந்திரன் போன்ற முகமுடையவளே! ஸகல சராசரப்பிரபஞ்சங்களும், கயிற்றில் மணிகள் கோர்க்கப்பட்டிருப்பது போல், அவனுடைய ஸ்வரூபத்தில் கோர்க்கப்பட்டு, அதில் அவனது ஸ்வரூபம் குறுக்கும் நெடுக்குமாக பின்னப்பட்டிருக்கின்றது. இங்ஙனங் கூறப்பட்ட ஸ்வரூபம் அவனுக்கு ஸ்வபாவமானது. அவனுடைய மற்றொரு ரூபம் ஸ்தாவர ஜங்கமாத்மக பிரபஞ்சவடிவமாகும். அதுதான் அவனது விராட்ரூபமாகும். ஸ்வர்க்கலோகமே அவனுடைய சிரஸ்ஸாகும். ஆகாசம் அவனது நாபி. அதல, விதல, ஸுதல, ரஸாதல, தலாதல, மஹாதல, பாதாளமென்னும் ஏழுகீழ் லோகங்களும் அவனது பாதங்களாகும். ஸோமஸூர்யாக்னிகளே

அவனது முக்கண்களாம். திக்குக்களே புஜங்களாகும். இத்தகைய பேருருவமன்றி லோகாநுக்கிரகத்தின் பொருட்டு ஓராகார மூர்த்தமும் அவனால் அங்கீகரிக்கப்படும். அதுதான் ஷண்முகங்களோடும் துவாதசபுஜங்களோடும் இரண்டு பாதாரவிந்தங்களோடும் விளங்குவது. இது அவனது மூன்றாவது ரூபமாகும். அவனது மஹிமையைக் கூறுகிறேன் கேள். ஸகலபுவனங்களாலும் மறுக்கத்தகாத அவனது கட்டளைக்குப் பயந்துதான் வாயு சலிக்கின்றது; ஸூர்யன் உதிக்கின்றான். அக்கினி ஹவ்ய கவ்யங்களைத் தேவர்களுக்கும் பித்ருக்களுக்கும் கொண்டு சேர்ப்பிக்கின்றனன். யமன் தன் தர்மத்திலிருந்து சிறிதும் தவறாமல் நடக்கின்றான். பிரஹ்ம விஷ்ணு ருத்திரர்கள் சிருஷ்டியாதி தொழில்களை நடத்துகின்றனர். ப்ரியே! ஸ்கந்தன் ஸகலதேவஸ்வரூபனும், ஸகலலோகஸ்வரூபனும், ஸகல பிராணிஸ்வரூபனும், என்றும் நித்தியமாயுள்ள ஸாக்ஷாத் பிரஹ்மஸ்வரூபனுமாகின்றான். உன் மைந்தனுடைய மஹிமையைச் சுருக்கமாய்க் கூறினேன். ஸம்பூர்ணமாய் எடுத்துரைக்க யாவராலும் முடியாது."

இங்ஙனம் பரமசிவன் பார்வதிக்குக் குஹேசனது மஹிமையை யெடுத்துரைத்தனன்.

## 17. ஸ்கந்தகிரியில் தேவர்கள் யாவரும் குமரனுக்கு ஸேநாதிபத்திய பட்டாபிஷேகம் செய்தல்.

ஸேனாதிபத்திய பட்டாபிஷேகமெனில் ஆத்ம ஸமர்ப்பணமாகும். குஹனே ஸர்வஜீவர்களின் தஹராகாசத்தில் விளங்கும் பரம்பொருளென்றறிந்த தேவர்கள், தங்கள் உடல் பொருள் ஆவியாகிய அனைத்தையும், விசேஷப் பிரஹ்

மமாயும் ஸத்குருநாதராயும் விளங்கும் ஸுப்பிரஹ்மண்ய ஸ்வரூபத்திற்குத் தத்தம் செய்து தமக்கெனவொரு செயலுமின்றி நின்றனர். இங்ஙனம் நிற்கும் நிலையே ஆத்மஸமர்ப்பணமாகும். இது, தேவர்களது மனங்களிற் படிந்திருந்த மலவிக்ஷேபாதிகள் ஸ்ரீ குஹக்கடவுளின் அருளால் நீங்கியதாலும், அவனது விஶ்வரூபத்தைத் தரிசித்ததனுலும் ஏற்பட்டதாகும். இதைப் பிரபத்தியென்றும் பராபக்தியென்றும் சாஸ்திரங்கள் கூறும்.

## 18. தேவர்களின் முறையீடும் ஸோமாஸ்கந்தரின் அருளும்.

ஸேநானீ பட்டம்பெற்ற குமரன் திருக்கயிலாயம் சென்று ஏகாஸனத்தில் விளங்கும் சிவசக்திகளுக்கிடையே அமர்ந்து விளங்கினுன்; நெடுங்காலம் சென்றது. பகைவராகிய அஸுரர்களின் கொடுமை அதிகரித்தது. திருமால் முதலிய தேவர்கள் இன்னது செய்வதென அறியாது மறுபடியும் கைலைக்கு வந்து பரமசிவனிடத்தில் முறையிட்டுக் கொண்டார்கள். மஹாதேவன் தேவர்களது முறையீட்டுக்கிரங்கி ஷண்முகனைப் பார்த்து "குழந்தாய், நீ சென்று தேவர்களுக்குப் பகைவராகிய சூரபத்மன், ஸிம்ஹமுகன், தாரகன் முதலிய அஸுரர்களைச் சம்ஹாரம் செய்துவருவாயாக" என்று மொழிந்து, ஏகாதசருத்ராத்மகமாய் விளங்கும் எறிவல்லயம், துவஜம், பெரியகத்தி, வஜ்ராயுதம், அம்பு, அங்குசம், மணி, கமலம், கோதண்டம் (வில்), ஈட்டி, பரசு (கோடரி) எனப்படும் பதினுெரு ஆயுதங்களையும் தந்தருளி, ஸாக்ஷாத் பிரஹ்மவித்யாஸ்வரூபமான சக்தி (வேல்) ஆயுதத்தையும் அருளி, வீரபாஹு முதலிய நவவீரர்களோடும், ஒன்பதுலக்ஷம் ஸேனையோடும் நூற்றெட்டு படைத்தலைவரோடும் பலவிதகணங்களோடும் அனுப்பினுன். பராசக்தி

யும் பாலனைக் கட்டியணைத்து முத்தமிட்டு ஆசிகூறி யனுப்பினள்.

## 19. தாரகாஸுரஸம்ஹாரம்.

முருகனும், கைலையை விட்டுப் பெரிய ஸேனையோடு அதிசீக்கிரத்தில் ஹேமகூடமென்னும் ஒரு குலாசலத்தை யடைந்தனன். அதற்கருகே தாரகாஸுரனால் பரிபாலிக்கப்படும் மாயாபுரி யென்னும் ஒரு பட்டணமும், கிரௌஞ்சம் என்னும் ஒரு மலையும் இருக்கின்றன. கிரௌஞ்சகிரியையும் மாயாபுரியையும் கண்டவுடன் தேவர்கள் பயந்து நடுக்கமுற்று ஸேநானியைத் தஞ்சமடைந்தனர். ஸேநானியும் தேவர்களுக்கு அபயமளித்து அருள் புரிந்தனன்.

### ஏகாதசருத்ராத்மகமான ஆயுதங்களின் தத்துவம் முதலியன.

ருத்ரன் = ஸம்ஸாரதுக்கத்தை நாசம் செய்யும் தத்துவஞானி. அகண்டாகாரவ்ருத்தியும் அதற்குச் சாதனமான சமதமாதி குணங்களும் கூடிவிளங்குபவன். ஆதலின் குஹக்கடவுளின் திருக்கரங்களில் அமைந்துள்ள ஆயுதங்கள் யாவும் விவேகாதி ஸாதனங்கள் வடிவினவாகுமென்பது ரஹஸ்யமாம். சக்தியென்னும் வேலே அகண்டாகாரவ்ருத்திவடிவ ஞானமாகும்.

ஹேமகூடம் = ஹ்ருதயம். ஸுஷுப்திஸ்தானம். இதற்கருகே உள்ளது மாயாபுரி, அஞ்ஞானத்தையே சரீரமாகவுடைய ஒரு நிலை. இதை ஆண்டு அநுபவித்துள்ள ஜீவன் பிராக்ஞனெனப்படுவன். மலவடிவன். இவனே தாரகனெனப்படும் அஸுரனவன்.

காரண உபாதியோடு கூடிய அவித்யா வடிவ தார கன் மூட இருள்வடிவ யானைமுகத்தோடு கூடி இருத்தல் சாஸ்த்ரீயமே யாகும். தாரகாசுரனுடைய புத்திரர்கள் தாரகாக்ஷன் கமலாக்ஷன் வித்தியுன்மாலி என்பவராவர். இவர்கள் மூவரும் சிவபெருமானைக் குறித்துத் தவஞ் செய்து, பொன் வெள்ளி இரும்பு இவைகளாலாகிய மலை கள்போற் பெரிய மூன்று கோட்டைகளைப் பெற்று, அக் கோட்டைகளுடன் ஆகாயத்திற் பறந்துசெல்லும் வலிமை பெற்று, நினைத்தவிடங்களுக்குச் சென்று விழுந்து ஆங் குள்ள ஜனங்களை நாசமாக்கிக்கொண்டிருந்தனர். காமம் வெகுளி, மயக்கங்களென்னும் அத்திரிபுராஸுரர்களைப் பரமசிவன் ஒரு புன்முறுவலால் நீறுக்கி அழித்தனன் மும்மலகாரியமாகும் முப்புரங்கள் கயிற்றிற் பாம்புபோல் பொய்யாய்த் தோன்றியவையாதலால் ஞானமன்றி வேறெ ந்த ஸாதனத்தாலும் அவை அழியா. ஆதலின் தத்துவ ஞானமே பரமசிவனுடைய புன்முறுவலாகும், இது,

"அப்பணி செஞ்சடை யாதி புராதனன்
முப்புரஞ் செற்றன னென்பர் மூடர்கள்
முப்புர மாவது மும்மலகாரியம்
அப்புர மெய்தமை யாரறிவாரே"

யென்னும் திருமந்திரத்தால் நன்கறியக் கிடக்கின்றது.

ஆதலின், காமம் வெகுளி மயக்கங்களுக்குக் காரண மான அவித்தையையே யுபாதியாய்க் கொண்ட ஜீவத் தன்மையே தாரகாஸுரனின் தத்துவார்த்தமாகும். அவித் தையாலேற்படும் ஜடத் தன்மையே கிரௌஞ்ச மலையாம். ஸுஷுப்தியே மாயாபுரி. ஹ்ருதயக்கிரந்தியே ஹேம கூடம். ஹ்ருதயக்கிரந்தி, ஜடத்தன்மை, அறியாமை

இவைகளின் வடிவ ஹேமகூடம், கிரௌஞ்சம், மாயாபுரி களைக் கண்டவுடன் ஆத்மீயவ்ருத்திகளாகும் தேவர் களுக்கு மிகுந்த பயம் ஏற்பட்டதென்பது பொருத்த முடையதேயாகும். ஆத்மீய வ்ருத்திகளாகும் வீரபாஹு முதலிய வீரர்களும், ஸேனைத் தலைவர்களும், ஸேனைகளும் அவித்யா வ்ருத்தியாகும் ஸுஷுப்தியில் லயப்பட்டு மயங்கினரென்னுமுண்மையைத் தெரிவிப்பதுவே கிரௌ ஞ்ச மலையில் யாவரும் சிக்கி மயங்கிக்கிடந்தனரென்னும் கதையாகும்.

நிதித்தியாஸன ஸமாதி வ்ருத்திகளுக்கு ஸுஷுப்தி யாகும் அவித்யாவ்ருத்தி விரோதியாகு மென்பது சாஸ் திர ஸித்தாந்தமாம். லயம் ஸமாதியின் ஒரு விக்கின மல்லவா? நிதித்தியாஸன ஸமாதிகளின் திட அப்பியாஸத் தினால் அவித்யாவ்ருத்தி யொழிந்து வித்யாவ்ருத்தி செழித்து வளரும். இதுவே தாரகவதையின் தத்துவ மாகும்.

"அப்பே ரசலத்தாரிருளுலகாயினன் மற்றோன்
அப்போது பல் சோதிச் சவிதாவாயவை செற்றான்
துப்பாமழ வன்பின் னவர்மீதீடறு சுடர்வேல்
தப்பா தெறிதந்தானசுரக்கூளிகொல் சண்டன்.

அச்சத்தியவ் விருத்தானவ ராகம் பகு போது
எச்சத்தமு மங்கத் தொனி யிட்டாவி துறந்தார்
நச்சித்தம தாரக்கினி நாகப்பெய ரானுள்
இச்சித்த குமாரன்வலி யெவர் சொல்லிட வல்லார்"

கிரௌஞ்சன் சக்ரவாளகிரியுருவைக் கொள்ளத் தார கன் அப்பெரிய மலையினுள்ளே நிறைந்த அந்தகார(இருள்)

உலகாய் அமர்ந்தனன். அப்போது தூயவனுகிய குஹன் பிரகாசவடிவ பல்லாயிரங் கோடி ஸூர்யர்களாய்த் தோன்றி அப்பேரிருளை யழித்தனன். பின்னர் அஸுரகுலாந்தகனுகிய பெருமான் ஒப்பும் உயர்வு மற்று விளங்குந்தனது சக்தியாயுதத்தைப் பிரயோகித்தனன். அங்ஙனம் எறியப்பட்ட வேலாயுதமானது அவ்விரு அஸுரர்களுடைய உடல்களைப் பிளந்தது. கிரௌஞ்சனும் தாரகனும் பெருஞ் சத்தமிட்டு உயிர் துறந்தனர். வேலாயுதத்தால் கிரௌஞ்சனும் தாரகனும் கொல்லப்பட்டனரென்பதைக் கண்டு மிகுந்த ஸந்தோஷத்துடன் தேவர்கள் குஹேசன் மீது மலர்மாரி சொரிந்தனர்.

## 20. தேவகிரியில் தேவர்கள் குகனைப் பூஜித்தல்.

பிறகு வீரபாஹு முதலிய நவவீரர்களும் இலக்ஷம் கணுதிபர்களும், இந்திரன், திருமால், அயன் முதலிய தேவர்களும் ஸ்ரீ குஹக்கடவுளோடு தேவகிரிக்குச் சென்றனர். அன்றிரவு அத்தேவகிரியில் தேவர்கள் யாவரும் ஷண்முகனை விதிப்படி பூசிக்கவெண்ணி அப்பெருமானிடத்தில் விண்ணப்பித்துக் கொண்டனர். பெருமானும் தேவர்களது விண்ணப்பத்தை யங்கீகரித்துப் பூசிக்க விடைகொடுத்தனர்.

तत्र देवाधिदेवस्य कुमारो जगतां पतिः ।
तस्मिन्सिंहासनं चारु समासेदुषि विश्वपे ॥

सर्वज्ञे जगतां वन्द्ये सर्वज्ञतनये सुराः ।
संतोष्य विविधैः स्तोत्रैर्विधृताञ्जलिमस्तकाः ॥

अर्चयामासुरैशानीमर्घ्याद्यैरुपचारकैः ।
वीरबाहुमुखान्वीरांस्तस्यावरणदेवताः ॥
समभ्यर्च्य यथान्यायं सच्छास्त्रोक्तविधानतः ।
मन्यमानाः स्वमात्मानं कृतार्था विबुधोत्तमाः ॥

ஸகலபுவனங்களை ரக்ஷிக்கின்றவரும், ஸர்வக்ஞனும் ஸகல ஜகங்களாலும் பூஜிக்கப்படுபவரும், ஸ்ரீ பரமேஸ்வர புத்திரருமான அச்சரவணபவன் மிகநேர்த்தியான ஸிம்ஹாஸனத்தில் வீற்றிருக்கையில், தேவர்கள்யாவரும் தங்கள் சிரங்களின் மீது அஞ்சலி கொண்டவர்களாய்ப் பற்பல துதிகளால் ஸந்தோஷிப்பித்துக் குஹப்பெருமானுக்கு அர்க்கியம்,பாத்யம், முதலிய உபசாரங்களால் பூசித்தனர். அன்றியும், அப்பெருமானது பரிவாரங்களான வீரபாஹு முதலிய நவவீரர்களையும், ஆவரண தேவதைகளையும் சாஸ்திரங்களிற் கூறப்பட்ட விதிப்படி வரிசைக் கிரமமாய்ப் பூஜித்துத் தங்களது ஆத்மா கிருதார்த்ததையையடைந்துவிட்டதாகவெண்ணி நிகரற்ற பரமாநந்தம் பெற்றுப் பிரபுவின் அருகில் இருந்தார்கள். குமாரமூர்த்தியும் தேவகிரியைத் தனக்குப் பிரியமான வாஸஸ்தானமாக்கிக் கொண்டனர்.

குறிப்பு:—தேவர்கள் ஸ்ரீ குஹப்பெருமானைப் பூஜித்த விதி ஸ்ரீ அகஸ்தியஸம்ஹிதையில் கூறப்பட்டுள்ளது. அதன்படி ஏற்பட்டுள்ள ஆவரண பூஜாவிதியானது இந்நூலின் இறுதியில் சேர்க்கப்பட்டுள்ளது.

தேவகிரியின் தத்துவம்:—ஹேமகூடமென்னும் ஹ்ருதயமே அவித்தையின் சிறிது நீக்கத்தால் அசுத்த அஹங்காரம் சற்றுக் குறைந்து, ஸர்வக்ஞனும் ஜகத்காரணனுமான ஒரு

பரமேஶ்வரன் இருக்கின்ருனென்றும், அவனையுபாஸித்து அவனது இன்னருளைப் பெறவேண்டுமென்றும் சுபேச்சையுண்டாகத் தேவகிரியாக மாறுகின்றது. உபாஸனுஸ்தானமாகும் ஹ்ருதயபுண்டரீகம் அல்லது தஹராலயமே தேவகிரியெனப்படும். தஹரத்தில் உபாஸிக்கத்தக்கவன் குஹன் ஒருவனேயாவன். அத்தகைய குஹஸ்வரூபத்தை அங்கிங்கெனுதபடி எங்கும் பார்ப்பதே ஸ்தலயாத்திரையாகும். புராணத்தில் சிவஸ்தலயாத்திரை கூறப்பட்டுள்ளதன் உண்மை இதுவேயாகும்.

## 21. குமரன் சிவபூஜைசெய்து சிறந்த அஸ்த்ரங்களைப் பெறுதல்.

ஜீவர்களாகிய தேவகணங்களின் அந்தக்கரணங்களில் தோற்றியுள்ள அந்தகாரமாகிய அவித்யாநிவர்த்தியின் பொருட்டுத் தோன்றும் ஆத்மீயவ்ருத்தியே குமரனுகும். ஜீவர்க்குற்ற அக்ஞானத்தைப் போக்கி நித்தியாநந்தவடிவ மோக்ஷத்தையருளும் சற்குருவே குமரனெனப்படும். **कौ = पृथिव्यां, मां = मोक्षलक्ष्मीं, राति = ददातीति कुमारः ।** என்பது பிரமாணமாகும். ஆதலின் குமரன் ஸகலதேவர்களையும் அழைத்துக்கொண்டு பல ஸ்தலங்களுக்குச் சென்று ஆத்மவடிவ சிவத்தை யுபாஸித்துப் பல சிறந்த அஸ்த்ரங்களைப் பெற்றனன். அவை ரௌத்ராஸ்த்ரம், பாசுபதாஸ்த்ரம், சங்கராஸ்த்ரம் முதலியனவாம்.

ரௌத்ராஸ்த்ரம்—அநர்த்த நிவ்ருத்தி; ஆவரண நீக்கம்.
பாசுபதாஸ்த்ரம்—துவைத நாட்டத்தின் நாசம். அத்வைத நாட்டத்தின் அடைவு.
சங்கராஸ்த்ரம் —ஆநந்தப் பிராப்தி; இவைகளுக்குச் சாதனமான வ்ருத்திகள்.

## 22. பாலைவனத்தைக் கடத்தல்.

स्थानानि सुमनोज्ञानि चक्षुषालोकयन्पितुः ।
गच्छंस्तदन्तरा क्वापि मरुभूमिमवाप सः ॥

साऽतीव परुषा सर्वैरगम्या दावसंनिभा ।
साऽपि भूः समये तस्मिन्ननुगृह्णाति शाङ्करौ ।
सुखदा सर्वजन्तूनां जाता जाङ्गलसंनिभा ॥

मरुभूमिमतीत्यैनां महादेवाङ्गसंभवः ।
संप्राप तरसा देवः परपर्वतमद्रिपम् ॥

"மனோஹரமான சிவஸ்தலங்களைத் தரிசித்துக்கொண்டு செல்லுகையில் இடையில் நீரற்ற மைதானமாகிய ஒரு பாலைவனத்தை யடைந்தனர். காட்டுத்தீக்கொப்பான அப்பாலைவனமோ எவராலும் செல்லத்தகாத மஹாகொடூரமானது. இத்தகைய கானலுங்கூட, ஸ்ரீ சிவகுமரன் அங்கு விஜயம் செய்துள்ளகாரணத்தால் ஸகலப் பிராணிகளுக்கும் இன்பந்தரலாயிற்று. பின்னர், சரவணபவன் ஸகலதேவகணங்களோடு அப்பாலைவனத்தைத் தாண்டி பராசலமென்னும் திருப்பரங்குன்றை யடைந்தனர்" என்பது புராண கதை.

### இதன் தத்துவம்.

அஸ்தி, பாதி, ப்ரியம், நாமம், ரூபம் என்னும் ஐந்து பகுதிகளோடுகூடி விளங்கும் இவ்வுலகமே சிவஸ்தலமாகும். இவற்றுள் நாமமும் ரூபமும் அவித்தையால் ஏற்பட்டபொ

ப்த் தோற்றமாகும். தத்துவஞானத்தால் நாமரூப அத்தியாஸம் சிறிது சிறிதாக நீங்கச் சூன்யப்பிரதீதி ஏற்படுவது அநுபவஸித்தமாம். இந்த சூன்யப் பிரதீதியே ஈண்டு பாலைவனமெனக் கூறப்பட்டது. சூன்யநிலையில் மனத்திற்கு ஒருவித ஆலம்பனமு (பற்றுக்கோடு)ம் இல்லாமையின், அது லயப்பட்டு ஒழியும். கற்பனைகளெல்லாம் ஒழிந்தவிடமாதலின் நீரற்ற பாலைவனமெனப்பட்டது. மஹாஸ்மஶானமும் இதுவே. இதை ஜகப்பாழ் என்று சாஸ்திரங்கள் கூறும். சூன்யத் தோற்றத்திற்கு ஆதாரமாகும் அஸ்தி, பாதி, பிரிய ஸ்வரூபஸச்சிதாநந்த பரம்பொருளே சிவகுமரனும். நாமரூபாத்மக விஷயஸுகங்களை விட அதிஷ்டானுத்மக நிருபாதிகஸ்வபாவ ஆநந்தம் சிறந்ததென்பதில் என்ன ஸந்தேகம்? அதிஷ்டான நாட்டம் திடப்பட திடப்பட ஏற்படும் ஒரு நிலையே பரங்குன்று எனப்படும்.

பின்னர் சிவகுமரன் திருப்பரங்குன்றிலிருந்து சேந்திபுரமென்னும் திருச்செந்தூரையடைந்தனன்.

அகண்டாகாரஸமாதிவ்ருத்தியோடு கூடிய துரீய நிலையே திருச்செந்தூரெனப் பெரியோர் கூறுவர்.

முக்குணமாள,

அந்திபகலென்றிரண்டையுமொழித்
திந்திரிய சஞ்சலங்களையறுத்
தம்புயப தங்களின் பெருமையைக்— கவிப்பாடிச்
செந்திலையுணர்ந்துணர்ந்துணர்வுறக்
கந்தனை யறிந்த யறிந்தறிவினிற்
சென்று செருகுந்தடம் தெளிதரத்— தணியாத

சிந்தையு மவிழ்ந்தவிழ்ந்துரையொழித்
தென் செயலழிந்தழிந்தழிய மெய்ச்
சிந்தைவர என்று நின் தெரிசனைப்— படுவேனோ?

என்னும் திருப்புகழ் திருச்செந்தூரின் தத்துவத்தை நன்கு தெரிவிப்பது அறியத்தக்கது.

"சேந்திற் காவல" "தணிகையிலிணையிலி" என்பதும் திருப்புகழ்ப் பிரமாணங்களாம். திருச்செந்திலில் மஹா ஜாக்கிரதையோடு ஞானபூமியைக் காவல் புரியுந்தன்மை கூறப்பட்டது. எங்கும் அறிவாகாரமாய்ப் பார்க்கும் ஆக்ஞையே திருச்செந்திலாகும். செம்மை (செம்பொருள் தன்மை) அதாவது ஆத்மஸ்வரூப விமர்சத்தோடுகூடிய நிலையே செந்திலாமென்பது பரம ரஹஸ்யமாம்.

இங்ஙனம் குஹேஸன் கைலாஸத்திலிருந்து புறப்பட்டு, பிரம்மா, விஷ்ணு, இந்திரன் முதலிய தேவகணங்களோடும் நவவீரர்களோடும் தேவஸேனைகளோடும் மண்ணுலகிற்கு வந்து, தாரகஸம்ஹாரம் செய்து, பல சிவஸ்தலங்களைத் தேவர்கட்குத் தரிசிப்பித்துத் திருச்செந்தூர் அடைந்தனனென்னும் புராண கதையானது தேசிகத்தன்மையை வகித்துப் பல (ஞான) ஸாதனவடிவ அஸ்த்ரங்களைப் பெற்று நிதித்தியாஸனபூமியாகும் குமாரபுரி (திருச்சேய் நல்லூர்)யை யடைந்து ஸர்வப் பிரபஞ்ச உபசமபூமியாகும் பாலைவனமேனும் ஜகப்பாழையுணர்ந்து, அதற்கு அதீதமாயுள்ள ஸச்சிதாநந்தஸ்வரூப பரபூமியை யடைந்து அந்நிலையிலேயே மஹாஜாக்கிரதையோடுள்ள ஸமாதிஸ்திதியை யடைந்தவுண்மையை யுணர்த்துகின்றது.

ஸம்பவகாண்டத்தின் தத்துவவிமர்சம் முற்றிற்று.



# ஸ்ரீஸுப்ரஹ்மண்ய தத்துவம்.

## ஆஸுரகாண்டம்.

(அவதாரிகை) இக்காண்டத்தில் சூரபத்மன் முதலிய ஸகல அஸுரர்களின் உத்பத்தி, அவர்களாலியற்றப்பட்ட வீரயாகத்தின் லக்ஷணம், பரமசிவனால் அவர்களுக்குக் கிடைத்த வரம், அஸுரகுருவாகிய சுக்கிராசாரியரால் சூரனுக்கு உபதேசிக்கப்பட்ட துர்ப்புத்தி, சூரனது திக் விஜயம், கொடுங்கோன்மை, தேவர்களைத் தண்டித்துச் சிறையிடுதல் முதலிய விஷயங்கள் நன்கு விமர்சிக்கப்படும்.

இங்ஙனம் விமர்சிப்பதற்கு முன், சங்கரஸம்ஹிதை யின் காண்டங்களின் வரிசைக்கிரம அமைப்பைப் பற்றிச் சற்று கூர்ந்தாராய்தல் அவசியமெனத் தோன்றுகின்றது. ஸம்பவ, ஆஸுர, வீரமாஹேந்த்ர, யுத்த, தேவகாண் டங்களென்பது வரிசைக்கிரமமாகும். இந்தக் கிரமமானது முமுக்ஷுவாகிய அதிகாரிஜீவன் ஸ்வாராஜ்யஸித்தியா கும் மோக்ஷ அடைவின் பொருட்டு அப்பியஸிக்க வேண்டிய ஸாதனங்களின் பரம்பராக்கிரமத்தில் அமைந் துள்ளது. அஃதெங்ஙனமெனின்:—

ஸம்பவகாண்டத்தில், விடுதலையாகும் மோக்ஷம் நிச் சயமாய் அடையப் படுமென்பதும், ஆத்மஸ்வரூபமின்ன தென்பதும், ப்ரஹ்மஸ்வரூபம் இத்தகையதென்பதும், ஜீவப் பிரஹ்மைக்கியத்திற்கு வேண்டிய அந்தரங்க ஸாத னங்கள் இவையென்பதும் மற்றும் பரோக்ஷமாய்க் கூறப் பட்டுள்ளன.

" अयं तु संभवाख्यो हि काण्डो वेदार्थसंमितः ।
कथितः श्रेयसामेष निदानं विदुषां सताम् ॥ "

என்னும் பிரமாணம் இங்கு அறியத்தக்கது.

ஆஸுரகாண்டமாகும் இதில், அஞ்ஞானங்காரணமாக ஜீவனிடத்தில் தோன்றும் ஸகல அநாத்மவ்ருத்திகளின் ஸ்வரூபமும், உற்பத்தியும், ஜீவகுணங்களால் ஆத்மீய ஸத்வகுணங்கள் மழுங்கி லயித்திருத்தலும், அஹங்காரத்தின் வலிமையும், மற்றும் கூறப்பட்டுள்ளன. வேதத்திற் கூறப்பட்டுள்ள சிருஷ்டிக்கிரமமாகும் ஆரோப தத்துவமே ஆஸுரகாண்டத்தின் ஸ்வரூபமாகும்.

வீரமாஹேந்த்ர காண்டத்தில் அநர்த்த நிவர்த்திக்கு நேர்ஸாதனமாகும் அபரோக்ஷ (தத்துவ) ஞானத்தின் பொருட்டுச் செய்யப்படும் மனனம் நன்கு கூறப்படுகின்றது. அஞ்ஞானத்தையும் அதன் கார்யங்களையும் சாஸ்த்ரீய யுக்திகளைக்கொண்டு விசாரித்து அவற்றின் மித்யா ஸ்வரூபத்தை யறிதலே மனனமாகும்.

யுத்த காண்டம் நிதித்தியாஸனவடிவமாம். அகண்டாகாரவ்ருத்தியால் ஸகல அநர்த்தங்களும், ஜீவகுணங்களும், அஹங்காரமென்னும் ஜீவபாவமும் நாசமாகின்றனவென்பதே யுத்தகாண்டத்தின் தத்துவமாகும்.

தேவகாண்டம். இதில் பாஹ்யம் ஆந்தரம் என்னும் இருவித ஸமாதிகளின் அடைவும், ஜீவன்முக்தியின் ஸித்தியும், ஆநந்தமாகும் ஆத்மஸ்வாராஜ்ய பிராப்தியும் மற்றும் கூறப்பட்டுள்ளன.

ஆகவே, சங்கரஸம்ஹிதையின் காண்டங்களின் வரிசைக்கிரமஅமைப்பு முமுக்ஷுவினால் அனுஷ்டிக்கத்தக்க ஸாதனக் கிரமமாகவே இருப்பது நன்கு புலப்படுகின்றது.

## 1. சூரபத்மாதி அஸுரர்களின் உத்பத்தி.

"द्वया ह प्राजापत्या देवाश्चासुराश्च"

(ப்ருஹதாரண்யகம்-3பிராம்)

பிரஜாபதியின் புத்திரனான கஶ்யபருக்குத் தேவாஸுரர்கள் பிறந்தனர். அவருக்குத் திதி, அதிதியென இரண்டு மனைவிகளுண்டு. அவர்களுள் திதியின் வயிற்றில் அஸுரர்களும், அதிதியின் வயிற்றில் தேவர்களும் தோன்றினர். இது புராணகதை. இதன் தத்துவமாவது:—

நான்முகப்பிரமன் மனம், புத்தி, சித்தம், அஹங்காரம் என்னும் நாற்பகுதிகளைக்கொண்ட அந்தக்கரணமேயாவன். அவனது புத்திரன் கஶ்யபர். கஶ்யபரின் தத்துவம் ஜீவபாவம். எழுத்துக்களின் மாறுபாட்டால் குதிரை குருதை யென்றும் மதுரை மருதையென்றும் வழங்கப்படுவன போல், பஶ்யகன் என்னும் பதம் கஶ்யபன் என்று வழங்கப்படுகின்றது. **पश्यकः कश्यपो भवति** என்பது ஶ்ருதி. பஶ்யகன் என்றால் "பார்ப்பவன்" என்பது பொருள். பார்ப்பவன் ஜீவனே. உலகத்தைப் பார்ப்பவனும் ஜீவனே. சிவத்தைப் பார்ப்பவனும் ஜீவனே. ஜீவனாகும் கஶ்யபனுக்கு இரண்டு மனைவிகளல்லவா? திதி (அவிவேகம்) ஒருவள்; அதிதி (விவேகம்) மற்றொருவள். அவிவேகமாகும் திதியின் மூலமாய் அஸுரர்களாகும் துர்க்குணங்களும், விவேகமாகும் அதிதியின் மூலமாய்த் தேவர்களாகும் நற்குணங்களும் பிறந்தன. விவேகதிருஷ்டியும், அவிவேக

திருஷ்டியும் ஜீவனுக்கு முக்குணமாறு பாட்டால் அப்போதைக்கப்போது ஏற்படுவது ஸஹஜமே. இது யாவர்க்கும் அநுபவம். இதன்படி, சிலகாலம் தேவர்கட்கு ஜயமும், சிலகாலம் அஸுரர்கட்கு ஜயமும் மாறி மாறி வந்துகொண்டிருக்கும். ஒரு காலத்தில்,

देवतानां समृद्धिं च दैत्यानां संक्षयं तथा ।
दृष्ट्वा तु मनसा स्मृत्वा शैलादेर्ब्रह्मणोऽध्वरे ।
शापं संपत्प्रशमनं देवतानां तदोशना ।
विचार्यागामि कार्यं च तामाह वचनं पुनः ॥
'माये त्वं काश्यपं गत्वा पुत्रानुत्पाद्य नाम च ।
कृत्वा तेषां समृद्ध्यर्थं यागं चैव व्रतं तथा ॥
उपदिश्य सुराणां च क्षयार्थं त्वं तपश्चर ।'

(சங்-ஸம்-ஆஸுர)

(இதன் பொருள்) தேவதைகளின் பொங்குதலையும், அஸுரர்களின் மங்குதலையும் கண்டு அஸுரகுருவாகிய சுக்ராசாரியார், மனதில் நன்கு யோசித்து, தக்ஷப்பிரஜாபதியினது யாகத்தில், நந்திகேஸ்வரரால் தேவர்களது ஐஸ்வரியம் க்ஷீணிக்கும்படி இடப்பட்ட சாபத்தையும் அதுகாரணமாக எதிர்காலத்தில் நேரிடப்போகும் விஷயங்களையும் நன்கறிந்து அஸுரேந்த்ரனது புதல்வியாகும் மாயை யென்பவளை அழைத்து "பெண்ணே! நீ இப்பொழுது கஸ்யபப் பிரஜாபதியினிடம் சென்று, அவரை மோகிப்பித்து, பிள்ளைகளைப் பெற்று, அவர்கட்கு நாமகரணமுஞ் செய்து, அவர்களின் க்ஷேமத்தின் பொருட்டு அவர்களுக்கு

யாகம், விரதாநுஷ்டானம் முதலியவற்றை யுபதேசித்து, நீயும் தேவதைகளின் மங்குதலை வேண்டித் தவம் புரிவாய்'' என்று கட்டளை யிட்டனுப்பினான்.

அஸுர குருவாகிய சுக்ராசாரியார் என்பவரது தத்துவம் பஹிர்முகப் பிரபஞ்ச ஸம்பந்த ஸங்கல்பவிகல்பாத்மக அசுத்தமனமேயாகும்.

தேவகுருவாகிய பிருஹஸ்பதியின் தத்துவமோ வெனின், அந்தர்முக அத்தியாத்ம ஸம்பந்த அசஞ்சல விசுத்த புத்தியேயாகும்.

## சூரபத்மாதிகளின் தத்துவம்

மாயையென்னும் அவிவேகவடிவ அஞ்ஞானமானது ஜீவனாகும் கஸ்யபரை மோஹிப்பிக்கச்செய்து, அவருடன் புணர்ந்து, அஹங்காரமென்னும் சூரபத்மனையும், குரோதமென்னும் ஸிம்ஹமுகனையும், மோஹம் அல்லது மூடத்துவமென்னும் தாரகனையும், சாஞ்சல்யம் அல்லது சபலையென்னும் அஜமுகியையும் பெற்றனள். இவர்களோடு இரண்டுலக்ஷவெள்ளம் ஸைன்யத்தையும், சிங்கி, புலி, குதிரை, மான், கரடி, பன்றி, காட்டெருமை, யாளி, செந்நாய், காண்டாமிருகம், கழுதை, ஒட்டை, குரங்கு, நரி, முதலிய மிருகவுருவங்களையுடைய எண்ணிறந்த அஸுரர்களையும் பெற்றனள். இவர்களின் ஸங்கியை அறுபதினாயிரம் வெள்ளமாகும். இவர்களின் தத்வமாவது:—

ராஜஸ தாமஸ குணங்களின் கலப்பினால் ஏற்பட்ட, அபர, அசுத்தாஹங்காரத்தினால் ஏற்படும் துர்க்குணங்களே சூரபத்மனின் புதல்வரான பாநுகோபன், வஜ்ரபாஹு, அக்னிமுகன் மூவ்வாயிரவர் முதலியவராவர்.

குரோதகுணத்தின் காரியங்களாகும் லோபம், மாத்ஸர்யம் விஷயாபிலாஷை முதலியவைகளே ஸிம்ஹமுகனது புத்திரராகும் அதிசூரன் முதலியவராவர்.

ஜடத்தன்மை, ஆலஸ்யம் முதலியவை மோஹ ரூப தாரகனது மக்களாகும்.

சிவிங்கி, புலி, யானை முதலிய மிருகரூப அஸுரர்கள் கொடூரம், மூர்க்கம், ஹிம்ஸை முதலிய துர்க்குண வடிவினரேயாவர்.

இங்ஙனம் அசுத்தாஹங்கார வடிவினனும், ஆணவமல ஸ்வரூபனுமாகிய சூரபத்மன், காமக்குரோதாதி ஸகல துர்க்குணவம்சத்தோடும், பரிவாரங்களோடும் தர்மகோபன் முதலிய மந்திரிகளோடும் விளங்குகையில் ஸகல துர்க்குணங்களுக்கும் தாயாகிய மாயை மிகவும் ஸந்தோஷித்துச் சூரபத்மனைப் பார்த்து "அப்பா மகனே! நீ முதலில் செய்யவேண்டிய முக்கியமான விஷயம் யாதெனில், பௌருஷம்,ஐஶ்வர்யம், ஆயுஸ், பிரஸித்தி, பிரபுத்தன்மை முதலியவற்றைப் பெறுதலேயாம். ஆதலின் பரமசிவனைக்குறித்து இதுவரையில் யாராலும் செய்யப்படாததும், அநுஷ்டிக்கப்படாததுமான ஒரு வீரயாகத்தை இயற்றுவாய். அவ்வீரயாகத்தால் பரமசிவன் ஸந்தோஷித்து உனக்கு வேண்டிய வரங்களையெல்லாம் தருவார்" என்று கூறினாள்.

தாயின் சொற்படியே சூரபத்மன் தனது தம்பிமார்களோடு வீரயாகமியற்றிப் பரமசிவனிடமிருந்து, ஆயிரத்தெட்டண்டங்களையும் நூற்றெட்டு யுககாலம்வரை யரசாளும் வல்லமையும், ஸகல தேவர்களையும் ஜெயிக்கும் சக்தி வாய்ந்த ஆயுதங்களையும், எங்கும் ஸஞ்சரிக்கத்தக்க ஒரு ஸித்தியையும் பெற்றனன்.

## ஆஸுர வீரயாகலக்ஷணம்.

வீரயாகமென்பது ஒரு காம்யகர்மா. தனக்கு ஒன்று வேண்டுமென்று நினைத்து அதன் ஸித்திக்காக இயற்றப்படும் கர்மாவுக்குக் காம்யகர்மா வென்று பெயர். இது மிகத் தாழ்ந்தது. அதிலும் பிறருக்குத் தீங்கிழைத்துத் தான் இன்புறுதற் பொருட்டுச் செய்யப்படும் ஒன்று தாழ்ந்த வற்றிலும் மிகத்தாழ்ந்தது. இத்தகைய அதமமானது தான் சூரன் இயற்றிய யாகம்.

இதன் ஸ்வரூபம் யாதெனில், தனது சரீரத்தின் மாமிசங்களையே ஸமித்துக்களாகவும், உதிரத்தை நெய்யாகவும், 'ஈசன் பிரத்தியக்ஷமாகி யான் வேண்டியவரங்களைத் தருமளவும் இதையியற்றுவே' னென்னும் பிடிவாதமும், அங்ஙனம் ஈசன் வரம் தராமற் போனால் 'யான் அந்த யாகாக்கினியில் விழுந்து எரிந்தொழிவே' னென்னும் நெஞ்சுறுதியுங்கொண்டு இயற்றப்படுவதாகும்.

சூரபத்மன், ஸிம்ஹமுகன், தாரகன் என்னும் மூவரும் வெகுகாலம் இந்த வீரயாகமியற்றிக் கடைசியில் பரமசிவனிடமிருந்து தாங்கள் கோரிய எல்லாவரங்களையும் பெற்றனர். ஆனால் சாவில்லா வரம் மாத்திரம் தரப்படவில்லை. அவர்களது மரணம் அழிவற்ற சிவசக்தியினால் மாத்திரம் ஏற்படுமென்பது அவர்கட்குக் கூறப்பட்டது.

உடனே சூரபத்மன் பேரானந்தங்கொண்டு தன் குலகுருவாகிய சுக்ராசாரியிடம் சென்றுவணங்கி, காரியாகாரிய புத்திமதிகளைச் சொல்லும்படி வேண்டிக்கொண்டனன்.

சுக்கிரன் உபதேசம்.

शुक्रस्तु शूरपद्मानमेकमेकान्तमानयत् ।
उवाच वाचा वाचालो दृष्टार्थानुविधायिनीम् ॥
"भग्ने घटे घटाकाशो महाकाशे प्रलीयते ।
तद्वद्देहविनाशेन जीवस्तु शिवतां गतः ॥
तस्मात्पुण्यानि पापानि मिथ्यारूपाणि सत्यतः ।
मोक्षोऽप्येवं ततस्त्वं तु स्वात्मानं ब्रह्मरूपिणम् ॥
मत्वा शाकं विमुञ्चाथ ब्रह्मविष्णवादिदेवताः ।
इन्द्रादिदेवतानां च भयमुत्पादयन्महत् ॥
तेषां पदं प्रयच्छ त्वमसुराणां महौजसाम् ।
मारणं च तथा कामं परस्यापि च वञ्चनाम् ॥
चौर्यं प्रद्वेषणं चैवमादीनि च तथा कुरु ।"

(சங்-ஸம்-ஆஸ-கா-3 அத் 33-41)

(இதன் பொருள்) சூரபத்மனைத் தனியே அழைத்து சுக்கிராசாரியார் உபதேசித்ததாவது:—

"எங்ஙனம் குடத்திற்குள்ளிருக்கும் கடாகாசமானது அக்குடம் உடைந்தபோது யாதொரு பிரயத்தனமுமின்றி மஹாகாசத்தோடு கலந்துவிடுகின்றதோ, அங்ஙனமே, ஒரு ஜீவனுடைய சரீரத்திற்கு லயம் நேர்ந்தபோது சிவத்தோடு சேர்ந்துவிடுகின்றது. இதுதான் மோக்ஷமென்பது. இதையடைவதற்கு யாதொரு ஸாதனமும் வேண்டியதில்லை. புண்ணியமென்பதும், பாவமென்பதும் உண்மையில்

இல்லவே இல்லை; உண்டென்று கூறும் வார்த்தைகள் வெறும்பொய்யே, ஆதலின் ஹே சூரனே! நீ செய்யுத்தக் கது யாதெனின், உன்னுடைய தேஹத்தையே பரப்பிர ஹ்மமாக நினைத்துச் சோகத்தை யறவே விட்டு, விஷ்ணு முதலியவர்களும், இந்திரன் முதலிய தேவர்களும் அஞ்சி நடுங்கும்படி திக்விஜயம் செய்து அவர்களது பதவி களில் மஹாபராக்கிரமசாலிகளான அஸுரர்களை ஸ்தா பித்து, ஸதா கொலை, காதல், வஞ்சனை, திருட்டு, துவேஷம், முதலியவற்றைச் செய்துகொண்டு ராஜ்யபாரம் செய்வா யாக" என்பதாம்.

இவ்விஷயம், கந்தபுராண வெண்பாவிலும் கூறப்பட் டிருக்கின்றது. அது வருமாறு:—

"சிறியார் பெரியரெனச் சிந்திக்கலாமோ
இறுதியிற் பல்லாவியுமொன் றென்றோர்ந்—தறிதலுண் [மை
உன்னைப் பிரமமென்றே யோதியய னாதியருக்
கின்னல் புரிவா யிசைந்து.

காமம் களவுகொலை கட்பொய்மை யாதியெலா
நேமமெனச் செய்தியற்றால் நிற்குவருந்—தீமையொன் [றும்
இல்லையவை செய்யாக்கால் ஏந்தல்நீ வேட்டவைதான்
ஒல்லையி லாமோ வுனக்கு.

தோற்றம் அழிவாதி தொடக்கின்றி யாவியொன்றாய்
வேற்றுமையில் லாப்பரன்சீர் மேவொரியல்—பேற்றது [மெய்
நெஞ்சுணர்தி தீதுநலம் நேர்பாவம் புண்ணியமென்
றஞ்சல் அறிவின்மை யாம்."

இங்ஙனம் சூரனுக்கு அஸுரகுருவால் உபதேசிக்கப்பட்டது. இது விரோசனமதம். தேஹாத்ம அத்தியாஸம் பூர்ணமாயுடையது.

இவ்வுபதேசத்தைக் கேட்டவுடன் இயற்கையிலேயே அஹங்காரவடிவனுன சூரன் மிக்கசெருக்கடைந்து, தேவர்களை வருத்த ஆரம்பித்துத் திக்குவிஜயம் செய்து யாவரையும் ஜெயித்து, தேவர்களைத் தனக்கு அடிமைகளாகச் செய்து, எதிர்த்த சிலரைச் சிறையிட்டுக் கொடுங்கோல்செலுத்தினன். இவனது பட்டணமும் வீரமாஹேந்த்ரமென்பதாகும். இது உப்புக்கடலுக்கு மத்தியில் நிர்மிக்கப்பட்டதாகும். ஜனனமரணரூப துக்கஸம்ஸாரமே உப்புக்கடலாம்.

### சூரபத்மாதிகளின் பட்டணங்களின் தத்துவம்.

யான் எனது என்னும் செருக்கோடு சரீராதிகளில் ஆத்ம புத்தியும், விஷயங்களில் மமதாபுத்தியுங் கொண்டு கர்த்ருத்துவ போக்த்ருத்வ புத்தியோடுள்ள அஞ்ஞான ஜீவ நிலையே வீரமாஹேந்த்ரபுரமாகும். இந்தப்பட்டணத்திற்கு எட்டுப்பக்கங்களிலுமுள்ள ஹேமபுரி, தேவபுரி, லங்காபுரி, நீலபுரி, சுவேதபுரி, அஸுரபுரி, வாமாபுரி, பத்மபுரி என்னும் எட்டுப் பட்டணங்களே புர்யஷ்டகமாகும்; பஞ்சபூதங்களும், அவித்யை, காமம், கர்மம் என்பனவும் புர்யஷ்டகமாகும். இவற்ருல்தான் ஜீவத்தன்மை ஏற்பட்டுள்ளது. இந்த ஜீவக்ஷேத்திரமாகும் வீரமாஹேந்திரபுரிக்கு வடக்கே குரோதரூப ஸிம்ஹமுகனுக்கு ராஜதானியாகும் ஆஸுரபுரியும், தெற்கே மோஹவடிவ தாரகனுக்கு ராஜதானியாகும் மாயாபுரியும் நிர்மிக்கப்பட்டன.

இம்மூன்று பட்டணங்களைத் தங்களுக்கு வாஸஸ்தலங்களாகச் செய்துகொண்டு சூராதி மூவரும் கொடுங்கோலோச்சி வந்தனர்.

ஜீவனது ஸ்தூல, ஸூக்ஷ்ம, காரண சரீரங்களே மேற்கூறிய மூன்று பட்டணங்களாகுமெனவும் சிலர் கூறுவர்.

### இந்திரன் சீர்காழிக்குவந்து தவஞ்செய்தல்:

இங்ஙனம் சூரபத்மன் கொடுங்கோல் புரிந்து வருகையில் ஆத்மஸ்வரூபனான இந்த்ரன் ஆத்ம சக்தியாகும் இந்திராணியோடு, ஸ்வர்கத்திலிருந்து சுக(கிளி) மென்னும் பக்ஷிரூபந்தாங்கி சிதம்பரத்திற்கு ஸமீபமாயுள்ள சீர்காழி யென்னும் பிரஹ்மபுரத்திற்கு ஓடிப்போய் விட்டான்.

சிதம்பரம் = தஹராகாசம்; பிரஹ்மபுரம் = ஹ்ருதயம்; உருமாறி வந்ததால் ஹம்ஸத்திற்குப் பதிலாய்க் கிளி வடிவமாக வந்ததாகக் கூறப்பட்டுள்ளது.

அஹங்காராதி துர்க்குணப்பெருக்கால் ஆத்மஸ்வரூபம் தன் ஸ்தானமாகும் ஹ்ருதயத்தில் மறைந்திருந்தது என்னும் தத்துவம் மேற்கூறிய கதாபாகத்தால் நன்குவிளங்குகின்றது.

இந்திரன் மூங்கிலுருவமாகக் கபடவேடங் கொண்டு இருந்தான். இவ்விஷயம்,

**आरामवृक्षमध्ये तु शच्या साकं पुरन्दरः ।**
**वैणवं रूपमा(श्रित्य)प्यायमतिष्ठच्छद्मवेषभाक् ॥**

என்னும் பிரமாணத்தால் நிச்சயமாகின்றது. ஹ்ருதய கர்ணிகைக்குச் சம்பந்தப்பட்டதாயுள்ள புரீதத் என்னும் நாடியின் துவாரத்திலிருந்து நூற்றொரு நாடிகள் புறப் படுகின்றன. இவைகளைத்தான் விருக்ஷங்களோடு கூடிய உத்தியானவனம் என்று புராணங்கூறுகின்றது. இதன் மத்தியில் ஒரு மூங்கிலுண்டு. இதுதான் ஸுஷும்நா நாடி. இந்த நாடிவடிவமாய் நின்றான் இந்திரன். இந்த் ராணி குண்டலினீ சக்தியானாள். அஹங்கார ரூப சூரபத் மனுக்கு இந்த்ராணி யென்னும் சசிதேவியோடு சேர வேண்டுமென்னும் எண்ணம் உண்டாய் அது முடியாமல் போயிற்று.

அஹங்கார மமகாரங்களோடு கூடியவர்க்கு ஆத்ம சக்தியாகும் குண்டலினீ வஶ்யமாவதில்லை யென்பது சாஸ்த்ர ஸம்மதமன்றோ?

## பாநுகோபன் ஜேயந்தனைச் சிறையிடுதல்:

இங்ஙனம் சூரபத்மனது மனோரதம் பலிக்காமற் போனதைச் செவியுற்ற சூரபத்மனது மகன் பாநுகோபன் இந்த்ரபட்டணமாகும் அமராபுரிக்குச் சென்று முற்றுகை போட்டான். இந்திரன் மகன் ஜயந்தன் பாநுகோபனோடு சண்டையிட்டான். பாநுகோபனுக்கும் ஜயந்தனுக்கும் பெரும் போர் நடந்தது. ஜயந்தன் மூர்ச்சையாய்க் கீழே விழுந்தான். அப்போது இந்திரனது வாஹனமாகும் ஐராவதமென்னும் வெள்ளையானையும் சண்டையிட்டுத் தன் கொம்புகளை யிழந்தன. பின், பாநுகோபன் ஜயந்த னைக் கட்டிக்கொண்டு போய்ச் சிறைப்படுத்தினான்.

இந்திரன்மகன் ஜயந்தன் = ஸர்வக்ஞ சுதந்திரத்தன்மை.

சூரன்மகன் பாநுகோபன்:—भा = ஆத்மப் பிரகாசத்தை,
(भा + अनुकोप:)
अनुकोप: = அநுஸரித்துக் கொண்டிருந்து அதைக் கோபித்தல்; அதாவது, ஆத்மப் பிரகாசத்தை மறைக்கும் ஆவரணம்.

ஐராவதமென்னும் வெள்ளையானை = ஸத்வாகார ஏகாக்கிர தியான வ்ருத்தி.

அஹங்காரத்தின் அரசாட்சியில் ஸ்வாதந்தர்யமும், ஸத்வாகார ஏகாக்கிரவ்ருத்தியும் அழிவது சாஸ்திர ஸம்மதமேயாகும்.

இங்ஙனம் அஸுரர்கள் உத்பத்தியானது முதல் ஜயந்தன் சிறைப்பட்டது வரையில் ஸகல விருத்தாந்தங்களும் ஸ்ரீஷண்முகசிவனுக்குத் தேவகுருவாகிய பிருஹஸ்பதியால் நன்குரைக்கப்பட்டது.

அநர்த்தகாரிகளாகும் ஸகல மாயா கார்யங்களின்
ஆரோப வடிவ ஆஸுரகாண்டம் முற்றிற்று.






# ஸ்ரீஸுப்ரஹ்மண்ய தத்துவம்.

## வீரமாஹேந்த்ர காண்டம்.

ஆஸுரகாண்டத்தில் தேவகுருவாகிய பிருஹஸ்பதி பகவான் ஷண்முகப் பெருமகனுக்குச் சூரபத்மாதி அஸுரர்களின் உத்பத்தி, அவர்களது வரப்பிரபாவம், அவர்களது பட்டணங்களின் ரஹஸ்யநிலை முதலிய மர்மங்கள் விமர்சமாக நன்கு கூறியதன்மேல் ஸ்கந்தபகவான் கூறுகின்றார்.

श्रृणुध्वममराः सर्वे ब्रह्मविष्णुपुरस्कृताः ।
शूरं सबान्धवं हत्वा स्थापयिष्यामि वो ध्रुवम् ॥
प्रेष्यस्तदर्थं को वा स्याद्दूतस्तस्य बलाबले ।
उन्नतिं निम्नतां ज्ञातुं मर्मज्ञो वा विचक्षणः ॥

(வீர·கா-1. அ 3-4)

"கேளீர் பிரஹ்மா விஷ்ணு முதலிய ஸகலதேவர்களே! சூரபத்மனை யவன் பந்துவர்க்கத்தோடு ஹதம் பண்ணி உங்களை யுங்கள் ஸ்தானங்களில் நிச்சயமாக நிலை நிறுத்துகிறோம். அதன்பொருட்டு அச்சூரனது பலாபலத்தையும், உயர்வு தாழ்வுகளையும், மற்றுமுள்ள இதர ரஹஸ்யங்களையும் அறிந்துவருதற்குத் தூதனாக யாரையனுப்பத்தகும்? மர்மங்களைப் பூராயமாய் அறிந்து வருதற்குரிய ஸமர்த்தன் யார்?"

இவ்வார்த்தைகளைச் செவியுற்று எல்லாத்தேவர்களும் தமக்குள் நன்கு யோஜித்து வீரபாஹுவே யதற்குத் தகுதி யென நிச்சயித்துக் குஹனிடம் தெரிவித்தனர். பிறகு குஹப்பெருமானும் அதற்கு ஒப்புக்கொண்டு வீரபாஹுவை நோக்கி "வாராய்! வீரபாஹுவே!! நீ இப்போது சூரனிடம் சென்று 'அடாசூரா! நீ யுன் அஹங்காரத்தை யொழித்தவனுகி ஜயந்தன் முதலிய தேவர்களைச் சிறையினின்றும் விட்டுவிட்டுச் சுகமாய் வாழ்ந்திரு. இல்லாவிடில் நாம் இப்போதுவந்து சீக்கிரத்தில் உன் பந்துவர்க்கத்துடன் கொன்றுவிடுவோம்' என்று நாம் சொல்லியனுப்பியதாக அவனுக்குத் தெரிவித்து அவனது மனநிலையை யறிந்துவா" வென்று ஆக்ஞாபித்தனுப்பினுர்.

வீரபாஹுவும் குஹனது கட்டளையைச் சிரமேற்கொண்டு, அங்கிருந்து புறப்பட்டுக் கந்தமாதனகிரியில் நின்றுகொண்டு, விஸ்வரூபந்தாங்கி, ஆகாயமார்க்கமாய்ப் பாய்ந்து, கடலைத்தாண்டி வீரமாஹேந்த்ரபுரியை யடைந்தனர்.

## தூதுசேலுத்தும் தத்துவம்.

அத்தியாத்மவிருத்திகளுக்குப் பிரதிபந்தகங்களாகும் மாயாகார்யங்களான அநாத்மவ்ருத்திகளின் லக்ஷணத்தையும், ஸ்வரூபத்தையும் பரோக்ஷ சாஸ்திரங்களின் மூலமாய் நன்குணர்ந்து, தர்க்கம் அநுமானம் முதலிய பல யுக்திகளைக் கொண்டு அவற்றின் மித்தியாத்துவத்தை நிச்சயஞ்செய்யும் சாஸ்திரவிசாரணையில் முனைந்த புத்தியே தூதனுவன். இதற்கு மீமாம்ஸையென்றுபெயர்.

குறிப்பு:—முன், ஸம்பவகாண்ட தத்துவவிமர்சத்தில் வீரபாஹுவை ஆந்தர நிர்விகல்ப ஸமாதிவ்ருத்தியாகக்

கூறப்பட்டுள்ளது. அது நிதித்தியாஸன வடிவ யுத்த காண்டத்தில் பொருந்தும். மனனகாலத்திலுள்ள மநீஷையே அகண்டாகாரவ்ருத்தியாகவும், அதுவே நிர்விகல்ப ஸமாதிவ்ருத்தியாகவும் ஆகின்றதென்பது சாஸ்திர ஸித்தாந்தமாகும்.

அநர்த்தகாரிகளான ஸர்வ அநாத்மவ்ருத்திகளுக்கும் ஆஸ்ரயம் அஞ்ஞானமே. கடலும், அதன் மத்தியில் உள்ள வீரமாஹேந்திரபுரமும், அதில் வஸிக்கும் சூரபத்மாதி ஸகல அஸுரர்களும், முறையே, அக்ஞானமும், ஆவரண விக்ஷேபசக்திகளும், அவற்ருலாய அநாத்ம வ்ருத்திகளுமே யாவர்.

"மாயையும் மாயாகார்யங்களும் ஸதஸத் விலக்ஷண அநிர்வசனீய வடிவ மித்யை" யென்று நன்கறிதலே சூராதியஸுரர்களின் மர்மங்களைப் பூராயமாய் அறிதலாகும்.

ராமாயணத்தில் ஸுந்தரகாண்டத்தில் ஹநுமான் தூது சென்றதத்துவமும், பாரதத்தில் ஸ்ரீ கிருஷ்ணபகவான் தூதுசென்றதத்துவமும், மற்றும் இதர புராணாதிகளில் எங்கே எங்கே தூதனுப்பப்பட்டனவோ அவற்றின் தத்துவமும் ஈண்டு ஒற்றுமைப்படுத்தி யறியத்தக்கது.

அநர்த்தங்களின் மித்தியாத்துவ நிச்சயரூப விசாரணையில் முனைந்த மநீஷாவடிவ வீரபாஹு, முதலில் பிரிதிவி, அப்பு, அக்கினி, வாயு, ஆகாசம் என்னும் பஞ்சபூதங்களும், மாயாகாரியமாகும் பேதத்தோற்றத்தினுல் ஏற்பட்டு விளங்குவதால் அவற்றைப் பிரவிலாபன திருஷ்டியால் அவ்வவற்றின் காரணங்களில் லயிப்பித்தான். இது,

**गन्धमादनमारुह्य ववृधे पर्वतेश्वरम् ।**
**ब्रह्माण्डभित्तिपर्यन्तं घोररूपो भयंकरः ॥**

वीरबाहुर्यथायोग्यं रूपं ततुं पयोनिधेः ।
गृहीत्वा लङ्घयामास सागराम्भः क्षणादयम् ॥

वियन्मार्गं यदा वेगात्प्रापायं साट्टहासतः ।
तदानीमेव तद्वायुसंकृष्टा इव पर्वताः ।
आगतास्तस्य मार्गं ते तूलजालमिवानिले ॥

अकम्पयत्तदा शीघ्रमब्धिरुल्लोलमण्डितः ।
शशाम बाडबो योऽग्निर्वाय्वाघातवशादयम् ॥

(இதன் பொருள்) "பர்வதங்களிற் சிறந்த கந்தமாதன பர்வதத்தின் மேலேறி நின்று பிரஹ்மாண்டசுவறுவரைக் கும் எட்டும்படியான பயங்கரமான கோரவடிவத்தை யெடுத்துக்கொண்டு, அட்டஹாஸம் செய்து, கடலைத் தாண்டி, ஆகாயமார்க்கத்திற் செல்லும் வேகத்தால், மலைக ளெல்லாம் விசைக்காற்றினல் இழுக்கப்பட்டுப், பெருங்கா ற்றில் பஞ்சுபறப்பதுபோல், அவரைப் பின்தொடர்ந்தன. அப்போது ஸமுத்திரம் கொந்தளித்தது. வீரபாஹு செல்லும் வேகத்தால் வடவாக்கினியும் அணைந்தது" என் னும் பிரமாணத்தால் நன்கு தெளிவாகின்றது. இங்ஙனம் பஞ்சபூதங்களையும் லயிப்பித்து வீரபாஹுவானவர் தா மஸ அஹங்காரத்திற்கு ஆஶ்ரயமாகும் வீரமாஹேந்த்ர புரியைக்கண்டு அதற்கு முன்னுள்ள லங்காபுரியில் பிரவே சித்தனர். அங்கே வீரஸிம்ஹன், யாளிமுகன் முதலிய அஸுரர்கள் யுத்தத்திற்குவர, வீரபாஹு அவர்களைக் கொன்று சூரபத்மனது ராஜதானியாகும் வீரமாஹேந்த்ர புரியை யடைந்து அங்கே சிறைப்பட்டு வருந்தும் ஜயந் தன் முதலிய தேவர்களைத் தேற்றிச் சூரனது கொலுமண்

டபத்தை யடைந்தனன். சூரன், வீரபாஹுவைப் பார்த்து "நீ யார்? ஏன் இங்கு வந்தனை?" என்று வினவ அதற்கு வீரபாஹு "அடா சூரபத்மனே! நான் முழுமுதற்கடவுளாம் அறுமுகச்சிவனால் அனுப்பப்பட்ட தூதன். 'நீ இக்கணமே உன் அஹங்காரத்தை விடுத்து, குற்றமற்ற தேவர்களைச் சிறையினின்றும் விட்டுவிடுவாய். இன்றேல், தாரகன், கிரௌஞ்சன் முதலியவர்கள் அடைந்த கதி யுனக்கும் நேரிடும். உன் குலத்தோடு நீ யழிவது நிச்சயம்' என்று அறிவித்துவரும்படி அடியேனது பெருமான் என்னை யுன்பால் அனுப்பியுள்ளான்" என்று கம்பீரமாகக் கூறினான்.

இதைக் கேட்டுச் சூரபத்மன் சர்ப்பம்போல் சீறித் தூதாக வந்த வீரனைக் கொல்லும்படி பல்லாயிரம் வெள்ள அஸுரசேனையை யனுப்பினான். வீரபாஹு எல்லா அஸுரர்களையும் ஒரு நொடிக்குள் கொன்று, அப் பட்டணத்தை யிடித்துத் தொம்ஸப்படுத்தித் திருச்செந்தூரடைந்து பெருமானிடம் சூரபத்மனது வரலாற்றைத் தெரிவித்தனன்.

இக்கதாபாகம் முழுமையும், மாயை, அவ்யக்தம், மஹத்தத்துவம், அஹங்காரம், தன்மாத்திரைகள், விஷயங்கள், ஞானேந்திரிய கர்மேந்திரியங்கள் முதலியவற்றின் ஸமுதாய வடிவ ஜகத்விசாரரூப தத்துவமாகவே யிருக்கின்றது. நடக்கக் கூடாதனவற்றை யெல்லாம் நடக்கும்படி காட்டுவது மாயையாகும். இது புத்தியினால் விசாரிக்கப்படாதவரையில் அதிரமணீயமாய் விளங்குவதாய்ப் புலப்படும். விசாரிக்கின் உடனே யொழிந்தது போலத் தோன்றி, விசாரணையை நிறுத்தினால் மறுபடியும் உள்ளதுபோல் தோன்றும். விவேகத்தோடுகூடிய விசாரத்

தாலும், தர்க்க அநுமான ஸஹித யுக்திகளாலும் கற்பித மாயாகார்யங்களின் ஸத்தியத்துவப் பிராந்தி நீங்கும். இந்த தத்துவத்தைத் தெரிவிப்பதுவே வீரபாஹுவால் வீரமாஹேந்திரபுரி தொம்ஸமாக்கப்பட்டதென்பது.

குஹக்கடவுள் தன்னோடு யுத்தத்திற்கு வரத்தயாராய் இருக்கும் செய்தியைத் தூதன் முகத்தால் அறிந்த சூரபத்மன் உடனே தனது தம்பிகள், புத்திரர்கள், மந்திரிகள் முதலியவர்களை யழைப்பித்து மந்த்ராலோசனை செய்யத் தொடங்கினன்.

விவேக புத்திவ்ருத்தியினல் நன்கு விமர்சிக்கப்பட்ட தன் மேல், அஹங்காரம், தன் இனத்துடன்சேர்ந்த காமம், குரோதம், மயக்கம், முதலியவற்றைச் சேர்த்துக்கொண்டு தன் வலிமையை ஸ்தாபிக்கப் பிரயத்தனப் படுதலே சூரன் மந்த்ராலோசனை செய்ததன் தத்துவமாகும்.

வஜ்ரபாஹுவாகும் தன்மகன் வீரபாஹுவால் கொல்லப்பட்டானென்பதை யறிந்து சூரன் மனம் மிகவும் நடுங்கிற்று.

வஜ்ரபாஹு='நான் என்றும் நிலைத்திருப்பே' னென்னும் மூடநம்பிக்கை. இது அஹங்காரத்தின் காரியம்.

இந்த மூடநம்பிக்கையானது புத்தியின் விவேசனத்தினல் ஒழிந்தவுடனே, வலிவு சற்றுக் குன்றிக் கோபமும் மோஹமும் பொங்கியெழ, அஹங்காரம் ஆலோசிக்கத் தொடங்கிற்று.

சூரன் மந்த்ராலோசனை

"நாம் தேவர்களைச் சிறையிட்ட காரணத்தால் இந்திரன் பரமசிவன்பால் முறையிட, அவனால் அளிக்கப்பட்ட ஒரு சிசு நம்மோடு யுத்தம் செய்து நம்மைக் கொன்று தேவர்களை விடுவிக்க வருகின்றதாம். இச்செய்தியை ஒரு தூதன் மூலமாய் அறிந்தோம்." என்று சூரபத்மன் மந்திரிமார்களையும், தம்பி தனயர்களையும் பார்த்துச் சொன்னான். அப்பொழுது தர்மகோபன் முதலிய மந்திரிமார்களும், பானுகோபன் முதலிய புத்திரர்களும் அவனுக்குப் பற்பல விதமாகத் தைரியங் கூறினார்கள்; ஆனால் ஸிம்ஹமுகன் (குரோதம்) மாத்திரம் சற்றுத் தீர்க்கமாய் யோஜித்துத் தன் தமையனை அஸுரேஶ்வரனைப் பார்த்து "அண்ணா! ஷண்முகனுகும் சிவகுமரனிடத்தில் உமக்கேன் இவ்வளவு அற்ப எண்ணம்? நீர் யாதொரு மஹாதேவனிட மிருந்து வரத்தைப் பெற்றீரோ அவர்தான் இவர்: உமக்கு ஏற்பட்ட வரத்தின்படி நூற்றெட்டு யுககாலமும் முடிந்து விட்டது. இப்பொழுது தேவர்களின் சிறையை மீட்டு அவரது கருணைக்குப் பாத்திரரானால், பிழைப்பீர். இன்றேல் பரமசிவனுரைத்தபடி சிவசக்தியினால் மரணமடைவது திண்ணம். குஹப்பெருமானது கையில் வேல் என்னும் சக்தி விளங்குகின்றது" என்று இடித்துக் கூறினான்.

இங்கே குரோதகுணமாகும் ஸிம்ஹமுகனுக்கு இத்தகைய விவேகம் எங்ஙனம் தோன்றிற்று? என்னும் ஆசங்கை யாவருக்கும் நேரிடலாம். அதற்குச் சமாதானமாவது:—

बिभेत्यस्मादिति क्रोधः எவை எதற்குப் பயப்படுமோ அதற்குக் குரோதமென்று பெயர். ஸாதாரணமாய்க் குரோதத்தைத் துர்க்குணங்களில் சேர்த்துக் கூறுவது வழக்கமாயினும், குணமாறுபாட்டால் அது துர்க்குணங்களின் மேல் குரோதமாகவும் மாறிவிடும். அப்பொழுது நற்குணமாக அது கருதப்படும். இங்ஙனம் மாறுபட்ட நிலையே தற்போது ஸிம்ஹமுகன் நிலையாமென்றறிதல் அவசியம்.

தன் தம்பியாகிய ஸிம்ஹமுகனது வார்த்தைகளைக் கேட்ட பின்னர், சூரபத்மன் "தம்பி! நினதபிப்பிராயப்படி எனது அழிவுகாலம் இதுவென நினைக்கில், யான் குஹனைத் தஞ்சமடைவதனால் யாது பயன்? என் அழிவைத் தடுக்கமுடியுமோ?" வென்று கூறினான்.

அதற்குச் சிங்கமுகன்,

कालाग्निरुद्रो भगवान् संहरत्येव शासनात् ।
सर्वं जगदिदं काले सुब्रह्मण्यस्य वेधसः ॥
कालः सृजति भूतानि कालः संहरति प्रजाः ।
सर्वे कालस्य वशगाः स कालोऽस्य वशे स्थितः ॥

(ஸம். கா. 35-அத்)

"அண்ணா! காலமென்னும் தத்துவம் வேலாயுதக் கடவுளின் கைவசத்துள்ளது. முன்பு நீர் சூலாயுதக் கடவுளிடத்து நெடிய ஆயுளும், செல்வமும் பெற்றவாறே இவரிடத்திலும் பெறலாம். அதற்காகப் பெருந்தவம் செய்யவேண்டியதில்லை. மனமாறத் துதித்தால் அவனே நம்முன் எழுந்தருளுவான்" என்று கூறினான்.

அதற்குச் சூரன் "தம்பி! நீ கூறியபடியே அவன் சக்தி வாய்ந்தவனுயின், அவனது வேலாயுதத்திஞல் யான் இறுதியடைதல் எனக்குப் பெருமையே யாகும்; பெருமை வாய்ப்பதோடு, யான் செய்த பாவமெல்லாமொழியும்; நல்லறிவு வாய்க்கும்; அன்றி, நான் கருதுகிறபடி அவன் ஒரு சிறுவனுயின், எனது அளவற்ற ஸேனையாலும், வரத்திஞற் பெற்ற சிறந்த ஆயுதங்களாலும், மாயவித்தைகளாலும் அவனை வெல்லுதல் திண்ணம்" என்று மறுமொழி பகர்ந்தனன். இதைக்கேட்டு ஸிம்ஹமுகன் "இவ்விரண்டு முடிவுகட்கு யான் இணங்குவேன்; அம்முருகனது பிரபாவத்தைத் தக்க காலத்தில் நினக்கு மறுபடியும் அறிவுறுத்துவேன்; அன்றி, யானும் போர் செய்வேன்" என்று கூறிமுடித்தான். மந்திரிகளும் ஸேனைத்தலைவர்களும் யுத்தத்திற்குத் தயாராஞர்கள்.

ஸ்கந்தன், சூரஸம்ஹாரத்தின் பொருட்டுத் திருச்செந்தூரினின்றும் புறப்பட்டு வீரமாஹேந்த்ரபுரத்திற்கருகில் ஹேமகூடமென்னும் ஒரு புதிய பட்டணத்தை யமைப்பித்து அதில் தங்கியிருந்தார். அப்பொழுது வீரபாஹு முதலிய நவவீரர்களும், நூற்றெட்டுத் தளபதிகளும், பிரஹ்மா விஷ்ணு முதலிய ஸகல தேவர்களும், முனிவர்களும், ஸித்தர்களும், பலவகைக் கணங்களும், வைதிகலௌகிகஸ்தோத்திரங்களால் குஹனைத் துதித்து வணங்க அவர் மஹாஸிம்ஹாஸனத்தில் வீற்றிருந்தனர்.

ஹேமகூடமேன்னும் புதிய பட்டணம்: வீரமாஹேந்த்ரபுரத்தைப்போலவே இதுவும் புதிதாய்க் கற்பிக்கப்பட்டதேயாகும். கற்பனையாயுள்ள மாயா புத்திரர்களை யொழித்

தற்கு அதே தன்மையுள்ள நிலை, வ்ருத்தி முதலியன அவ சிய மென்பது சாஸ்திரஸித்தாந்தமாகும்.

அயதார்த்த விசேஷம் — மாயை, மாயாகார்யங்களாகும் ஸகல அநர்த்தங்கள், சூரபத் மாதி அஸுரர்கள். வீரமாஹேந் திரபுரி (அவித்யா நகரம்).

யதார்த்தவிசேஷம்—தத்துவஞானம், பிரஹ்மவித்யை,ஸச் சிதாநந்த அகண்டாகாரவ்ருத்தி, நவவீரர்கள், தேவஸேனைகள். ஹேமகூடமென்னும் புதிய பட்ட ணம்( வித்யாபுரி ).

அயதார்த்த விசேஷத்திற்கும் யதார்த்த விசேஷத் திற்குந்தான் பரஸ்பர அநுகூலப்பிரதிகூலபாவமேற்படும். அவை யிரண்டுந்தான் அஸுரர்களும் தேவர்களும்.

இரண்டு ஸேனைகளும் யுத்தத்திற்குத் தயாராயின. இந்த காண்டத்தில் மனனம் முடிந்தது. நிதித்தியாஸன மாகும் யுத்த காண்டம் இனி ஆரம்பிக்கப்படுகின்றது.

வீரமாஹேந்திரகாண்ட தத்துவம்

முற்றிற்று.



# ஸ்ரீஸுப்ரஹ்மண்ய தத்துவம்.

## யுத்த காண்டம்

சூரபத்மனது ராஜதானியாகிய வீரமாஹேந்த்ரபுரத்திற்கு வடபால், தேவத்தச்சனுகிய விஸ்வகர்மாவால் நிர்மிக்கப்பட்ட ஹேமகூடமென்னும் பட்டணத்தில், குஹப்பெருமான், வீரபாஹு முதலிய வீரர்களாலும், பூதப்படைகளாலும் படைத் தலைவர்களாலும் சூழப்பட்டவராய் ஒரு திவ்யஸிம்ஹாஸனத்தில் அமர்ந்திருந்தனர். அப்பொழுது நாரதர் அங்கு வந்து பெருமானை வணங்கிச் சூரன் மகன் பாநுகோபன் யுத்த களத்திற்குப் புறப்பட்ட செய்தியைத் தெரிவித்து நின்றனர். உடனே குஹக்கடவுளும் வீரபாஹுவை யழைத்து வீரஸேனையோடும் பூதப்படைகளோடும் யுத்தத்திற்குச் செல்லும்படி ஆக்ஞாபித்து ஆசீர்வதித்து அனுப்பினுர்.

பாநுகோபனும் தந்தையின் கட்டளையின்படி பல்லாயிரம் அஸுரப்படைகளுடன் போர்க்களத்திற்கு வந்து தேவஸைன்யங்களையும் வீரபாகு முதலிய நவவீரர்களையும் தாக்கிப் பெரும்போர் விளைத்தனன்.

வீரபாஹுவும் தன் தம்பிகளாகிய வீரகேஸரிமுதலிய எண்மரோடு ஸிம்ஹன், உக்கிரன் முதலிய பூதப்படைத் தலைவருடன் அஸுரர்களைத் தாக்கிப் பிரசண்ட யுத்தம் செய்தனன். அஸுரஸேனைகள்யாவும் அழிந்தன. அப்பொழுது பாநுகோபன் மோஹனுஸ்திரத்தைப் பிரயோகிக்க,

அதனல் நவவீரர்களும், லக்ஷம் வீரர்களும், நூற்றெட்டு ஸேனைத்தலைவர்களும், பூதப்படைகளும் மயங்கி அப்படியே ஸ்தம்பித்து நின்றுவிட்டனர். இவ்விஷயத்தை ஸர்வக்ஞனை குஹப்பிரஹ்மம் தன்விடுதியிலிருந்தபடியே யுணர்ந்து அமோஹாஸ்த்ரத்தைப் பிரயோகிக்க அது மோஹனாஸ்த்ரத்தை யொழித்து மயக்கம் தெளியவைத்தது. பின்னர், வீரபாஹு தெளிவடைந்த மனத்தில் ஸ்ரீஷண்முகசிவத்தைத் தியானித்துப் பாநுகோபனைக் கொல்லத் தீர்மானித்துப் பாசுபதாஸ்த்ரத்தை யேவினன். பாசுபதாஸ்த்ரம் வேகமாய் வருவதை யுணர்ந்து பாநுகோபன் மிகவும் அஞ்சி, அதற்குப் பதில் அஸ்த்ரம் தன்னிடமில்லையே யென்று கலங்கி ரணகளத்தினின்றும் திரும்பித் தனதிருப்பிடம் சென்றனன்.

## இரண்டாநாள் யுத்தம்.

சிங்கமுகன் பிள்ளையாகிய அதிசூரன் ஸேனைத்தலைவனாய் இருக்கச், சூரபத்மனே இரண்டாம் நாள் யுத்தத்திற்கு வந்தனன். குஹக்கடவுளின்மேல் பிரஹ்மாஸ்த்ரம் முதலிய பல சிறந்த அஸ்திரங்களை யேவினன். அவற்றையெல்லாம் இறைவனது வேல் விழுங்கிவிட்டது. பின்னர், சூரன் மஹாபாசுபதாஸ்த்ரத்தை விட்டனன். அது குமரவேளின் திருக்கரத்திற் போய் அமர்ந்துவிட்டது. பின், சூரபத்மன் வீரபாஹு முதலிய நவவீரரோடு கடும்போர் புரிந்து அவர்களை யெல்லாம் வீழ்த்தினன். ஸேனைத்தலைவனாய் வந்த அதிசூரனுக்கும் பூதவீரரிலொருவனை உக்கிரனுக்கும் பெரும்போர் நடந்தது. அதிசூரன் விட்ட எல்லா அஸ்திரங்களையும் உக்கிரன் குஹசத்தியான மஹி

மையால் விழுங்கிவிட்டு அவனை யொரே அஸ்த்ரத்தால் கொன்றுவிட்டனன்.

தனது அஸ்த்ரங்கள் யாவும் பயனற்றொழிந்தமையைக் கண்டு சூரன் தயங்கி நிற்கும்போது, குமரவேள் ஓரஸ்த்ரத்தை விடுக்க, அது சூரபத்மனது கிரீடத்தை யுடைத்து மானபங்கம் செய்தது. அவ்வவமானத்தைப் பொறுக்கமாட்டாமல் சூரன் போர்க்களத்தினின்றும் நீங்கித் தன் பட்டணஞ் சேர்ந்தான். பெருமானது கடைக்கண் பார்வையால் வீரபாஹுவும் மற்ற ஸைன்யங்களும் மூர்ச்சை தெளிந்து எழுந்து பரமனை வணங்கி நின்றனர்.

## மூன்றுநாள் யுத்தம்.

வீரபுரந்தரன் தவிர மற்ற எழு தம்பிமார்களும், முன்னாள் சூரனோடு போர் புரிந்து மாண்டு கிடக்கும் செய்தியை வீரபாஹு தேவர் அறிந்து யமதர்மனுக்குச் சீட்டெழுதி, உடனே தன் தம்பிகள் யாவரையும் உயிர்த்தெழும்படி செய்து, ஸகல ஸைன்யங்கள் புடை சூழ யுத்தகளத்திற்கு வந்து சேர்ந்தனர்.

தனது தந்தையாகும் சூரன் மானபங்கப்பட்டுத் திரும்பிவந்துவிட்டதை யறிந்து பாநுகோபன் பாம்புபோற் சீறி யுத்தகளத்திற்கு வந்து வீரஸைன்யத்தையும் பூதப்படைகளையும் தொம்ஸப்படுத்தி, இறுதியில் மாயாஸ்த்ரத்தைப் பிரயோகித்தனன். அவ்வஸ்த்ரம் ஆயிர வெள்ளம் பூதங்களையும் இலக்ஷத்தொன்பது வீரர்களையும் மயக்கி அவர்களையெல்லாம் ஒருசேரத்திரட்டி ஆறு கடல்களுக்கும் அப்பாலுள்ள சுத்தநீர்க்கடலில் அமிழ்த்தி விட்டது. பானுகோப

னும் அடக்கமுடியாத பெருமகிழ்ச்சியுடன் தனதிருப்பிடஞ் சென்றனன். இச்செய்தியை நாரதர் குஹனுக்கு விண்ணப்பித்தனர். உடனே குஹசிவம் ஞானவேலை விடுக்க அது மாயாஸ்த்ரத்தை யொழித்து யாவரையும் அங்கிருந்து யுத்தரங்கத்திற்குக் கொண்டுவந்து சேர்த்தது. உடனே பாநுகோபனது தம்பி அக்கினிமுகன் வீரபாஹுவோடு யுத்தம் செய்துத் தனது உபாஸ்ய தேவதையாகும் காளியை யேவினன். உக்கிரகாளியும் வீரபாஹுவினிடத்தில் வந்து சாந்தமாய் மறைந்தனள்.

உடனே அக்கினிமுகன் வீரபாஹுவால் கொல்லப்பட்டான். பின்னர் சூரபத்மனது மக்கள் மூவ்வாயிரவர் யுத்தத்திற்கு வந்தனர். இவர்களை விஜயனென்னும் ஒரு வீரன் எதிர்த்து நெடுநேரம் சண்டையிட்டுக் கொன்றனன். அவர்கள் மறுபடியும் உயிர்த் தெழுந்தனர். இங்ஙனம் பன்முறை கொன்றும் அவர்கள் மறுபடியும் மறுபடியும் உயிர்த் தெழுவதைக் கண்டு திகைப்புற்று, மனத்தில் ஸ்ரீ ஷண்முகனைத் தியானிக்க, தக்ஷணமே ஸர்வ வியாபகனாகும் குஹன் அவன் முன்தோன்றி, அம் மூவாயிரம் பேரையும் ஒரே காலத்தில் ஒரே அஸ்த்ரத்தாற் கொல்லும்படி உளவு கூறி, ஒரு பைரவாஸ்த்ரத்தையும் அருளி மறைந்தனன். வீரசிரேஷ்டனான விஜயனும், அங்ஙனமே, அப்பைரவாஸ்த்ரத்தினால் அம்மூவாயிரவரையும் ஒரே ஸமயத்தில் முடித்து வெற்றி மாலை சூடினன்.

மூவாயிரவர் இறந்த செய்தியை யறிந்து சூரனது பிரதான மந்திரியாகிய தர்மகோபன் பல்லாயிரம் அஸுர ஸேனைகளோடு போர் முனையில் நின்றனன். அவனை வீரசிரேஷ்டனாகும் வீரபாஹுவானவர் எதிர்த்துக் கோரயுத்

தம் செய்தனர். தர்மகோபன் வீரபாஹுவின் மீது ஒரு வஜ்ராஸ்த்ரத்தை விட்டனன். எதிரி விடுத்த அவ்வஜ்ராஸ்த்ரத்தினலேயே வீரபாஹு தர்மகோபனை யடித்துக் கொன்று விட்டனர்.

பிறகு வீரபாஹுதேவர் பானுகோபனை யுத்தகளம் முழுமையும் தேடியும் காணமையால் வீரஸைன்யங்களோடு வீரமாஹேந்திரபுரத்திற்குச் சென்று அதைக் கொள்ளையிட்டுக் கோட்டையரண்களை யெல்லாம் நொறுக்கிக் கோபுரங்களை யுடைத்துத் தொம்ஸப்படுத்தி அதனை அக்கினி அஸ்த்ரத்திற்கு இரையாக்கினர்.

இதை யுணர்ந்து சூரனது மகன் ஹிரண்யன் என்பவன் மனங்கலங்கித் தன் தந்தைக்கு எவ்வளவோ புத்திமதிகள் கூறினன். சூரன் அவற்றை அசட்டை செய்ததால் ஹிரண்யன் யுத்தகளத்திற்கு வந்து வீரபாஹுவோடு எதிர்த்தனன். வீரபாஹு ஒரு அஸ்த்ரத்தை யவன் மேல்விடுக்க, அதன் முன் நிற்க ஆற்றது அவன் மீனுருக் கொண்டு கடலிற் போய் ஒளிந்தனன்.

### நான்காநாட் போர்.

### (பானுகோபன் வதை)

சென்றநாட் போரில் மாயாஸ்த்ரத்தைப் பிரயோகம் செய்துவிட்டுத் தன் விடுதி சேர்ந்ததுமுதல் யுத்தகளத்தில் நடந்த ஸகலவிருத்தாந்தங்களையும் தூதர் மூலமாய்க் கேள்விப்பட்டு மிகவும் வருந்தித் தன் தந்தையிடம் வந்து

**नत्वा च पितरं शूरं प्रोवाच वचनं तदा ॥**

**तातास्माभिरमी जेतुमशक्या बलिनो युधि ।**

भवानपि महावीर्यो भावितस्तैर्महाबलैः ॥
नाशितं बलमस्माकं स्कन्देन सुरपीडनात् ।
मृता इति न वच्मीदं भीत्याहं बहवोऽसुराः ॥
यदा संजीवनं तत्र भवेदिति महासुर ।
इदानीमपि तान्देवान् बद्धान्मुक्त्वा नमस्कृतः ॥
सुप्रसन्नो यदि गुहस्तदास्माकं स्थितिर्भवेत् ।"

(யுத்த. காண்-21 அத். $12\frac{1}{2}$—$16\frac{1}{2}$)

"தந்தையே! நம்மால் குஹேசனை வெல்லமுடியாது. இது நிச்சயம். ஆதலின் நாம் சிறையிட்டிருக்கும் தேவர்களை விட்டுவிட்டு வடிவேற் பெருமானைச் சரண்புகுதல் அவசியம். இன்றேல் நாம் அழிவது திண்ணம்" என்று கூறினான்.

இங்ஙனம் பாநுகோபனுரைத்ததைச் சூரன் செவியுற்று மைந்தனைப் பலவாறு இழித்துக்கூறி விறட்டினான். அப்பொழுது பாநுகோபன் தந்தையின் பிடிவாதகுணத்திற்குத் துக்கித்து "ஓ அப்பா! யான் உமது மனதைச் சோதிக்கவே இவ்வாறுரைத்தேன். என்னை மன்னிக்க வேண்டுகின்றேன்" என்று கூறிச் சண்டைக்குப் புறப்பட்டான். வீரபாஹுவுக்கும் பாநுகோபனுக்கும் பெரும் போர் நடந்தது. பாநுகோபன் தன்னை மாயையால் மறைத்துக் கொண்டு வீரபாகுவின் மேல் பல அஸ்த்ரங்களைத் தொடுத்தான். பிறகு வீரபாஹு அவன் செய்யும் மாயச் செய்கையை யறிந்து விஜ்ஞாநாஸ்த்ரத்தைப் பிரயோகிக்க அதன் மகிமையால் மறைப்பு நீங்க, பாநுகோபன் தேரின்மீது காணப்பட்டான். உடனே வீரபாகு மாஹேஶ்வர கட்கத்தா(கத்தியா)ல் பாநுகோபனது தலையை வெட்டிப் பூமியிற்

சாய்த்தனர். ஸூர்யனும் தன் பகைஞன் மாண்டதைக் கண்டு பேரானந்தமடைந்து மறைந்தனன்.

## ஐந்தாநாட் போர்.

## (ஸிம்ஹமுகன் வதை)

தனது ஜேஷ்டபுத்திரன் பாநுகோபன் இறந்த செய்தியைச் செவியுற்றுச் சூரன் மிகவும் துக்கப்பட்டுப் பூமியில் மூர்ச்சையாய் விழுந்தான்; அழுதான். தனக்குத் தானே தேறினன். உடனே தன் தம்பி ஸிம்ஹமுகனுக்குச் சொல்லியனுப்பினன். அச்சிங்கமுகனே, வடஸமுத்திரத்தில் ஆஸுர நகரத்தை யாள்பவனும், ஆயிரம் (சிங்க) முகங்களும், இரண்டாயிரங் கைகளும் படைத்தவனும், இப்பூமண்டலத்தை ஒரு சிறு பந்தெனத் தூக்கிவைக்கும் பேராற்றலுடையவனுமாவன். இவன், தமையன் கட்டளைப்படி அவன் முன் தோன்றி "அண்ணா! முந்தி யானுரைத்த வசனங்களை அலக்ஷியம்செய்து யாவரையும் பறிகொடுத்தீர். கேவலம் ஞானஸ்வரூபியான அக்குஹப் பெருமானை நீர் ஓரிளைஞனென நினைத்துப் பிடிவாதமாயிருந்ததால் இவ்வளவு பராபவ மேற்பட்டது; விநாசகாலத்தில் விபரீத புத்தி யேற்படுவது ஸஹஜமே. விதியை வெல்ல யாரால் முடியும்? நான் இப்படி யுரைப்பதில் என்ன பயன்? தங்களிஷ்டப்படி இப்பொழுதே யான் யுத்தத்திற்குச் செல்கின்றேன்" என்று கூறி யுத்தத்திற்குப் புறப்பட்டான். இது,

इति शूरवचः श्रुत्वा सिंहवक्त्रोऽब्रवीद्वचः ।
अनिशम्य वचो मे त्वं सर्वानेतानमारयः ॥

साक्षात्पराशिवं सत्यज्ञानानन्दस्वरूपिणम् ।
प्रोक्तवान् बालिशं तस्मादनुभूतं फलं त्वया ॥
न शक्यते विधिः सर्वैर्निवारयितुमप्यहो ।
मद्वचो भवतस्त्वासीद्विषमत्यन्तदाहकम् ॥
किमेतेनाधुनाहं तान्हत्वा सर्वान्त्रिपून् क्षणात् ।
आगत्य त्वन्मुखं भ्रातर्द्रक्ष्यामि न ततोऽन्यथा ॥

(யுத். கா. 23 அத்-27-30)

என்னும் பிரமாணத்தால் நன்கு அறியத் தக்கது.

சிங்கமுகன் யுத்தரங்கத்திற்கு வந்த செய்தியை யறிந்து லக்ஷத்தொன்பது வீரர்களும் மற்றஸேனைகளும் போர்க்களத்திற்கு வந்து அவனோடு கோரயுத்தம் செய்தனர். அப்பொழுது ஸிம்ஹமுகன் ஒரு மாயாபாசத்தை விட்டனன். அம்மாயாபாசமானது ஆயிரவெள்ளம் பூதஸேனைகளையும் இலக்கரையும், நவவீரரையும் பிணித்துக்கொண்டு ஒரு க்ஷணத்தில் ஸப்த ஸமுத்திரங்களுக்கும் அப்பாலுள்ள உதயகிரியிற் கொண்டு சேர்த்து விட்டது. எஞ்சி நின்ற பூதவீரகணங்களைச் சிங்கமுகன் தனது ஆயிரம் வாய்களையும் திறந்துக் கதலிப்பழம்போலுட் கொண்டான். இதை இறைவன் கண்டு ஒரு புன்முறுவல் செய்து ஒரு வஜ்ராயுதத்தை விட்டனன். அது அஸுரன் மார்பைப் பிளந்தது. அவனால் விழுங்குண்ட பூதர் வெளிப்பட்டனர். பெருமான் விடுத்த மற்றொரு பாணமானது உதயகிரியை யண்மி மாயா பாசத்தை நாசஞ் செய்து வீரபாகு முதலிய யாவரையும் தெளிவித்து முருகன் திருமுன் சேர்ப்பித்தது. பின் குமரன் அவ்

வஸுரனுடைய கரங்களையும் சிரங்களையும் அறுத்துத் தள்ளினான். அத்தனைமுறையும் அவை ஓயாது வளர்ந் தன. பின் சிற்பரன் ஒரு ஹுங்காரம் செய்து அதட் டிய வளவில் அவை முளைத் தெழாது நாசமாயின. இப் பொழுது சிங்கமுகன் ஒரு சிரத்தோடும் இரண்டுகரங் களோடும் விளங்கினான். அவனைப் பரமன் விடுத்த ஒரு வஜ்ஜிரவாளியானது கொன்று அவனுயிரை யமலோகம் சேர்ப்பித்தது.

தேவர்கள் மலர்மாரி சொரிந்து பரமனைப் பலவாறு துதித்து நின்றனர்.

## ஆறுவதுநாள் யுத்தம்.

### (சூரபத்மன் வதை)

தன் மைந்தர்யாவரும், தம்பியும் இறந்த செய்தி யைச் செவியுற்ற சூரபத்மன், கண்களில் நீர் பெருக்கி யழுதுச் சினங்கொண்டு, சீறி யெழுந்து, பெருங்கடலை யொத்த சதுரங்க சேனையோடு தானே யுத்தத்திற்குப் புறப்பட்டான்.

சென்ற ஐந்து நாள் யுத்தத்தில் எண்ணிலடங்காத அஸுர ஸேனை வெள்ளங்கள் இறந்து பட்டதனால், யுத்த களத்தில் ஒருவர் அடிவைத்து நிற்கவும் இடமின்றிப் பிண ங்கள் மலைபோல் குவிந்திருந்தன. இவற்றைக் கந்தன் தன் நெற்றி விழியால் நோக்கி எரித்துச் சாம்பராக்கினான். சூரன் ஷண்முகன் முன் நின்று, பல அஸ்த்ரங்களைத் தொடுத்தான். அவை குமரவேளின் புயாசலங்களிற்பட்டுப் பொடிப் பொடியாயின. பல்லாயிர வெள்ளம் அஸுரஸை ன்யங்கள் குஹப்பெருமானது ஹுங்காரத்தால் எரிந்து சாம்பராயின. பின் சூரனும் குஹனும் பல பிரஹ்மாண்

டங்கள் தோறும் சென்று யுத்தம் செய்தனர். சூரன் வீர மஹேந்திரத்திற்கு ஓடிவிட்டனன். அவனைப் பரமன் பின்தொடர்ந்து அங்கே சென்று ஆங்குள்ள ஸேனைகளை யெல்லாம் ஒரு புன்னகையால் எரித்து நாசமாக்கினன். பின் சூரன் தன் தாயாகிய மாயையைத் தருவித்து அவள் தெரிவித்தபடி இந்திரலோகத்தேரை யனுப்பி ஸுதாமந்தரபர்வத மென்னும் ம்ருதஸஞ்சீவிமலையைத் தருவித்தனன். அதனால், போர்க்களத்தில் மாண்டுபோன புத்திர, மித்திர ஸகோதரர்கள் யாவரும், ஸேனைத்திரள்களோடு உயிர்த்தெழுந்தனர். தேவ ஸைன்யங்கள் யாவும் பயந்து பக்ஷி முதலிய பல வடிவங்களெடுத்தோடின. இதை யறிந்த குஹன் பாசுபதாஸ்த்ரத்தைப் பிரயோகித்து ஒரு நொடிக்குள் ஸஞ்சீவிமலையைத் தூளாக்கி, அவுணர் கோன் ஒருவன் நீங்கலாக யாவரையும் நீறுக்கினன். பரமசிவனுற் சூரனுக்குத் தரப்பட்டுள்ள அந்த இந்திரஜாலத்தேரானது அஸுரேசன் கட்டளைப்படி, நவவீரரையும், கணங்களையும் மயக்கித் தூக்கிக்கொண்டுபோய் அண்டகோளத்தில் வைத்துவிட்டது. இதை யறிந்த சரவணபவன் ஒரு அஸ்த்ரத்தை யனுப்பி யாவரையும் அத்தேருடன் தமதருகில் வருமாறு செய்து கொண்டனர். பின் சூரன் சக்கிரவாளப்பக்ஷி வடிவங்கொண்டு கொடுமை யிழைத்தனன். சிவகுமாரனும் இரதம் விட்டிறங்கி, மயிலுருக்கொண்டு எதிர் நிற்கும் இந்திரன் மேல் ஆரோகணித்துப் புள் வடிவத்தோடுள்ள அஸுரேஶனை வாள் கொண்டு வெட்டினர். பின்னர் அச்சூரன் பஞ்சபூதங்களாகவும் பல தேவர்களாகவும் நின்று போர்புரிந்தனன். ஸ்வாமியும் அவைகளை யெல்லாம் ஒடுக்கி அச்சூரற்குத் தமது பாரமேஶ்வர (விஶ்வ) ரூபத்தைக் காட்டினன்.

शूरस्तु तादृशं रूपं दृष्ट्वा दैववशादयम् ।
चित्ते संचिन्तयामास प्राप्य ज्ञानं गुहस्य सः ॥

हत्वाऽऽसुरीमयं सेनामन्यैरपि मया सह ।
कृत्वा युद्धं महाघोरमिन्द्रलोकरथं पुनः ॥

कृत्वा स्ववशगं मायां मत्कृतां च विनाशयन् ।
अनन्यसदृशं रूपं ससुरासुरमानुषम् ॥

अनन्तकोटिब्रह्माण्डकृतावासमदर्शयत् ।
तमेनं मूढबुद्ध्याहं ज्ञातवानस्मि बालिशम् ॥

अयमेव महादेवः परमात्मा स्वयं शिवः ।
पुत्रसिंहमुखावेवमुक्तवन्तौ पुरा किल ॥

न श्रुतं तद्वचोऽस्माभिर्मत्तैरैश्वर्यमानिभिः ।
पादरोमसु दृष्टानि तस्याण्डान्यखिलानि मे ॥

आपादमस्तकं नेत्रैरस्य रूपं मयेक्षितम् ।
अनेककालं लसति सौन्दर्यं तु नवं नवम् ॥

अलंबुद्धिर्न कुरुतेतरां प्रीतिस्तु जायते ।
तपोमहिम्ना तस्यैतं दृष्टवानस्मि विग्रहम् ॥

कृपया मयि देवोऽयं युद्धायात्र समागतः ।
जायते च तरां भक्तिरेतस्मिन्नन्तरात्मनि ॥

प्रदक्षिणनमस्कारस्तोत्रेषु च मनो मम ।
परिस्फुरति मे नेत्रं दक्षिणं बाहुरप्यहो ॥

ज्ञात्वा शत्रुसहायार्थमागतं तं मनो मम ।
परिद्रवति कोपेन परिप्लुष्टं तरामिह ॥

हन्तुं यदि च देवोऽयमागतो मां रणस्थलम् ।
कोऽतिभारस्तदा तस्य लीलामेव चकार सः ॥

अदर्शयन्महादेवो देवतानां च बन्धनैः ।
न युक्तमिति मां केचिदूचिरे ज्ञानमोहिताः ॥

अनेन यस्मादयुधं वीर्यं कीर्तिस्ततस्तराम् ।
मुक्त्वा देवान् प्रणम्यैनं स्थितं चेत्तत्कुतो मम ॥

एवमादि विचार्यात्र मनसास्मिन् स्थिते सति ।
उपसंहृत्य विश्वात्मविश्वरूपं वपुः पुनः ॥

ज्ञानं च तस्य प्राचीनं स्वरूपमग्रहीद्द्विजाः ।
विज्ञानेऽपहृते दैत्यः कोपेन परिपीडितः ॥

(யுத்த--35—16-32)

(இதன் பொருள்): சூரனும், அப்போது தெய்வவசத்தினால் ஸ்ரீகுஹனுடைய திவ்யரூபத்தைத் தரிசித்தமாத்திரத்தினால், நல்ல அறிவையடைந்து "ஆஹா! இவர் அஸுர ஸேனைகளை யெல்லாம் நாசமாக்கி, என்னோடும் மஹா கோரயுத்தம் செய்து, இந்திரலோகத் தேரையும் தமது வசமாக்கிக்கொண்டு, என்னாலியற்றப்பட்ட ஸகலமாயச் செயல்களையும் நாசம் செய்துவிட்டுத் தேவாஸுர நரர்களுக் குறைவிடமான அளவற்ற பிரஹ்மாண்டங்களும் தன் வடிவத்தில் விளங்கும் ஒரு நிகரற்ற திருவுருவத்தைக்

காட்டியருளினூரல்லவா? இத்தகைய பரமாத்மாவை என் மூடபுத்தியினுல் ஒரு சிறுவனென்றெண்ணினேனே! இவரே மஹாதேவனும் பரமாத்மாவுமான ஸாக்ஷாத் பரமேஸ்வரன். முந்தியே எனது புத்திரரும் ஸகோதரனும் இவ்வாறுரைத்தனர். மதோன்மத்தனுயும், ஐஸ்வர்யத்தால் கர்வங் கொண்டவனுயுமுள்ள யான் அவர்களது வார்த்தைகளைக் கேளாமற் போய்விட்டேனே. ஆஹா! என்ன ஆச்சரியம்!! நான் அரசாக்ஷிபுரிந்த ஆயிரத் தெட்டண்டங்களும் இவரது பாதத்திலுள்ள மயிர்களிற் காணப்படுகின்றனவே!!! உச்சி முதல் உள்ளங்கால் வரையில் இவரது அழகு பார்க்கப்பார்க்கப் புதிது புதிதாகக் காணப்படுகின்றது. எவ்வளவுநேரம் பார்த்துக் கொண்டிருந்தாலும் போதுமென்ற திருப்தியுண்டாகவில்லை. மேலுக்கு மேல் பார்க்கவேண்டுமென்ற ஆசையே அதிகரிக்கின்றது. ஏதோ என் தவப்பயனுல்தான் இவரது உருவத்தைத் தரிசிக்க நேர்ந்தது.

இவர், என் மீதுள்ள கருணையால்தான் இங்கு யுத்தத்திற்காக வந்தருளினூர். என் மனதில் மேலுக்கு மேல் பக்தி பெருகுகின்றது. இவரைப் பிரதக்ஷிணஞ் செய்யவும் நமஸ்கரித்துத் துதிக்கவும் என் மனம் நாடுகின்றது. ஓகோ! வலக்கண்ணும் வலக்கையும் துடிக்கின்றனவே. இவர் எனது சத்ருக்களுக்குதவியாய் வந்திருப்பதை யறிந்திருந்தும், கோபத்தினுல் துடித்த என் மனம் இப்போது உருகுகின்றது. என்னைக்கொல்ல இவர் நினைத்து யுத்தகளத்தில் நின்றூல் இவருக்கு என்ன பிரயாசை. இவர் செய்துள்ள ஸகல செய்கைகளும் திருவிளையாடல்களேயாகும். தேவர்களைச் சிறைசெய்ததால்தான் இவருடைய இந்தஸ்வரூபத்தைக் காணக்கிடைத்தது. அஞ்ஞானத்தினுல் மதி

மயங்கின சிலர் 'தேவரைச் சிறைசெய்தது சரியல்ல' வென்று கூறினரே! இவரோடு சண்டை செய்ததால்தான் எனக்கு மிகுந்த பராக்கிரமும் கீர்த்தியுமுண்டாயின.

தேவர்களை விட்டுவிட்டு நானும் இவரைச் சரணமடைந்திருந்தால் எனக்கிவையெல்லாம் எங்ஙனமுண்டாகும்?'' என்று இவ்வாறு சூரன் தன்மனதில் ஆலோசிக்கலானான். ஷண்முகன் தனது விஸ்வரூபத்தை மறைத்துக் கொண்டதோடு சூரனது நல்லறிவையும் அபகரித்துக் கொண்டனர்.

உடனே சூரன் பாம்புபோற் சீறி ஒரு பேரிருளைப் பரப்பி அதனுள் மறைந்துநின்று பலகோடி சிரங்களையும் கரங்களையும் உடைய வடிவந்தாங்கித் தேவஸேனைகளை விழுங்க வெண்ணியதை யறிந்த குஹேசன் தனது வேலாயுதத்தை விட்டனன்.

அந்த வேலாயுதமானது கோடிஸூர்யப் பிரகாசத்தோடு புறப்பட்டுவந்து சூரனது மாயச்சேஷ்டைகளையெல்லாம் நாசமாக்கியபின்னும், அவன் கடலிற் பாய்ந்து அதன்கண் நின்றுகொண்டு யாவற்றையும் தன்னிலடக்கிக் கொள்ளும் ஆற்றலுள்ள சிறந்த மாமரமாய் நின்றான். அம்மரத்தையும் அவ்வேல் இரு கூறாய்க் கிழித்தது. பின்னர் சூரபத்மன் தன் நிஜரூபத்தோடு கரத்தில் ஒரு வாளேந்தி யெதிர்த்து வந்தபோது, அவ்வடிவேல் அவனது மார்பிற்பாய்ந்து அவனை யிருகூறாக்கியது. சூரனது உடற் கூறுகளிரண்டும் ஒன்று மயிலாகவும் மற்றொன்று சேவலாகவும் நின்று அவை முறையே குஹனுக்கு வாஹனமாகவும், கொடியாகவும் ஆயின.

சூரன் இறந்ததைக் கண்டு திருமால்முதலிய தேவர்களும் இந்திரனும் மற்றவர்களும் பெருமகிழ்ச்சிகொண்டு

மலர்மாரி சொரிந்து சரவணபவனைப் பலவாறு பன்முறை துதித்து நின்றனர்.

குறிப்பு :— யுத்தகாண்டமாகுமிதன் கதாஸங்கிரஹம் உபோத்காதத்தில் கூறப்பட்டிருப்பினும், தொடர்ச்சியின் இயைபுபற்றிச் சிறிது விரிவாய் ஈண்டும் கூறப்பட்டது. ஆதலின், இது கூறியது கூறலென்னும் தோஷத்தின்பாற் படாதென்பதறிதற்பாலது.

## யுத்தகாண்டத்தின் தத்துவம்

இந்த காண்டத்தின் தத்துவம் நிதித்தியாஸனமாகு மென்று முன் (ஆஸுரகாண்ட அவதாரிகை, பக்கம் 97 ல்) கூறப்பட்டுள்ளது. இதில் ஜீவகுணங்களாகும் ஸகல அநாத்மவ்ருத்திகளும் அஹங்கார மென்னும் ஜீவபாவமும் அகண்டாகார ஆத்மகோசரவ்ருத்தியாலும் தத்துவஞான த்தாலும் நாசமாகின்றன.

சித்தசுத்தியும், மனவொருமையுமுடைய முமுக்ஷு வாகும் இந்திரனது அந்தக்கரணமாகும் யுத்த களத்தில் இந்த சுபாசுபவாஸனரூப தேவாஸுர யுத்தம் நடந்துள்ளதென்பதை நன்கு ஞாபகத்தில் வைத்துக் கொள்வத வசியம்.

சூரன், சூரனது பந்துவர்க்கங்கள், அவனது ஸேனைகள் முதலிய யாவும் ஆஸுர துர்க்குணங்களும், அநாத்மவ்ருத்திகளுமா மென்றும், வீரபாஹு முதலிய நவவீரர், பூதகணங்கள், வீரஸேனைகள் முதலிய யாவும் தைவிக நற்குணங்களும், ஆத்மீய வ்ருத்திகளுமாமென்றும் அறியத்தக்கன. தேவாஸுரஸம்பத்திகளாகும் இவை இந்திரனது

அந்தக்கரண தர்மங்களே யாகும். இந்திரனது கூடஸ்த ஸ்வரூப பிரத்தியகாத்மாவே ஸ்ரீ குஹப் பிரஹ்மமாம். அநாத்மவ்ருத்திகளின் அழிவுகாரணமாக ஆத்மீயவ்ருத்திகளின் வளர்ச்சியே நிதித்தியாஸன லக்ஷணமல்லவா? இந்நிதித்தியாஸனத்தினுல்தான் அபரோக்ஷ ஞான மேற்படும். இதனுற்றுன் ஜீவபாவமாகும் சோகம் ஒழியும். இந்திரனுடைய (கற்பித) சோக நிவர்த்தியின் பொருட்டன்றோ இந்த யுத்தம் நடைபெறுவது? இந்திரனது துக்கத்திற்குக் காரணமான ஜீவபாவ அஹந்தாவடிவ சூரனது நாசம் ஆறுநாள் யுத்தத்தில் ஏற்பட்டது. ஒவ்வொரு நாள் யுத்தத்திலும் சிற்சில அநாத்மவ்ருத்திகள் நாசமாய்ச் சிற்சில ஆத்மீயவ்ருத்திகள் திடப்பட்டன.

முதனுள் யுத்தத்தில், "ஆந்தர நிர்விகல்பஸமாதிவ்ருத்திவடிவ வீரபாஹுவும், ஆத்மகோசரவ்ருத்திஸ்வரூப வீரகேஸரி முதலிய மற்றவீரர் எண்மரும் ஆவரணவடிவ பாநுகோபனது மோஹத்திற்குட்பட்டு மயங்கிக் கட்டுண்ணல் தகுதியாகுமோ" என்னும் ஆசங்கை ஏற்படக்கூடும். இதற்குச் சமாதானமாவது:—

ஜீவபாவதற்போதமுள்ளவரை மோஹவ்ருத்தியுண்டு. தற்போத(அஹங்கார)ம் ஒழிந்தால் ஜீவஸம்பந்தமான ஸகல துர்க்குணங்களும் ஒழியும்.

அத்தியஸ்த அஹங்காரத்தின் வலிமை குறையக் குறைய, அநர்த்தகாரிகளான துர்க்குணங்களும் நாசமாய்க் கொண்டேவரும். இந்த ரஹஸ்யத்தைத்தான் இந்தயுத்தம் தெரிவிக்கின்றது. தேவாஸுரஸம்பத்திகளாகும் ஆத்மாநாத்மவ்ருத்திகள் இரண்டும் ஸமஸத்தாகமாய் விளங்கிப் பரஸ்பரம் அநுகூலப்பிரதிகூலதர்மத்தோடு கூடி விளங்குவனவாகும்.

## அஸுரர்களின் தத்துவம்.

சூரபத்மன் —அஹங்கார ஜீவபோதம்.
ஸிம்ஹமுகன் —குரோதம்.
அதிசூரன் —பாஹ்யதிருஷ்டி, விஷயாபிலாஷை. (கஷாயம்)
பாநுகோபன் —அபாநுபாதக ஆவரணம் (விபரீதபாவனை)
ஹிரண்யன் —ஸங்கல்பம், சாஞ்சல்யம், விக்ஷேபம்.
(3 சிரங்களுடையவன்)
அக்னிமுகன் —துக்கத்தைத் தரக்கூடிய கோரவ்ருத்தி.
தர்மகோபன் —துராசாரம்; அதர்மம்.
மூவ்வாயிரவர் —அக்ஞானம், அசுத்தமனம், துர்வாஸனைகள் இவற்றாலேற்படும் அநேக பாப எண்ணங்கள். லய, விக்ஷேப, ரஸாஸ்வாத வடிவினர் முதலியன.

## தேவர்களின் தத்துவம்.

உக்கிரன் —வைராக்கியம்.
விஜயன் —விவேகம்—(ஆத்மவிசாரம்)
வீரபாஹு —ஆத்மகோசர அகண்டாகாரவ்ருத்தி
குஹன் —விசேஷப் பிரஹ்மாபின்ன பிரத்தியகாத்மா; ஞானதேசிகன்; பரமேஸ்வரன்.

முதல்நாள் யுத்தத்தின் தத்துவம்: — விபரீதபாவனா நாச நிதித்யாஸனமாகும். ஆத்மஞானத்தின் அபரோக்ஷத்திற்குத் தடையாயுள்ளது விபரீதவடிவ அபாநாபாதக, என்றால் "எனக்கு விளங்கவில்லை" யென்று தோற்றுவிக்

கும், ஆவரணமே விபரீத பாவனையாகும். ஆதலாற்றான் இந்த யுத்தம் பாநுகோபனால் ஆரம்பிக்கப் படுகின்றது. "விளங்கவில்லை" யென்னும் மறைப்புவடிவ பாநுகோபன் அகண்டாகார ஆத்மகோசரவ்ருத்திவடிவ வீரபாஹுவால் நான்காநாள்யுத்தத்தில் கொல்லப்பட்டது விமர்சிக்கத் தக்கது. ஏன் பாநுகோபனைக்கொல்ல நான்கு நாள் வேண்டியிருந்தது? எனின், அபாநுபாதக ஆவரணவடிவ விபரீதபாவனை லயவிக்ஷேபாதிதடைகளுள்ளவரை நாசமாகாது. இரண்டாநாள் யுத்தத்தில் கஷாயஸ்வரூப அதிசூரனும், மூன்றாநாள் யுத்தத்தில் லய, விக்ஷேப, ரஸாஸ்வாதவடிவ மூவ்வாயிரவரும் நாசமாயினர். பின்னரே (நான்காம் நாள்) அபாநுவரணமறைப்புவடிவ பாநுகோபனது நாசம் தகும்.

இரண்டாம் நாள் யுத்தம். இதில் அசுத்த அஹங்காரரூப சூரனால் ஆத்மகோசரவ்ருத்திவடிவ நவவீரரும் லயரூபநாசத்தைப் பெற்றனர். இது தகுதியோவெனின் தகுதியேயாகும். அநாத்மபாஹ்ய நாமரூபதிருஷ்டிவடிவ அதிசூரனைச் சேனைத்தலைவனாப் பெற்றுச் சூரனென்னும் அஹங்காரம் மிக்க வலிமையோடு போர்புரியும்போது ஆத்மநாட்டமே ஏற்படுவதற்கு நியாயமில்லை. ஆதலாற்றான் நவவீரர்களின் லயம் ஏற்பட்டது. பாஹ்யதிருஷ்டிவடிவ அதிசூரனுடைய நாசமே அசுத்த அஹங்காரவடிவ சூரனது மானபங்கமாகும். இதனால் அசுத்த அஹங்காரத்தின் வலிமை சற்று குறைந்தது.

மூன்றாம் நாள் யுத்தம். குருஸ்வரூப குஹனது கடாக்ஷத்தாலும், நாமரூபாத்மக பாஹ்யதிருஷ்டியின் நாசத்தாலும், அஸ்திபாதிப்ரியரூப அகண்டாகாரவ்ருத்தி

வடிவ வீரபாஹு எழுந்தான். ஸஜாதீய ஆத்மீயவ்ருத்திகளும் கிளம்பின.

பாநுகோபனது மாயாஸ்த்ரத்தால் தேவஸைன்யங்கள் யாவும் மயங்கின. அப்பியாஸதார்ட்டிய மின்மையின் அவித்யை வலுத்து நின்றது. ஸத்குருநாதராம் குஹப்பெருமானது ஞானவேல் அம்மாயையை யொழித்தது.

அக்னிமுகன் = கோரவ்ருத்தி
தர்மகோபன் = அதர்மம்
} இவர்கள் இருவரும் வீரபாஹு (அகண்டஞானம்) வாலும்,

முவ்வாயிரவர் = (லய விக்ஷேப ரஸாஸ்வாத வடிவினரும், அஞ்ஞான, அசுத்தமன, துர்வாஸனைகளாலேற்படும் பாப எண்ணங்கள் வடிவினருமாகிய) இவர் ஆத்மவிசாரவடிவ விவேகமாகும் விஜயனாலும் கொல்லப்பட்டனர்.

தடைகள் ஒழியவே ஆவரணவடிவ பாநுகோபன் காணப்படவேயில்லை. உடனே ஆத்மகோசரவ்ருத்திகள் மறைப்பின்காரணமான அவித்யாபுரத்தை நாசம்செய்து ஞானக்னியால் தஹிப்பித்தன.

உடனே ஸங்கல்ப விகல்பாத்மகமாயும், அதிசஞ்சலஸ்வபாவமாயும், விக்ஷேபதோஷ வடிவமாயும் உள்ள ஹிரண்யன் யுத்தத்திற்கு வந்தான். இவனுள்ளவரை மறைப்பின் நாசமேற்படாதன்றோ? ஹிரண்யன் யுத்தத்திற்கு வருமுன் தந்தைக்கு நற்புத்திகள் புகட்டியதாகக் கதையுணர்த்துகின்றது. அவித்யாபுரத்தின் தாத்காலிக நாசத்தால் சஞ்சலஸ்வபாவமுடைய ஹிரண்யனுக்குச் சற்று விவேகமுண்டாயிற்றென்பதே இதன் தத்துவமாகும்.

இவன் மீனுருவந்தாங்கிக் கடலில் ஒளித்துக்கொண்டனன். மீனின் தத்துவம் மனதேயாகும். ஒளிந்ததன் தத்துவம் அசுத்தங்களின் லயம், அதாவது மனோநாசம், ஆகும்.

நான்காநாள் யுத்தம். லயவிக்ஷேபாதி நான்கு தடைகளும் நாசமாயினமையின், அபானுபாதக ஆவரணரூப பாநுகோபனின் வலிமை குன்றியது. கற்பித அஹங்காராத்மக சூரனுகும் தன் தந்தைக்குப் புத்திகள் கூறினன். தமதழிவை ஸூசிப்பித்தான். பின்னர், வீரபாகுவின் விஞ்ஞானத்தால் அஸுரனது மறைப்பின் செயல்களும் மாஹேஸ்வர (ஞான) கட்கத்தால் பாநுகோபவடிவ ஆவரணமும் நாசமாயின.

ஐந்தாநாள் யுத்தம்: ஸிம்ஹமுகனுகும் குரோதத்தின் நாசம் இன்றுண்டாயிற்று. ரோஷமே குரோதமா மென்பது பிரஸித்தம். "रुष्यते अनेनेति रोषः रुष हिंसायां" என்னும் பிரமாணத்தால், ஆத்மஸ்வரூபத்தை ஹிம்ஸிப்பதே ரோஷ குணத்தின் தர்மமாகுமென்பது புலப்படுகின்றது. இந்த ரோஷமுள்ளவரை அஹங்கார அசுத்த ஜீவபாவம் ஒழியாது. ஐந்தா நாள் யுத்தத்தில், ஸத்குருஸ்வரூப குஹப் பெருமானுல், நிரந்தர ஆத்மஸ்வரூபாநுஸந்தான வடிவ வஜ்ராயுதத்தால், ரோஷ மென்னும் குரோதரூப ஸிம்ஹமுகன் நாசமானுன் ஹிம்ஸையே ஸிம்ஹமாய் மாறியது எழுத்துக்களின் மாறுபாட்டாலென்பது சாஸ்திரஸித்தமாம். ஸஜாதீய துர்வ்ருத்திகளின் நாசத்தால்; குரோதமானது துர்க்குண அநாத்மவ்ருத்தியாகும் அசுத்த அஹங்காரத்தைக் கோவித்தது. இதுதான் ஸிம்ஹமுகன் சூரனுக்கு நற்புத்தி புகன்ற கதையின் தத்துவமாகும்

ஆருவது நாள் யுத்தம்: ஸ்கந்த ஷஷ்டியாகும் இன்று அசுத்த அஹங்காரமாகும் ஜீவபாவ சூரனது ஸம்ஹாரமானது விசேஷப்பிரஹ்ம வடிவ ஸுப்பிரஹ்மண்யராலாயிற்று. இந்த நாளின் யுத்தத்தில் அஹங்காரத்தின் வலிமை நன்கு விளக்கப்பட்டதோடு தத்துவஞானத்தினுல் மாயா காரியங்களும் மாயையும் நாசமாகுமென்னும் உண்மையும் நன்கு பிரதர்சிக்கப்பட்டது. அசுத்தத் தன்மை நீங்கியதும், அச்சூரனே பராஹந்தா வடிவினனுய்க் குஹேஸனது பாரமேஸ்வரவிராட்ரூபத்தைத் தரிசித்து மறுபடியும் அதிஸூக்ஷ்மமாயுள்ள அஹங்கார வாஸனையால் மூலாஞ் ஞானம் தன்னை மறைக்க ஸர்வாநர்த்தங்களுக்கும் பீஜமாகும் ஸம்ஸாரவிருக்ஷமாய் நின்ருன். அதை ஞானவேல் நாசமாக்கியது.

## தத்துவ ஸாராம்சம்.

சூரபத்மன் = ஆணவமலம்; அஹங்காரம். சிங்கமுகன் = குரோதம்; கன்மமலம். தாரகன் = மாயாமலம்; மயக்கம்.

இம்மூன்றசுரர்களின் புத்திரமித்ரகணங்கள் = மும்மல காரியங்கள்; குஹன் = ஸச்சிதாநந்த விசேஷப்பிரஹ்மம்: பரமாசாரியரெனினுமாம்; பூதஸைன்யங்கள் = சிவதத்துவ வ்ருத்திகள்; வீரமாஹேந்திரம் = அவித்யாபுரம். வஜ்ராயுதம் = வீரஞானசக்தி; வேல் = ஸ்வயம்பிரகாச அகண்ட ஞானம்; மயில் = அதோமாயை; சேவல் = ஊர்த்துவ மாயை.

யுத்தகாண்டத்தின் தத்துவவிமர்சம்
முற்றிற்று



# ஸ்ரீஸுப்ரஹ்மண்ய தத்துவம்.

## தேவ காண்டம்

இக்காண்டத்தில் தேவர்களின் சிறைமீட்சி, திருச்செந்தூர் வரவு, வீரமாஹேந்த்ரபுரத்தின் அழிவு, பரங்குன்றில் தெய்வயானையின் திருமணம், விண்குடியேற்றல், இந்திரனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்தல், ஸ்கந்தகிரிக்குச் செல்லல், அங்கிருந்து வல்லீபரிணயத்தின் பொருட்டுப் பரிபூர்ணாசல மென்னும் திருத்தணிகைக்கு வருதல், வல்லீ பரிணயம், சாந்தாத்ரியில் அமர்தல், அங்கிருந்து ஸ்கந்தகிரிக்குச் சென்றமர்தல் முதலிய பலவிஷயங்கள் விமர்சிக்கப்படும்.

சூரனைச்சம்மரித்த பிறகு, வடிவேற் பெருமான் வீரபாகுவை விளித்து "வீரனே! அஸுரர்களாற் சிறை யிடப்பட்டுள்ள ஜயந்தன் முதலிய தேவர்களையழைத்துவா" வென்று திருவாய்மலர்ந்தருள, அவனுமப்படியே சென்று யாவரையும் சிறையினின்று மீட்டுவந்தனன். இந்திரன், ஜயந்தன், பிரஹ்மா, விஷ்ணு, முதலிய தேவர்களும் மற்றுமுள்ள இலக்ஷத்தொன்பது வீரர்களும் குஹனை வணங்கிக் கீழ்வருமாறு துதித்து நின்றனர்.

(1) சுருதிமுடி மோனஞ்சொல் சிற்பரம ஞானசிவ
சமயவடி வாய்வந்த அத்துவித மானபர
சுடரொளிய தாய்நின்ற நிஷ்களசொ ரூபமுத—லொரு
வாழ்வே

துரியநிலை யேகண்ட முத்தரித யாகமல
மதனின்விளை யாநின்ற அற்புதஸ ‍போதஸக
சுயபடிக மாவின்ப பத்மபத மேயடைய—அருள்தா
ராய் !

(2) ஞானங்கொள் பொறிகள்கூடி வாநிந்து கதிரிலாத
நாடண்டி நமசிவாய—வரையேறி
நாவின்ப ரஸமதான ஆநந்த அருவிபாய
நாதங்க ளொடுகு லாவி—விளையாடி
ஊனங்கள் உயிர்கள் மோக நானென்ப தறிவிலாமல்
ஓமங்கி யுருவ மாகி—இருவோரும்
ஓரந்த மருவி ஞான மாவிஞ்சை முதுகிலேறி
லோகங்கள் வலம தாட—அருள்தாராய் !

(3) அருமறைக ளேநினைந்து மநுநெறியி லேநடந்து
அறிவையறி வால றிந்து—நிறைவாகி
அகிலபுவ னாதி யெங்கும் வெளியுறமெய்ஞ் ஞான இன்ப
அமுதையொழி யாத ருந்த—அருள்வாயே !

(4) தேனுந்து முக்கனிகள் பால்செங் கருப்பிளநிர்
சீரும்ப ழித்தசிவம்—அருளூறத்
தீதும்பி டித்தவினை யேதும்பொ டிப்பவுறு
சீவன்சி வச்சொருபம்—எனநாடி
நானென்ப தற்றுயிரொ டேனென்ப தற்றுவெளி
நாதம்ப ரப்பிரம—ஒளிமீதே
ஞானஞ்சு ரப்பமகி ழாநந்த சித்தியொடெ
நாளுங்க ளிக்குநிலை—யருள்வாயே !

(5) உடலினூடு போய்மீளு முயிரினூடு மாயாத
உணர்வி னூடு வானூடு—முதுதீயூ
டலைவையூடு நீரூடு புவியினூடு வாதாடு
மொருவ ரோடு மேவாத—தனிஞானச்

சுடரினூடு நால்வேத முடியினூடு மூடாடு
துரிய வாகு லாதீத—சிவரூபம்
தொலைவிலாத பேராசை துரிசறுத வோர் பேதை
தொடு மூபாய மேதோசொல்—அருள்வாயே !

(6) தொல்லை முதல் தானென்று மெல்லியிரு பேதங்கள்
சொல்லுகுண மூவந்த—மெனவாகித்
துய்யசதுர் வேதங்கள் வெய்யபுல னைந்து
தொய்யுபொரு ளாறங்க—மெனமேவுந்
பல்லபல நாதங்கள் அல்கபசு பாசங்கள்
பல்குதமிழ் தானொன்றி—யிசையாகிப்
பல்லுயிரு மாயந்த மில்லசொரு பாநந்த
பௌவமுற வேநின்ற—தருள்வாயே !

(7) சரியையா ளர்க்குமக் கிரியை யாளர்க்குநற்
சகலயோ கர்க்கு மெட்—டரிதாய
ஸமயபே தத்தினுக் கணுகொணு மெய்ப் பொருட்
டருபரா சத்தியிற்—பரமான
துரியமே வற்புதப் பரமஞா னத்தனிச்
சுடர்வியா பித்தநற்—பதிநீடு
துகளில்ஸா யுஜ்ஜியக் கதியையீ றற்ற சொற்
சுகசொரூ பத்தையுற்—றடைவேனோ?

(8) மலமாயை,
செனித்த காரி யோபாதி ஒழித்து ஞான ஆசார
சிரத்தை யாகி யான் வேறென்—உடல்வேறு
செகத்தியாவும் வேறாக நிகழ்ச்சியாம னோதித
சிவச்சொரூப மாயோகி—என ஆள்வாய்.

(9) அவனிமீதி லோயாது—தடுமாறும்
உடலம்வேறு யான்வேறு கரணம்வேறு வேறாக
உதறிவாச காதீத—அடியூடே

உருகி ஆரியாசார பரமயோகி யாமாறுன்
உபய பாத ராசிகம்—அருள்வாயே!
(10) சுருதியூடு கேளாது சரியையாளர் காணுது
துரியமீது சாராது—எவராலும்
தொடரொணுது மாமாயை இடைபுகாது ஆனுத
சுகம கோத தீயாகி—ஒழியாது
பருதி காயில் வாடாது வடவைமூளில் வேகாது
பவனம் வீசில் வீழாது—சலியாது
பரவை சூழிலாழாது படைகள் மோதில் மாயாது
பரம ஞான வீடேது—புகல்வாயே!

இங்ஙனம் தேவர்கள் பலவாறு பரமனைத் துதித்துப் பின், யாவரும் அங்கிருந்து புறப்பட்டுத் திருச்செந்தூர் வந்து சேர்ந்தனர்.

சூரனது நகரமாகிய வீரமாஹேந்திரம் முருகன் கட்டளைப்படி கடலில் மூழ்கி நாசமாயிற்று.

பிறகு, யாவரும், ஜயந்தீபுரமாகும் திருச்செந்தூரினின்றும் புறப்பட்டுத் திருப்பரங்குன்றிற்கு வந்து சேர்ந்தனர்.

இந்திரனது வேண்டுகோளுக்கிரங்கியும், தான் முன்னர் அருளிய திருவாக்கின்படியும் குமரன் தெய்வயானையை மணக்க விணங்கினர்.

## தெய்வயானையின் வரலாறு.

தேவேந்திரனுக்குத் தம்பியும், விஷ்ணுவின் அம்ஸமாய்ப் பிறந்தவனுமான உபேந்திரனது இரண்டு நேத்திரங்களினின்றும் அம்ருதவல்லி, ஸுந்தரவல்லி யென்ற இரு பெண்கள் தோன்றினர்.

இவர்கள் கந்தனது பெரும் புகழையும் மஹிமையையும் செவியுற்று அவனையே மணக்கவேண்டுமென்று தீர்மானித்துக்கொண்டு சரவணப் பொய்கையில் தவங்கிடந்தனர். அவர்களியற்றிய தவத்திற்கு மகிழ்ந்து, செவ்வேள் அவர்முன் தோன்றி "சிலகாலம் சென்றபிறகு உங்கள் எண்ணத்தைப் பூர்த்தி செய்கின்றேன். கேளாய்! அம்ருதவல்லீ! நீ தேவலோகத்தில் தேவேந்திரனிடத்திற் போயிரு. வாராய்! ஸுந்தரவல்லீ! நீ மண்ணுலகம் சென்று சிவமுனிக்குப் புத்திரியாய்ப் பிறந்து, வள்ளிமலையில் வேடராஜனிடத்தில் வளர்ந்துகொண்டிரு. யான் உங்களைத் தக்கஸமயத்தில் விவாஹம் செய்து கொள்ளுகிறேன்" என்று கூறி மறைந்தனர்.

அம்ருதவல்லியும், கட்டளைப்படி இந்திரனை யடைந்து ஐராவதத்தால் வளர்த்தப்பட்டனள். தேவயானையால் வளர்த்தப்பட்ட காரணத்தால் தேவகுஞ்சரி, தெய்வயானை யென்னும் பெயர்கள் பெற்றனள்.

திருப்பரங்குன்றத்தில் ஸகலதேவர்களும் முனிவர்களும் புடைசூழ உமாமஹேஸ்வரர் அங்கு ஆவிர்ப்பவித்து விளங்கத் தெய்வயானைக்கும் ஷண்முகனுக்கும் திருக்கல்யாணம் விதிப்படி வெகு சிறப்பாய் நடந்தேறியது.

தெய்வயானை சித்சக்தியின் கிரியாசக்தியாவள். உபேந்திரனது வலது நேத்திரத்திற் றோன்றியதால் பாஹ்ய பிரவ்ருத்திவடிவமாய் விளங்குபவள்; பாஹ்யாநுவித்த ஸமாதிவ்ருத்திஸ்வரூபமானவள்.

இவ்விஷயம் 57-58ம் பக்கங்களில் நன்கு விமர்சிக்கப் பட்டுள்ளது. ஆங்குக் கண்டறியவும்.

பாஹ்யஸமாதியின் அடைவே தெய்வயானைமணத்தின் தத்துவமாகும்.

## விண்குடி யேற்றல்.

திருக்கல்யாணம் முடிந்த பின்னர், தேவஸேனபதி திருப்பரங்குன்றினின்றும் புறப்பட்டுச் சுவர்க்கலோகத்தை யடைந்தனர். அக்னி முதலிய திக்பாலகர்களேயும், மற்ற தேவர்களேயும் அவரவர்க்குரிய ஸ்தானங்களில் அமர்த்தி இந்திரனுக்குத் தேவஸாம்ராஜ்யபட்டாபிஷேகம் செய்வித்து ஸிம்ஹாஸனத்தில் வீற்றிருக்கச் செய்தனர்.

இதன் தத்துவம்:—தானே தானய் நிற்கும் அத்வி தீயநிலேயே ஸ்வர்க்கமாம். **"स्वेन गमयतीति स्वर्गः"** இதுவே ஆத்மஸ்வாராஜ்ய ஸித்தியாம். ஜயந்தன் = இந்திரன் மகன்; ஆத்மீய குணங்களிற் சிறந்த ஸர்வக்ஞ ஸ்வாதந்தர்யம். இது சிறைப்பட்டிருந்தகாரணத்தால், அற்பக்ஞத்துவமும், பாரதந்த்ரியமும் ஏற்பட்டு இந்திரன் வருந்தினன். ஆந்தர சத்ருக்களாகும் அநாத்ம ஆஸுரவ்ருத்திகள் ஒழியவே ஆத்மாபரோக்ஷஞானம் ஸ்வயம்பிரகாசமாய் விளங்கிற்று. ஸர்வத்தையும் தன் ஸ்வரூபமாய்ப் பார்க்கும் சிவதிருஷ்டிவடிவ பாஹ்யாநுவித்தஸமாதியை யடைந்து ஆநந்த ஸ்வரூப ஸ்வாராஜ்ய ஸார்வபௌமனய் விளங்கினன்.

குஹன், இங்ஙனம் தேவலோகத்தில் தேவர்களேயெல்லாமமர்த்தி, பிரஹ்மா விஷ்ணு முதலியவரை அவரவர் இருப்பிடங்களுக்குப் போகும்படி விடைகொடுத்தனுப்பி விட்டுத் தெய்வயானேப்பிராட்டியோடும் இலக்ஷத்தொன்பது வீரர்களோடும் திருக்கயிலாயத்தை யடைந்தனன்; அடைந்ததும், பரமசிவனேயும் பார்வதீதேவியையும் தரிசித்து நமஸ்கரித்தனர். பார்வதீபரமேஶ்வரர்கள் குஹ

ளையும் தேவகுஞ்சரியையும் தக்கபடி கொண்டாடி மகிழ்ந் தனர். பின் அங்கிருந்து புறப்பட்டுக் கந்தகிரிக்கு விஜ யம் செய்தனர்.

## வள்ளியம்மையின் வரலாறும் திருமணமும்.

முக்திஸ்தலங்கள் ஏழனுள் ஒன்ருயதும், நகரங்கட் கெல்லாம் நாயகமாய் விளங்குவதுமான காஞ்சிமாநகரத் திற்கருகில் தொண்டை நாட்டிற் சேர்ந்த மேற்பாடி யென் னும் ஒரு பட்டணமுளது. அதன் ஸமீபத்தில் வள்ளிக் கொடிகள் ஏராளமாய்ப் படர்ந்துள்ள வள்ளிமலை யென் னும் ஓர் மலையுண்டு. அம்மலையில், மஹாவிஷ்ணுவானவர் கண்வமஹாமுனியின் சாபத்தால் சிவமுனியாகத் தோ ன்றித் தவஞ்செய்து கொண்டிருந்தனர். அப்பொழுது மஹாலக்ஷ்மியானவள் ஓரழகிய மானுருவத்தோடு அங்குத் தோன்றினள். சிவமுனிவரும் அதைக் காதல் மனத் தோடு கண்ணுற்ற மாத்திரத்தில் அம்மானனது கர்ப்பங் கொண்டதாகி ஓரழகிய பெண் குழந்தையை யீன்று ஓடிப் போய் விட்டது. அப்பொழுது குழந்தையானது வீறி ட்டு அழத் தொடங்கிற்று. அவ்வழுகைக் குரலைச் செவி யுற்ற நம்பி யென்னும் அவ்வூர் வேடராஜன் ஓடோடியும் வந்து அக்குழந்தையை யெடுத்து மார்போடணைத்துத் தன் மனையாளிடங் கொடுத்தனன். அவளும் அக்குழ வியை யுச்சிமோந்து சீராட்டிப் பாலூட்டி வளர்த்தனள். வள்ளிக் குழியில் கண்டெடுத்த காரணத்தால் அதற்கு வள்ளி யென்னும் திருநாமம் இடப்பட்டது. நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாய் வளர்ந்து, வள் ளிக்குப் பன்னிரண்டு வயதாயிற்று. வேடர்ஜாதிவழக்

கப்படி வள்ளியும் மற்ற வேடப்பெண்களோடு தினைப் புனங் காக்கச் சென்றனள்.

ஸுந்தரவல்லிக்குத் தான் தந்தருளிய திருவாக்கின் படி ஆண்டருளத் திருவுளங்கொண்டவனாகிக் கந்தவேள் கந்தவெற்பிலிருந்து புறப்பட்டுத் திருத்தணிகைக்கு வந்து சேர்ந்தனர். இத்தணிகைமலையானது வள்ளிமலைக்குப் பன்னிரண்டு மயில் தூரத்திலுள்ளது.

நாரத முனிவர் ஒரு நாள் வள்ளியம்மையைத் தினைப் புனத்தில் தரிசித்து அச்செய்தியைத் தணிகேஶனுக்குக் கூறினர். உடனே கந்தவேள் ஒரு நல்ல வாலிபப் பருவ முடைய வேடவுருவந்தாங்கி, வள்ளிமலைச் சாரலில் தினைப் புனங்காக்கும் வள்ளிநாயகியைக் கண்டு அவளுடன் ஸம்பாஷணை செய்யும்போது வேடர்கள் அங்குவரக் குஹன் தனது வேடவுருவத்தை மறைத்து ஒரு வேங்கை மரமாய் நின்றனன். அவள் அம்மாயாவிருக்ஷத்தைக் கண்டு பயந்தனள். பின், வேடர்கள் வள்ளியை நோக்கி

मास्तु ते भीतिरेतस्माद्वरवृक्षात्सुशीतलात् ।
भवत्वयं सहायस्ते कानने सुखदोऽनिशम् ॥

"ஓ குழந்தாய், நல்ல குளிர்ச்சி பொருந்திய இம் மரத்தால் உனக்குப் பயமே வேண்டாம். அது, உனக்கு இக்காட்டில் மிகுந்த ஸுகத்தைத் தரக் கூடிய ஒரு நல்ல துணையாக இருக்கட்டும்" என்று கூறிச் சென்றனர். அவ் வேடர்கள் சென்றவுடன், குமாரமூர்த்தி மறுபடியும் வேடகுமாரனாக வள்ளியம்மையின் முன் நின்று, வார்த்தைகள் பேசவாரம்பித்தனன். வேடகுமாரனது மனக்குறிப்பை

யுணர்ந்த வள்ளிநாயகி பயத்தினால் நடுக்கமுற்றவளாகி, அவரை நோக்கித் தலைகுனிந்து,

अहं हीनकुलोद्भूता त्वं तु राजकुलोद्भवः ।
प्रियंगुपालिका राजन्नावयोः कियदन्तरम् ॥
तवेदृशमिहायुक्तं गच्छ गच्छ यथागतम् ।
यदि दृष्टः पुलिन्दैस्त्वं तदा बाधा भवेद्ध्रुवम् ॥

"ஓ ராஜனே! நானோ இழிகுலத்துதித்தவள். நீரோ ராஜகுலத்திற் பிறந்தவர். மேலும் நான் தினைப்புனங்காப்பவள். உமக்கும் எனக்கும் எவ்வளவு தூரம்? ஆகையால் உமக்கு இத்தகைய காரியம் தகாது. வந்தவழியே போய்விடும். உம்மை வேடர்கள் கண்டுவிட்டால் உமக்கு நிச்சயமாய்த் தீங்கு நேரிடும்." என்றுரைத்தனள்.

தக்ஷணமே வேடராஜன் தன் பரிவாரங்களோடு ஆங்குற்றனன். உடனே செவ்வேட் பரமன் மூப்பினால் தேகம் முழுமையும் நரைக்கலுற்ற ஒரு கிழவடிவங் கொண்டு, கையில் தண்டம் விளங்க, அவ்வேடராஜன் முன் நின்றான். நம்பிராஜன் அக்கிழவனை "நீ யார்? உனக்கென்னவேண்டும்" என்று வினவ, அவன் "நானொரு தவசி. இங்குள்ள குமரிதீர்த்தத்திற் படிந்து என் கிழவடிவத்தை மாற்றிக் கொள்ள இங்கு வந்துள்ளேன்" என்று பதிலுரைத்து, அவனை ஆசிர்வதித்துத் திருநீறும் அருளினான். பின்னர் வேடராஜன் சொற்படி வள்ளிக்குத் துணையாகவும் இருந்தான்; பின் அவள் தந்த தேன்கலந்த தினைமாவைப் புசித்தான்; வள்ளியால் வழிகாட்டப்பட்ட ஒரு தடாகத்திற்குச் சென்று நீரருந்தினான்; சிருங்காரரஸம் ததும்பும் பல

சொற்கள் புகன்றான்; வள்ளி கிழவரைக் கோவித்துத் தனியாய் விட்டுவிட்டுப் புறப்பட்டனள். அப்போது இளையோனால் தியானிக்கப்பட்டவராகி, விநாயகர் மதங்கொண்ட ஒரு யானையாய் வள்ளியின் முன் தோன்றினார். அப்போது வள்ளியம்மையும் மெத்தப் பயந்தவளாகி, யவ்விருத்ததவசியைக் கட்டி அணைத்துக்கொண்டனள். உடனே, திருத்தணியிலுதித்தருளும் ஒருத்தன், மலைவிருத்தன், எனதுளத்திலுறைகருத்தன், ஷண்முகங்களோடும் பன்னிருபுயங்களோடுமுள்ள தனது அருள்வடிவங்காட்டி நின்றனன். இங்ஙனம் நின்ற முழுமுதற்கடவுளை அவ்வள்ளியம்மை பணிந்துத் துதித்தனள். செவ்வேளும் தமது திருவுள்ளத்தையுங் கருணாநோக்கத்தையுங்கொண்டு வள்ளியம்மையின் அகத்திலும் புறத்திலும் கலந்து அத்வைதாநந்தத்தை ஸ்புரிப்பித்தனன். இங்ஙனம் சின்னாள் அத்தினைப்புனத்தில் வள்ளியம்மைக்கு ஆநந்தானுபவந் தந்தருளி, தினை முற்றி யறுவடையானபின், வள்ளி தனதில்லமேக, குமரன் ஒருநாளிரவில் அங்குச் சென்று பாங்கியின் ஸஹாயத்தால் வள்ளியைக் களவாடிச் சென்றனன். வேடராஜனும் மற்ற வேடர்களும் வள்ளியைத் தேடிக்கொண்டுவந்து முருகனோடு சண்டையிட்டனர். முருகனும் தனது கொடியாகும் சேவலின் ஹுங்காரத்தால் அவ்வேடர்களை வீழ்த்தினான். பின் வள்ளியம்மையின் விருப்பத்தின்படி வேடர்கள் அனைவரும் வள்ளியினாலேயே எழுப்பப்பட்டனர்: நம்பியென்னும் வேடராஜனுக்கும் முருகன் தனது அருளுருவத்தைக் காட்டி யநுக்கிரகித்தனன். பின், நம்பிராஜன் விருப்பத்தின்படி அவன் வீட்டிற்குச் சென்று விதிப்படி வள்ளியம்மையை மணந்து அங்கிருந்து வள்ளிநாச்சியாருடன் புறப்பட்டுத் திருத்தணிகைக்கு

வந்து அங்கே தங்கிப் பல அடியார்களுக்கு அருள்புரிந்து, வள்ளீ ஸமேதனாய்க் கந்தவெற்பிற்கு எழுந்தருளினான். என்பது வல்லீபரிணயத்தின் கதாபாகமாகும்.

இனி இதன் தத்துவத்தை யாராய்வாம்:—

தொண்டைநாடு: = சரீரத்தில் கழுத்திற்கு மேலுள்ளபாகம்.
மேற்பாடி = முகம்.
வள்ளிமலை = ஆக்ஞாஸ்தானம், குலபதம் (कुलपथं), ஜாக்கிரஸ்தானம்.
வள்ளி = மஹாவிஷ்ணுவின் இடது நேத்திரத்தினின்றும் பிறந்து, பின், சிவமுனியென்னும் பிரஹ்மமும் மானென்னும்அக்ஞானமும் ஒன்றுசேரத்தோன்றியவள். ஆதலின் ஜீவசக்தி. குண்டலினீ ஸ்வரூபமானவள்.
வள்ளிக்குழி = மூலாதாரம். மூலகுண்டலினீ (कुलकुण्ड).
வேடர்கள் = ஞான, கர்மேந்திரியங்கள்.
நம்பிராஜன் = ஜீவன்; ஜாக்ராவஸ்தையின் அபிமானியாகிய விஸ்வன்.

" ஆயதொரு சீறூரிலார்புளினர்க் கெல்லாமோர்
நாயகனும் நாமவேல் நம்பியென்போன்—நேயமொடு
செய்தவத்தின்மைந்தர் சிலர்ப்பெற்றுப் பெண்மகட்குத்
தெய்வம் பராவியுற்றான் றேர்ந்து"

என்னும் பிரமாணத்தின்படி நம்பிராஜனுக்கு எழுமக்களிருந்தனர். ஒரு பெண்மகவின்மையின் அவன் குறிஞ்சிக்கடவுளாம் முருகனை நோக்கித் தவம் செய்தனன் என்றேற்படுகின்றது. ஜீவனாகும் நம்பிராஜனது எழுமக்களது தத்துவம் யாதெனின் (1) அஞ்ஞானம், (2) ஆவரணம், (3) பேதஞானம், (4) கர்த்ருத்வ போக்த்ருத்வபுத்தி, (5) காமம், (6) சஞ்சலத்தன்மை (7) துக்கம் என்பதேயாகும்.

எட்டாவதாக ஒரு பெண்வேண்டுமென்னும் எண்ணமானது "துக்கம் வேண்டாம், ஸுகம் வேண்டும்" என்னும் சுபேச்சையேயாகும்.

ஆகவே வள்ளிகல்யாணமானது ஒரு ஜீவன், தனது ஆத்மஸ்வரூபத்தைச் சந்தேக விபரீத மற அறிந்து, பிரஹ்மத்தோடு அபேதப்பட்டு, ஸர்வ அநர்த்த நிவ்ருத்தி, பரமாநந்தப் பிராப்தி வடிவ மோக்ஷத்தையடைவதேயாகு மென்று உண்மையறிந்த பெரியோர் கூறுவர்.

இதன் விமர்சம் செய்யப்படுகின்றது.

தினைப்புனம் = போகாயதன லிங்கசரீரம்; இதிலேதான் போக்கியப் பொருள்கள் தோன்றுகின்றன; அநுபவிக்கவும் படுகின்றன.

தினை = அற்பமாயும் நசிக்கக் கூடியனவாயுமுள்ள சப்தஸ்பர்ஶாதி பிராபஞ்சிக ஸுகங்கள்.

பரண் = தினைகளின் கதிரளவு உயரத்திற்கு மேல் கட்டப்பட்டுள்ள ஒருயரிய இடம். ஐஹிக ஸுகத்திற்கு மேற்பட்ட சுகத்தை விரும்பும் சுபேச்சையோடு கூடிய வ்ருத்தி; இது சாஸ்த்ரஞானத்தினுலுண்டாவது.

கவண் = வைராக்கியத்தோடு கூடிய அந்தக்கரணவ்ருத்தி.

கல் = விஷயங்களின் தோஷ திருஷ்டியாகும் வைராக்கியம்.

பறவைகள் = சப்தாதி விஷயங்களை அநுபவிக்கவேண்டுமென்று பேரவாவோடு செல்லும் இந்திரியவ்ருத்திகள்.

ஆகவே ஸ்தூல சரீரத்தையே "நானென்று" நம்பியிருந்த வேடராஜனுக்கு வள்ளியென்னும் ஒரு சுபேச்சையுண்டாகி, அது நாளுக்கு நாள் விருத்தியாகிப் பாஞ்ச

பௌதிகமான விப்பிரபஞ்சத்தை நன்காராய்ந்து, விஷய ஸுகங்கள் அற்பமும் நஸ்வரமுமாமென அறிந்து ஆமுஷ்மிக ஸுகத்தைத் தேடவுத்தேசித்து, ஈஸ்வரஸ்வரூபத்தையடைவதற்கு பிரயத்தனப்பட்டுக் கொண்டிருந்த தத்துவத்தைத் தெரிவிக்கின்றது வள்ளியம்மை தினப்புனங்காத்தது.

இங்ஙனம் சுபேச்சையோடும் வைராக்கியத்தோடும் ஈஸ்வரபக்தியோடுங் கூடிய உத்தமாதிகாரியாகிய வள்ளியை ஆண்டுகொண்டு தன்னோடு ஐக்கியப்படுத்த விசேஷப் பிரஹ்மஸ்வரூப ஸுப்ரமண்யன் ஸ்கந்தகிரியிலிருந்து பரிபூர்ணசலமென்னும் திருத்தணிகைக்கு வந்து சேர்ந்தனன். என்பது கதை. இதன் தத்துவமாவது:—

ஸ்கந்தகிரி = ஷோடசாந்தஸ்தானம். स + क + द = ஸ்கந்த: வடமொழியில் எழுத்துகளால் எண்களைக் குறிப்பிடுவது வழக்கம். அதன்படி स = 7; क = 1; द = 8 ஆகவே ஸ்கந்த: என்பது பதினாறைக் குறிப்பிடுகின்றது. மூலாதாரம் முதல் ஆக்ஞைவரையில் ஆறு; அதற்குமேல் பிந்து ஒன்று; ஆக எழு. லலாடமே பிந்துஸ்தானமாம். மூலாதாரத்திற்குக் கீழே ஆதாரஸஹஸ்ராரம் ஒன்று. ஆக எட்டுஸ்தானங்கள் லலாடம் வரையிலுள்ளன. அதன்மேல் எட்டுஸ்தானங்கள். அவை அர்த்தசந்திரன், ரோதினீ, நாதம், நாதாந்தம், சக்தி, வியாபிகா, ஸமநா, உன்மனீ, யென்பவைகளாகும். பிந்துவுக்குக் கீழே எட்டும், மேலே எட்டுமாகவுள்ள ஷோடசஸ்தானங்களுக்கும் அதீத

மாய் விளங்குவது ஸ்கந்தகிரியாகும். இது பரமரஹஸ்யமானது. இதைப்பற்றிய அதிக விஷயங்கள் குருமுகமாய் அறியத்தக்கன. இதுவே நிர்விசேஷப் பிரஹ்மஸ்தானம்; துரீயாதீத நிலை.

திருத்தணிகை: இதற்குப் பரிபூர்ணசலம், சாந்தாத்திரி முதலிய பலபெயர்களுண்டு. இது துவாதசாந்தஸ்தானம். விசேஷப்பிரஹ்மவ்ருத்தி ஞானத்தால் ஸகல அநர்த்தங்களும் ஒழிந்து அத்வைதாநந்தாநுபவமும் ஸஹஜப்பட்ட நிலை. ஆதலால்தான் சாந்தாத்ரியெனும் பெயர் இதற்கு ஏற்பட்டது. தஹராகாசமாகும் ஹ்ருதயத்திலிருந்து பன்னிரண்டாவது ஸ்தானம்.

அநாஹதம், விசுத்தி, ஆக்ஞை, பிந்து, அர்த்த சந்திரன், ரோதினீ, நாதம், நாதாந்தம், சக்தி, வியாபிகை, ஸமநா, உன்மனீ யென்னும் பன்னிரண்டிற்கு அதீதமாயுள்ளது. ஸவிசேஷப் பிரஹ்மஸ்பூர்த்தி யொடுங்கும் இடம்; துரீயத்தின் முடிவிடம்.

வள்ளிமலை: ஆக்ஞாஸ்தானம், குலபதஸ்ருங்கம் **कुलपथशृङ्ग.** வள்ளியென்னும் குண்டலினீ சக்தி ஸஞ்சாரம் செய்யும் ஸ்தானங்களுக்கெல்லாம் உயர்ந்து விளங்குவது. ஆதலின் வள்ளிமலையென்னும் பெயர் பெற்றுள்ளது. மனோலய ஸ்தானமும் இதுவே. துரீயாவஸ்தையின் ஆரம்பஸ்தானம்.

தணிகேசன் திருத்தணிகையிலிருந்து வள்ளியை யநுக்கிரஹிக்க ஒருவேடரூபம் தாங்கி வள்ளிமலைக்கு வந்தனர். ஆண்டவன், ஜீவர்களை இரண்டுவகையாய் அருள் புரிகின்றார். அவற்றில் ஒன்று மர்க்கடகிசோர நியாயம்; மற்றொன்று மார்ஜாரகிசோர நியாயம். முருகன் வள்ளியை யாட்கொண்டது மார்ஜாரகிசோர (பூனைக்குட்டி) நியாய ரீதியாய் என்றறியவும். குட்டியிருக்கும் இடந்தேடித் தாய்ப்பூனை வந்து காப்பதுபோல.

வேடரூபம் = ஸகுணஸாகாரவடிவம். ஸத்துவத்தில் ரஜோகுணம்: ஸகுண நிராகாரஸ்வரூபத்திலிருந்து அன்பர்களை யருளும் பொருட்டுத் தானே ஸ்வீகரித்துக் கொண்ட ஒரு கோலம்.

இந்தக்கோலத்தோடு வள்ளியினிடம் பேசும்போது வேடர்கள் வந்துவிட்டனர். இதன் தத்துவமாவது: பாஹ்யேந்திரியவ்ருத்திகளால் ஏகாக்கிரத்தன்மை கலைதல்.

வேடவாலிப வுருவம் மறைந்ததென்பது வள்ளியின் தியேயவடிவத்தின் நீக்கமேயாகும்.

வேடர்கள் அங்கிருந்து நீங்கியபோது வேங்கைமரமாய் நிற்றல்:

வேங்கைமரம் = ஸத்துவத்தில் தாமஸகுணம்: இது கேவலம் சாஸ்திரக்ஞானஸ்வரூபமாம்.

“ஆங்கதுபோ தாரடிமு னாரணங்க ளாகவே
போங்குநடுவீச னுயர்நூலாப்—பாங்கரொடு
மேற்பல் கிளை கலையா வேங்கையுருவாகியே
வேற் படைமா வீரனின்றான் வேட்டு”

என்னும் பிரமாணம் வேங்கைமரத்தின் ஸ்வரூபத்தை நன்கு புலப்படுத்துகின்றது.

அம்மரத்தின் அடிப்பாகம் வேதங்களாகவும், மத்தியிலுள்ள தண்டு ஈஸ்வரஸ்வரூபத்தைப் பிரதிபாதிக்கும் பக்திசாஸ்திரங்களாகவும், கிளைகள் ஞானசாஸ்திரங்களாகவும் கூறப்படும். ஆகவே அது கர்மம், பக்தி, ஞானமெனும் மூன்று பாகுபாடுகளை யுடைய வேதஸ்வரூபமேயாகும். இத்தகைய மரம் திடீரெனத் தோன்றியுள்ளதாதலின் மாயிகமெனநினைத்து வேடர்கள்யாவரும் அதை வெட்டிப்போட உத்தேசித்தனர். நம்பிராஜன் மாத்திரம் அவர்களைத் தடுத்து அதை வெட்டாமற்செய்ததுமன்றி, அது அக்காட்டில் வள்ளிக்கு ஸுகத்தைத்தரக்கூடிய நல்லதுணையாயிருக்கும் என்றுங் கூறினன்.

ஜனனமரணரூபஸம்ஸாரமே காடு. ஆத்யாத்மிக, ஆதிதெய்விக, ஆதிபௌதிகங்களாகும் தாபத்திரயங்களே வெயில். ஞானசாஸ்திர ஆராய்ச்சியே ஸுகத்தைத் தரக்கூடிய நிழலோடுகூடிய அம்மரம்.

வேடர் மறுபடியும் வந்தனரென்பது மற்றொருமுறையும் மனவொருமை கலைந்தது. குஹன் கிழத்தவசி வடிவமாய் நின்றனன். இது ஸத்துவத்தில் ஸத்துவகுணவடிவமாகும். இந்த முதுஞானி வேடராஜன் முன்தோன்றி, அவனுக்குத் திருநீறளித்து ஆசிர்வதித்தனன். இதனால் நம்பிராஜனுக்கு ஈஸ்வராநுக்கிரஹம் ஏற்பட்டதென்பது வெளியாகின்றது. இதன்பின் வேடர்கள் அங்குவரவேயில்லை. மனத்தின் ஏகாக்கிரதன்மைக்குப் பங்கம் ஏற்படவேயில்லை. இதுதான் சித்தப்ரஸாதமென்பது. சித்தப்ரஸாதமே ஈஸ்வராநுக்கிரஹமல்லவா?

(1) குமரிதீர்த்தம்—விமர்ஶவாபிகை. இது ப்ரூமத்தியத்திலுள்ளது. ஜீவப்பிரஹ்மைக்கிய விமர்சஞானம்.

இதையடைந்தவன் காலபரிச்சேதத்தை யொழித்து நித்தியத்துவத்தை யடைகின்றான். இதுதான் கிழவன் குமாரனாகும் தத்துவம்.

(2) தேனும் தினைமாவுமளித்தல் = உடல், பொருள், ஆவியாகும் அனைத்தையும் பரமேஶ்வரனுக்கு அர்ப்பணம் செய்தல். இதனைச் சரணாகதியென்றும், பிரபத்தியென்றும் பெரியோர் கூறுவர்.

(3) ஏழு குன்றுகளுக்கப்பாலுள்ள சுனையில் நீரருந்தல்--விவேகம், வைராக்கியம், சமாதிகளின் அடைவு, முமுக்ஷுத்துவம், சிரவணம், மனனம், நிதித்தியாஸனமென்னும் ஏழுஸாதனங்களையுந் தாண்டி விளங்கும் ஸமாதிவ்ருத்தி ஞானத்திற்கு விஷயமாகுந்தன்மை. ஜலம் = ஞானம்.

(4) சிருங்காரச்சுவையை வெளிப்படுத்தும் சம்பாஷணை = சிவசக்திகளின் ஸாமரஸ்யமென்னும் ஜீவப்பிரஹ்மைக்கிய ஆரம்பஸ்திதி.

சிற்றின்பத்தின் மூலமாகவேதான் பேரின்பத்தை யுணர்த்துதல் கூடும்.

(5) யானைதோன்றல் — ஸமாதிவிக்னமாகும் லயரூபம். இந்தத் தடை உபாஸனாமூர்த்தியின் தியானத்தால் நிவர்த்தியாகுமென்பது சாஸ்த்ர ஸித்தாந்தம். ஆதலின் வள்ளியம்மை பயத்தினால் விருத்தத்தவவேடத்தோடுள்ள குஹனைக் கட்டியணைத்துக் கொண்டனள்.

(6) குஹனது நிஜஸ்வரூப தரிசனம்—தியானிக்கப்பட்ட கற்பிதவடிவமே ஞேயரூபப் பிரஹ்மமாதல். ஸவிகல்பஸமாதி நிலையை யுணர்தல்.

இங்ஙனம் வள்ளியென்னும் வ்ருத்திஞானமும், ஸுப்பிரஹ்மண்ய மென்னும் விசேஷப்பிரஹ்மாபின்ன ஆத்மஸ்வரூபமும் ஏகபோகமாய் ஆநந்தானுபவத்தை நுகர்ந்து கொண்டிருந்தனர்.

(7) தினைப்புனம் அறுவடையாதல்—இனிச் செய்ய வேண்டிய கர்மசேஷம் யாதுமின்றிக் கிருதகிருத்தியத் தன்மையைப் பெறல்.

(8) வள்ளியைக் களவாடல் — அமனஸ்கயோகம்: பரமேஶ்வரன் உள்ளங் கவர் கள்வனன்றோ?

(9) வேடர்கள் வள்ளியைத் தேடிக்கொண்டு போய் முருகனோடு சண்டையிடுதல்—லோகவாஸனையால் ஜீவன் மனம் இந்திரியங்கள் இவைகளின் முற்பழக்கத்தால் ஸமாதிவ்ருத்தியிலிருந்து நழுவி உலகத்தை நாடவேண்டுமென்று முயலுதல்.

(10) சேவலின் ஹுங்காரத்தால் மடிதல்—மறுபடியும் ஸமாதிவ்ருத்தியின் வலிமையால் பரஹ்யேந்திரியங்களும் அந்தக்கரணமும் ஒழிதல். என்றால் ஸரூப நாசத்தைப் பெறல்.

(11) மறுபடியும் வள்ளியின் விருப்பத்தின்படி நம்பிராஜனும் மற்ற வேடரும் உயிர்த்தெழுதல்—ஜீவப்பிரஹ்மைக்கிய பாரமார்த்திக நிலைக்கு அநுகூலமான ஜீவன்முக்த வாழ்க்கையோடிருத்தல்.

(12) நம்பிராஜனுக்கு அருள்வடிவங்காட்டல் — இவனுக்கு அருள் புரிதலே வள்ளிகல்யாணத்தின் முக்கியப் பயனாகும். உபேந்திரன்தான் நம்பிராஜன். இவனது மோக்ஷேச்சையே வள்ளி. தினைப்புனமே அவனது அந்தக்கரணம். தினைக்கதிர்களே அவனது போக்கிய விஷயங்கள். வள்ளியை முருகனுக்குத் தத்தம் செய்தது ஆத்ம

ஸமர்ப்பணமாகும். ஆந்தரமாகும் பஞ்சகோசவிலக்ஷண ஆத்மவிசாரத்தால் வள்ளி ஆநந்தாநுபவத்தைப் பெற்றமையால் ஆந்தராநுவித்த ஸமாதிஸ்வரூபிணியெனப் பெரியோர் கூறுகின்றனர்.

பின்னர், நம்பிராஜன், தனதிருப்பிடமாகும் சீறார்க்குச் செவ்வேளையும், வள்ளியையும் அழைத்துக் கொண்டு போய், உலக வழக்கின்படி திருமணம் செய்வித்தனன். சீறாரே தேகமாகும்.

இங்ஙனம், ஸ்ரீஸுப்பிரஹ்மண்யமூர்த்தியானவர் தேவேந்திரனுக்கு அருள்புரிந்து தேவஸேனையென்னும் பாஹ்யாநுவித்த ஸமாதிவ்ருத்தியையும், நம்பிராஜனுகும் உபேந்திரனுக்கு அருள்புரிந்து வள்ளியென்னும் ஆந்தராநுவித்த ஸமாதிவ்ருத்தியையும் அடைந்து நிர்விசேஷமாக நின்றனன். இது வள்ளீஸமேதனைய்க் குஹன் திருத்தணிகை யென்னும் பரிபூர்ணாசலத்திற்கு வந்து தங்கினனென்னுங் கதையால் ஸூசிப்பிக்கப்படுகின்றது.

முன் கூறப்பட்டபடி சாந்தாத்ரி அல்லது பரிபூர்ணாசலமே துரீய ஸ்திதியிலுள்ள அகண்டாகாரவ்ருத்தியுங் கூட உபசமனமாகுமிடம்.

"ஸ்கந்தன், இங்நிலையில் சின்னாள் தங்கிக் கந்தகிரிக்குச் சென்றான்" என்னுங் கதாபாகம் விசேஷப்பிரஹ்மமாகும் அவன் நிர்விகல்ப நிர்விசேஷப் பிரஹ்மமாய் விளங்கினான் என்னும் தத்துவத்தை விளக்குகின்றது. இதுதான் குஹனது உண்மையான ஸ்வரூபம். இந்தஸ்வரூபத்தை யறிவிப்பதுதான் இந்நூலின் பரமோத்தேசமாகும்.

ஜாக்கிர, ஸ்வப்ன, ஸுஷுப்திகளென்றும், அவித்யாகாமகர்மங்களென்றும், காமம், வெகுளி, மயக்கங்களென்றும் பலபடியாய்க் கூறப்படும் திரிகுணாத்மக அவித்தை

யை யொழித்து, யதார்த்த ஸுப்பிரஹ்மண்ய தத்துவத்தைச் சந்தேக விபரீதங்களற நன்கறிந்து, அசுத்தஜீவ அஹங்காரத்தை முற்றும் ஒழித்து, அதனால் கர்மராஹித்தியத்தைப் பெற்று, அதனால் உபசாந்தத்தை யடைந்து, பேரானந்த அநுபூதியைப்பெற்று, அவாங்மனஸகோசர அம்ருத ஸ்வரூபமாய் விளங்குவதே இந்நூலின் பயனாகும். தக்க அதிகாரிகள் இந்த மஹாபலனை யடையக்கூடுமென்பதில் யாதும் சந்தேஹமில்லை.

## நூன்முடிபு மங்கலம்.

நிருத ரார்க்கொரு காலா ஜேஜய
சுரர்க ளேத்திடு வேலா ஜேஜய
நிமல னார்க்கொரு பாலா ஜேஜய—விறலான
நெடிய வேற்படை யானே ஜேஜய
எனவி ராப்பகல் தானே நான்மிக
நினது தாட்டொழு மாறே தானினி—உடனேதான்
தரையி னாழ்த்திரை ஏழே போலெழு
பிறவி மாக்கட லூடே நானுறு
சவலை தீர்த்துன தாளே சூடியுன்—அடியார்வாழ்
சபையி னேற்றிநின் ஞான போதமு
மருளி யாட்கொளு மாறே தானது
தமிய னேற்குமு னேநீ மேவுவ—தொருநாளே
தருவி னாட்டர சாள்வான் வேணுவி
னுருவ மாப்பல நாளே தானுறு
தவசி னாற்சிவ னீபோய் வானவர்—சிறைதீரச்
சகல லோக்கிய மேதா னாளுறு
மசுர பார்த்திப னோடே சேயவர்
தமரை வேற்கொடு நீறு யேபட—விழமோதென்

*றருள ஏற்றம ரோடே போயவ*
*ருறையு மாக்கிரி யோடே தானையு*
*மழிய வீழ்க்கெதிர் சூரோ டேஅமர்—அடலாகி*
*அமரில் வீட்டியும் வானோர் தானுறு*
*சிறையை மீட்டர ளூர்பால் மேவிய*
*அதிப ராக்ரம வீரா வானவர்—பெருமாளே.*

## ग्रन्थान्तमङ्गळाचरणम् ।

एको ध्येयः स्वात्मतयेति हि वेदान्ते
योऽन्यत्सर्वं श्रूयत एष च संत्यज्य ।
सर्वव्यापी भाति च भगवान्यो देव-
स्तं चिन्मात्रं साक्षिणमेकं गुहमीडे ॥ १ ॥

सर्वात्मस्थं स्वात्मतया संप्रतिपन्नः
स्वस्थं यं वै सर्वतया च प्रतिपन्नः ।
पूर्णानन्दो भाहगनन्तः पुरुषः स्या-
त्तं चिन्मात्रं साक्षिणमेकं गुहमीडे ॥ २ ॥

यो वै भूमा यः सुखरूपः परमात्मा
द्यावापृथ्वी चापि यदन्तर्गुणहीनः ।
प्राणप्राणो देह इहाहंपदलक्ष्य-
स्तं चिन्मात्रं साक्षिणमेकं गुहमीडे ॥ ३ ॥

தேவகாண்டதத்துவத்தின் முடிவோடு
ஸ்ரீஸுப்பிரஹ்மண்ய தத்துவம்
முற்றிற்று.

## ஸ்ரீ ஸுப்ரஹ்மண்ய ஆராதனக்கிரமம்.

இந்திரன் முதலிய தேவர்கள் ஸ்ரீ குஹப்பிரஹ்மத்தைத் தேவகிரியில் அர்க்கியம், பாத்தியம் முதலிய உபசாரங்களைச் செய்து பரிவாரதேவதைகளான வீரபாஹு முதலியவர்களையும் அணிமாஸித்தி முதலிய ஆவரண தேவதைகளையும் விதிப்படி பூஜித்ததாக 91ம் பக்கத்தில் கூறப்பட்டுள்ளது. அந்த பூஜாக்கிரமம் இங்கே சுருக்கமாய்க் கூறப்படுகின்றது. இந்த ஆராதனக்கிரமம் ஸ்ரீ அகஸ்தியஸம்ஹிதையில் கூறப்பட்டுள்ளதாய் ஏற்படுகின்றது. இந்தக் கிரமப்படியுள்ள பூஜையைச் செய்வதற்கு எல்லோருக்கும் அதிகாரமில்லை. மற்றே, ஸ்ரீ வித்யா தீக்ஷையைப் பெற்ற வித்யோபாஸகர்கள், அல்லது, குருமுகமாய் வேதாந்தசாஸ்த்ரசிரவணம் செய்து மஹா வாக்ய உபதேசம் பெற்றவர்கள்தான் இதற்கு உரியவராவர். ஸாமான்யமாய் ஸ்ரீ ஸுப்பிரஹ்மண்ய ஷடக்ஷர உபதேசம் பெற்றவர்கள் தங்கள் குருமூலமாய் அநுக்ஞை பெற்றுத் தாங்கள் பூஜித்துவரும் மூர்த்தியையோ, அல்லது வேலாயுதத்தையோ, அல்லது யந்த்ரத்தையோ இந்த ஆவரண தேவதைகளின் நாமங்களைக் கொண்டும், அஷ்டோத்தரசதநாமங்களைக் கொண்டும் பூஜிக்கலாம். இங்ஙனம் செய்துகொண்டுவரின் ஸ்ரீ குஹக் கடவுளின் அருளால் ஸற்குரு கிடைக்கப் பெற்று விசேஷக்கிரமத்தில்

ஆராதனம் செய்யும் பாக்கியத்தைப் பெறுவரென்பது திண்ணம்.

இதில் ஆவரண பூஜை மாத்திரம் கூறப்பட்டிருக்கின்றது. இதற்குப் பூர்வாங்கமாய்ச் செய்ய வேண்டிய துவார பூஜை, ஸங்கல்பம், பூசுத்தி, பூதசுத்தி, பீடபூஜை, நியாஸங்கள், கலச, சங்க, விசேஷார்க்ய ஸ்தாபனம் முதலியவற்றைக் குருமுகமாய் அறிதல் அவசியம். ஸ்ரீசக்கிர நவாவரண பூஜை செய்பவர்கள் ஸ்ரீ கிரமத்தின்படியே யாவற்றையும் செய்து நவாவரண பூஜை செய்த பின்னர் இந்த ஆவரண பூஜை செய்தல் அவசியம். வித்யோபாஸகர்கள் கூட இந்த பிரஹ்மண்ய ஷடக்ஷர மந்த்ரோபதேசம் பெற்ற பிறகே இதில் தக்க அதிகார முடையவர்களாவரென்பது அறியத் தக்கது. (இது சிவசாஸனம்).

॥ श्रीः ॥

# ॥ श्रीसुब्रह्मण्याराधनक्रमः ॥

श्रीदेवीं श्रीक्रमोक्तप्रकारेण यथाविधि सावरणामाराध्य ततः बिन्दु-त्रिकोण-षट्कोण-षड्दल-द्वादशदल-त्रिवलय-भूपुरत्र-यात्मके यन्त्रे श्रीसुब्रह्मण्यावरणपूजां कुर्यात् ।

अथाहं बैन्दवे चक्रे सत्यसिंहासने शुभे ।
समासीनं गुहं वन्दे परं ब्रह्मण्यसंज्ञकम् ॥

इति पुष्पाञ्जलिं दत्वा ।

बिन्दौ मूलेन । ब्रह्मण्यश्रीपादुकां पूजयामि तर्पयामि नमः ।

इति दशवारं संतर्प्य ।

अग्नीशासुरवायुकोणेषु मध्ये दिक्षु च षडङ्गार्चनम्—

ॐ ह्रीं श्रीं ऐं क्लीं सौः । ब्रं हृदयाय नमः । हृदयशक्तिश्रीपादुकां पूजयामि तर्पयामि नमः ।

६ ह्मं शिरसे स्वाहा । शिरःशक्तिश्रीपा०

६ ण्यां शिखायै वषट् । शिखाशक्तिश्री०

६ यं कवचाय हुं । कवचशक्तिश्री०

६ नं नेत्रत्रयाय वौषट् । नेत्रशक्तिश्री०

६ मं अस्त्राय फट् । अस्त्रशक्तिश्री०

गुरुमण्डलार्चनं त्रिरेखासु—

६ दिव्यसिद्धमानवौघेभ्यो नमः । इति पुष्पाञ्जलिं दत्वा ।

दिव्यौघः । प्रथमरेखायां—

६ दक्षिणामूर्तिश्री०
६ नारायणश्री०
६ ब्रह्मश्री०
६ सनकश्री०
६ सनातनश्री०
६ सनन्दनश्री०
६ सनत्कुमारश्री०

सिद्धौघः । द्वितीयरेखायां—

६ कश्यपश्री०
६ अत्रिश्री०
६ भरद्वाजश्री०
६ विश्वामित्रश्री०
६ गौतमश्री०
६ जमदग्निश्री०
६ वसिष्ठश्री०
६ शुकश्री०
६ अगस्त्यश्री०
६ ऋभुश्री०
६ निदाघश्री०
६ दत्तात्रेयश्री०

मानवौघः । तृतीयरेखायां—

६ गोरक्षानन्दनाथश्री०
६ मत्स्यानन्दनाथश्री०
६ कोङ्कणानन्दनाथश्री०
६ भोगानन्दनाथश्री०
६ कल्हाटानन्दनाथश्री०
६ वीरेन्द्रानन्दनाथश्री०
६ मलयाचलानन्दनाथश्री०
६ मध्यानन्दनाथश्री०
६ गिरानन्दनाथश्री०
६ परमेष्ठिगुरुश्री०
६ परमगुरुश्री०
६ स्वगुरुश्री०

गन्ध-पुष्प-धूप-दीप-नैवेद्य-ताम्बूल-नीराजनाद्युपचारान् कृत्वा ।

आवरणपूजा ।

सच्चिदानन्द सर्वज्ञ सुब्रह्मण्य शिवात्मक ।
अनुज्ञां देहि मे स्वामिन् परिवारार्चनाय ते ॥

इत्यनुज्ञां लब्ध्वा ।

प्रथमावरणम् (भूपुरत्रयं)

ॐ ह्रीं श्रीं ऐं क्लीं सौः । हं दिक्चक्राय नमः ।

इति पुष्पाञ्जलिं दत्वा ।

प्रथमरेखायाम्—

६ अणिमासिद्धिश्री०
६ महिमासिद्धिश्री०
६ गरिमासिद्धिश्री०
६ लघिमासिद्धिश्री०
६ प्राप्तिसिद्धिश्री०
६ प्राकाम्यसिद्धिश्री०
६ ईशित्वसिद्धिश्री०
६ वशित्वसिद्धिश्री०

द्वितीयरेखायाम्—

६ विवेकश्री०
६ वैराग्यश्री०
६ शमश्री०
६ दमश्री०
६ उपरतिश्री०
६ तितिक्षाश्री०
६ श्रद्धाश्री०
६ समाधानश्री०
६ मुमुक्षुताश्री०
६ श्रवणश्री०
६ मननश्री०
६ निदिध्यासनश्री०

तृतीयरेखायाम्—

६ वीरबाहुश्री०

६ वीरकेसरिश्री०

६ वीरमाहेन्द्रश्री०

६ वीरमहेशश्री०

६ वीरपुरन्दरश्री०

६ वीराक्षश्री०

६ वीरमार्ताण्डश्री०

६ वीरान्तकश्री०

६ वीरधीरश्री०

६ दिक्चक्राधिष्ठितचिदग्निस्वरूपापरिच्छिन्नपरब्रह्मश्री०

मूलेन त्रिः संतर्प्य गन्धाद्युपचारान् कृत्वा।

६ अभीष्टसिद्धिं मे देहि शरणागतवत्सल।

भक्त्या समर्पये तुभ्यं प्रथमावरणार्चनम्॥

इति सामान्यार्घ्यं देवस्य वामहस्ते समर्प्य।

अनेन प्रथमावरणार्चनेन भगवान् सर्वदेवात्मकः श्रीसुब्रह्मण्यः प्रीयताम्। योनिमुद्रया प्रणमेत्।

---

द्वितीयावरणम् (वृत्तत्रयं)

६ सं रं तं गुणचक्राय नमः। इति पुष्पाञ्जलिं दत्वा।

प्रथमवलये—

६ सत्वगुण०

६ रजोगुण०

६ तमोगुण०

६ माया०

द्वितीयवलये—

६ परावाग्देवता०

६ पश्यन्तीवाग्देवता०

६ मध्यमावाग्देवता०

६ वैखरीवाग्देवता०

तृतीयरेखायां—

| | |
|---|---|
| ६ भूतपञ्चक० | ६ ज्ञानेन्द्रियपञ्चक० |
| ६ गुणपञ्चक० | ६ कर्मेन्द्रियपञ्चक० |

६ सं रं तं गुणचक्राधिष्ठितगुणातीतस्वरूपनिस्त्रैगुण्यपरब्रह्मश्री०

मूलेन त्रिः संतर्प्य गन्धाद्युपचारान् कृत्वा

६ अभीष्टसिद्धिं मे देहि शरणागतवत्सल ।

भक्त्या समर्पये तुभ्यं द्वितीयावरणार्चनम् ॥

इति सामान्यार्घ्यं देवस्य वामहस्ते समर्प्य । अनेन द्वितीयावरणार्चनेन भगवान्+प्रीयताम् । योनिमुद्रया प्रणमेत् ।

---

तृतीयावरणम् । (द्वादशदलकमलं)

६ कं कालचक्राय नमः । इति पुष्पाञ्जलिं दत्वा ।

| | |
|---|---|
| ६ कलाश्री० | ६ मास० |
| ६ काष्ठा० | ६ ऋतु० |
| ६ घटिका० | ६ अयन० |
| ६ मुहूर्त० | ६ संवत्सर० |
| ६ दिवस० | ६ युग० |
| ६ पक्ष० | ६ काल० |

६ कालचक्राधिष्ठितकालकालस्वरूप नित्यपरब्रह्मश्रीपा०+नमः ।

मूलेन त्रिः संतर्प्य गन्धाद्युपचारान् कृत्वा

६ अभीष्टसिद्धिं मे देहि शरणागतवत्सल ।

भक्त्या समर्पये तुभ्यं तृतीयावरणार्चनम् ॥

सामान्यार्घ्यं देवस्य वामहस्ते समर्प्य । अनेन तृतीयावरणार्चनेन भगवान् + प्रीयताम् । योनिमुद्रया प्रणमेत् ।

---

## तुरीयावरणम् (षड्दळपद्मं)

६ सं सर्वज्ञचक्राय नमः । इति पुष्पाञ्जलिं दत्वा ।

| | |
|---|---|
| ६ सर्वज्ञशक्ति० | ६ भूलोक० |
| ६ नित्यतृप्तशक्ति० | ६ अग्निमण्डल० |
| ६ अनादिबोधशक्ति० | ६ अन्तरिक्ष० |
| ६ नित्यमलुप्तशक्ति० | ६ सूर्यमण्डल० |
| ६ स्वतन्त्रशक्ति० | ६ स्वर्ग० |
| ६ अनन्तबोधशक्ति० | ६ सोममण्डल० |

६ सं सर्वज्ञचक्राधिष्ठितभूमास्वरूपसर्वैश्वर्यप्रदपरब्रह्मश्री०

मूलेन त्रिः संतर्प्य गन्धाद्युपचारान् कृत्वा ।

६ अभीष्टसिद्धिं मे देहि शरणागतवत्सल ।
भक्त्या समर्पये तुभ्यं तुरीयावरणार्चनम् ॥

सामान्यार्घ्यं देवस्य वामहस्ते समर्प्य । अनेन तुरीयावरणार्चनेन भगवान् + प्रीयताम् । योनिमुद्रया प्रणमेत् ।

---

## पञ्चमावरणम् (षट्कोणचक्रं)

६ ऐं वाग्भवचक्राय नमः । इति पुष्पाञ्जलिं दत्वा ।

६ प्रज्ञानं ब्रह्म । ऋग्वेदमयमहावाक्यश्रीपादुकां + नमः ।

६ अहं ब्रह्मास्मि । यजुर्वेदमयमहावाक्यश्रीपादुकां + नमः ।

६ तत्वमसि । सामवेदमयमहावाक्यश्रीपादुकां + नमः ।

६ अयमात्मा ब्रह्म । अथर्ववेदमयमहावाक्यश्रीपादुकां + नमः ।

६ शीक्षाशास्त्रश्री०

६ कल्पशास्त्रश्री०

६ व्याकरणशास्त्रश्री०

६ छन्दःशास्त्रश्री०

६ ज्योतिश्शास्त्रश्री०

६ निरुक्तशास्त्रश्री०

६ ॐ ह्रीं नमः शिवाय । शैवदर्शनश्री०

६ ॐ नमो नारायणाय । वैष्णवदर्शन०

६ ॐ श्रीं ह्रीं श्रीं । शाक्तदर्शन०

६ ॐ गं गणपतये नमः । गाणापत्यदर्शन०

६ ॐ ह्रीं घृणिः सूर्य आदित्यों । सौरदर्शन०

६ ॐ भं भैरवाय नमः । कापालिकदर्शन०

६ परशिलापीठ०

६ जयन्तीपीठ०

६ शुद्धचित्तपीठ०

६ पूर्णगिरिपीठ०

६ पूर्णफलपीठ०

६ वनगिरिपीठ०

६ ऐं । वाग्भवचक्राधिष्ठितवाचामगोचरस्वरूपपरब्रह्मश्री०

मूलेन त्रिः संतर्प्य गन्धपुष्पाद्युपचारान् कृत्वा ।

६ अभीष्टसिद्धिं मे देहि शरणागतवत्सल ।

भक्त्या समर्पये तुभ्यं पञ्चमावरणार्चनम् ॥

सामान्यार्घ्यं देवस्य वामहस्ते समर्प्य । अनेन पञ्चमावरणार्चनेन भगवान् + प्रीयताम् । योनिमुद्रया प्रणमेत् ।

## षष्ठावरणम् (त्रिकोणं)

६ क्ष्रीं । शक्तिचक्राय नमः । इति पुष्पाञ्जलिं दत्वा ।

६ अं । अकारात्मक- इच्छाशक्तिस्वरूपवाणीसमेतब्रह्म०

६ उं । उकारात्मकज्ञानशक्तिस्वरूपवैष्णवीसमेतविष्णु०

६ मं । मकारात्मकक्रियाशक्तिस्वरूपरुद्राणीसमेतरुद्र०

६ ॐ । ओंकारात्मकपराशक्तिस्वरूपमायाविशिष्टकारणेश्वर०

६ सत्स्वरूपविद्याशक्ति०

६ चित्स्वरूपविद्याशक्ति०

६ आनन्दस्वरूपविद्याशक्ति०

६ क्ष्रीं शक्तिचक्राधिष्ठितविद्यास्वरूपपरब्रह्मश्री०

मूलेन त्रिः संतर्प्य । गन्धाद्युपचारान् कृत्वा ।

६ अभीष्टसिद्धिं मे देहि शरणागतवत्सल ।
भक्त्या समर्पये तुभ्यं षष्ठाख्यावरणार्चनम् ॥

सामान्यार्घ्यं देवस्य वामहस्ते समर्प्य । अनेन षष्ठावरणार्चनेन भगवान् + प्रीयताम् । योनिमुद्रया प्रणमेत् ।

## सप्तमावरणम् (बिन्दुः)

६ परब्रह्मचक्राय नमः । इति पुष्पाञ्जलिं दत्वा ।

६ मूलं । ब्रह्मण्यश्रीपादुकां + नमः ।

६ परब्रह्मचक्राधिष्ठितपरब्रह्मश्रीपादुकां पूजयामि तर्पयामि नमः ।

मूलेन त्रिः संतर्प्य । गन्धाद्युपचारान् कृत्वा ।

६ अभीष्टसिद्धिं मे देहि शरणागतवत्सल ।
भक्त्या समर्पये तुभ्यं सप्तमावरणार्चनम् ॥

सामान्यार्घ्यं देवस्य वामहस्ते दत्वा । अनेन सप्तमावरणार्चनेन भगवान् सर्वदेवात्मकः श्रीसुब्रह्मण्यः प्रीयताम् । योनिमुद्रया प्रणमेत् ।

ततः श्रीसुब्रह्मण्यसिद्धनामाष्टोत्तरशतनामानि संपूज्य । धूप-दीप-नैवेद्य-ताम्बूल-नीराजन-मन्त्रपुष्पाणि समर्पयेत् ।

॥ इति श्रीसुब्रह्मण्याराधनक्रमः संपूर्णः ॥

॥ इति शिवम् ॥

---

## ॥ श्रीसुब्रह्मण्यसिद्धनामाष्टोत्तरशतनामावलिः ॥

ॐ ह्रीं सुब्रह्मण्याय नमः ।
ज्ञानशक्तये नमः ।
अचिन्त्याय नमः ।
दहरालयाय नमः ।
चिच्छिवाय नमः ।
चिद्घनाय नमः ।
चिदाकारमहाद्वीपमध्यदेशसदालयाय नमः ।
चिदब्धिमथनोत्पन्नचित्सारमणिमण्डलाय नमः ।

ॐ ह्रीं चिदानन्दमहासिन्धुमध्यरत्नशिखामणये नमः ।
विज्ञानकोशविलसदानन्दामृतमण्डलाय नमः । (१०)
वाचामगोचरानन्तशुद्धचैतन्यविग्रहाय नमः ।
मूलकन्दस्थचिद्देशमहाताण्डवपण्डिताय नमः ।
षट्कोणमार्गविलसत्परमण्डलमण्डिताय नमः ।
द्वादशारमहापद्मस्थिताचिद्व्योमभासुराय नमः ।
त्रिकोणाख्यमहापीठस्थिताचिद्बिन्दुनायकाय नमः ।
बिन्दुमण्डलमध्यस्थचिद्विलासप्रकाशकाय नमः ।
षट्कोणमन्दिरोद्भासिमध्यस्तम्भशिरोमणये नमः ।
प्रथमाक्षरनिर्दिष्टपरमार्थार्थविग्रहाय नमः ।
अकारादिक्षकारान्तमातृकाक्षरसंगताय नमः ।
अकाराख्यप्रकाशात्ममहालक्ष्यार्थविग्रहाय नमः । (२०)
हकाराख्यविमर्शात्ममहालक्ष्यार्थविग्रहाय नमः ।
ग्रन्थित्रयमहाभेदचतुराय नमः ।
सद्गुरवे नमः ।
हृदयाम्बुजमध्यस्थविरजव्योमनायकाय नमः ।
शान्ताद्रिनिलयाय नमः ।
अखण्डाकारकज्ञानलक्षणाय नमः ।
सजातीयविजातीयस्वगतभेदरहिताय नमः ।
ब्रह्मविद्यास्वरूपहैमवतीतनूजाय नमः ।
चिदग्निसंभूताय नमः ।
भूमानन्दपरिपूर्णाचलविराजिताय नमः । (३०)

ॐ ह्रीं महावाक्योपदेष्ट्रे नमः ।
शिवगुरवे नमः ।
मूलाधारमुखोत्पन्नब्रह्मरन्ध्रचिदालयाय नमः ।
मध्यनाडीमहामार्गस्थितमण्डलमध्यगाय नमः ।
हंसमार्गैकनिरतज्ञानमण्डलचिद्रसाय नमः ।
सदोदितमहाप्रज्ञाकाराय नमः ।
सहस्रारकमलान्तस्थबिन्दुकूटमहागुरवे नमः ।
स्वात्मन्यारोपितसमस्तजगदाधाराय नमः ।
सर्वाधिष्ठानचिन्मात्रस्थानमध्यविराजिताय नमः ।
सर्वोपनिषदुद्घुष्टमहाकीर्तिधराय नमः । (४०)
स्वसाम्राज्यसुखासीनस्वयंज्योतिःस्वरूपाय नमः ।
कार्यसहितमायाविध्वंसकाय नमः ।
सर्ववेदान्तसिद्धान्तमहासाम्राज्यदीक्षिताय नमः ।
सालम्बननिरालम्बवृत्तिमध्यस्थरूपकाय नमः ।
मोक्षलक्ष्मीप्रदात्रे नमः ।
शुद्धचैतन्यकान्तारसिद्धाय नमः ।
भानुकूटप्रतीकाशचित्पर्वतशिखामणये नमः ।
भावाभावकलातीतशून्यग्राममहेश्वराय नमः ।
कल्पितपञ्चकृत्याधिपतये नमः ।
ब्रह्मविद्यामयग्रामचिदालयमहाप्रभवे नमः । (५०)
प्रत्यग्भूतमहामौनगोचराय नमः ।
शुद्धचिद्रसाय नमः ।

ॐ ह्रीं हृदयग्रन्थिभेदविद्याविशारदाय नमः ।
कामाद्यरिषड्वर्गनाशकाय नमः ।
सर्वज्ञत्वादिगुणमूर्तीकृतषडाननाय नमः ।
कर्मब्रह्मस्वरूपवेदविलसितचरणाय नमः ।
अत्यन्तनिर्मलाकारचैतन्यगिरिमध्यगाय नमः ।
अद्वैतपरमानन्दचिद्विलासमहानिधये नमः ।
मण्डलत्रयभासकाय नमः ।
अनेककोटिब्रह्माण्डधारिणे नमः । (६०)
सर्वात्मकाय नमः ।
तत्वमस्यादिमहावाक्यलक्ष्यार्थस्वरूपाय नमः ।
अविमुक्तमहापीठस्थितचिद्रूपविग्रहाय नमः ।
अमितानन्दबोधान्तनादान्तस्थितमण्डलाय नमः ।
अखण्डशुद्धचैतन्यस्वरूपाय नमः ।
लोकालोककलैकमत्यपरमार्थस्वरूपाय नमः ।
आदिमध्यान्तरहितब्रह्मानन्दनिधये नमः ।
आधारमार्गसीमान्तवासिने नमः ।
निस्तरङ्गसुखार्णवाय नमः ।
अवाङ्मनसगोचराय नमः । (७०)
नित्यशुद्धबुद्धमुक्तसत्यस्वरूपाय नमः ।
चिद्दीपमङ्गलज्योतिःस्वरूपाय नमः ।
षट्चक्रनगरविभवेश्वराय नमः ।
सकललोकैकनेत्रे नमः ।

ॐ ह्रीं निष्प्रपञ्चाय नमः ।
निराधाराय नमः ।
सकलाधारस्वरूपाय नमः ।
भक्तमानसरञ्जकाय नमः ।
बाह्यानुविद्धसमाधिनिष्ठात्मगोचरवृत्तिस्वरूपदेवसेना-
समेताय नमः ।
आन्तरानुविद्धसमाधिनिष्ठात्मगोचरवृत्तिस्वरूप-
वल्लीपतये नमः । (८०)
अनाहतमहाचक्रास्थिताय नमः ।
अवस्थात्रयसाक्षिणे नमः ।
सहस्रकोटितपनसंकाशाय नमः ।
संसारमायादुःखौघभेषजाय नमः ।
शुद्धचित्तस्वरूपमयूराधिष्ठानाय नमः ।
चराचरस्थूलसूक्ष्मकल्पकाय नमः ।
ब्रह्मादिकीटपर्यन्तव्यापकाय नमः ।
समस्तलोकगीर्वाणशरण्याय नमः ।
सनकादिसमायुक्तप्रज्ञानघनविग्रहाय नमः ।
अनन्तवेदवेदान्तसंवेद्याय नमः । (९०)
धर्मार्थकामकैवल्यदायकाय नमः ।
सकलवेदसारप्रणवलक्ष्यार्थनिजस्वरूपाय नमः ।
अप्राकृतमहादिव्यपुरुषाय नमः ।
अज्ञानतिमिरध्वान्तभास्कराय नमः ।

ॐ ह्रीं अव्ययानन्दविज्ञानसुखदाय नमः ।

अचिन्त्यदिव्यमहिमारञ्जिताय नमः ।

परानन्दस्वरूपार्थबोधकाय नमः ।

षडम्बुरुहचक्रान्तस्फूर्तिसौदामनीप्रभाय नमः ।

षड्विधैक्यानुसंधानपरहृद्व्योमसंस्थिताय नमः ।

निस्त्रैगुण्यमहामार्गगामिने नमः । (१००)

नित्यपूर्णचिदाकाशस्थिताचिन्मण्डलाय नमः ।

कार्यकारणनिर्मुक्ताय नमः ।

नादबिन्दुकलातीताय नमः ।

शिवाब्धिमथनोत्पन्नानन्दपीयूषविग्रहाय नमः ।

परिपूर्णपरानन्दप्रज्ञानघनलक्षणाय नमः ।

अखण्डैकरसस्फूर्तिप्रवाहाश्रयाय नमः ।

नामरूपविवर्जिताय नमः ।

श्रीपरब्रह्मणे नमः । (१०८)

इति श्रीमत्परमहंसपरिव्राजकाचार्यवर्य श्रीमदात्मानन्दनाथप्रणीत-
ब्रह्मण्यसिद्धनामाष्टोत्तरशतनामावलिः ।

---

## BOOKS BY THE SAME AUTHOR

—:o:—

| | | Rs. | A. |
|---|---|---|---|
| | **Nagari** | | |
| 1. | Srividya Saparya Paddhati | | |
| | Single page Edition, Calico-bound ... | 3 | 8 |
| | Double-page ,, Stiff board bound ... | 2 | 0 |
| | **English** | | |
| 2. | Srividya Saparya Vasana ... | 3 | 0 |
| | **Tamil** | | |
| 3. | Srividya Saparya Vasana ... | [illegible] | 0 |
| 4. | Varivasya Rahasyam ... | 1 | 0 |
| 5. | Lalita Trisati Bhashyam ... | 1 | 0 |
| 6. | Srinagara Vimarsam ... | 0 | 12 |
| 7. | Gurutatva Vimarsam ... | 0 | 5 |
| 8. | Maneesha Panchakam ... | [illegible] | 5 |
| 9. | Gnanaprakasam—A Philosophic Drama ... | 0 | 10 |
| 10. | Lalitopakhyana Vimarsam ... | 0 | 4 |
| 11. | Subrahmanya Tattvam ... | 1 | 8 |
| 12. | Srividya Nityahnika (Nagari) | | |

---

*Copies can be had of :—*

1. Sri Brahma Vidya Vimarsini Sabha,
   178, Lloyds Road, Royapettah, Madras.
2. Sri Balamanorama Press, Mylapore, Madras.